# தமிழ் மணித் திரட்டு



எட்டாம்
வகுப்பிற்குரியது






...கோபால்பிள்ளை
பதிப்பாளர்
...ரி
2/27, பிராட்வே
சென்னை - 1

# தமிழ் மணித் திரட்டு



## எட்டாம் வகுப்பிற்குரியது

[புதிய பாடத்திட்டப்படி அமைந்தது]

[Used D/Demy White Printing 32 lbs.]



தொகுப்பாளர்கள் :
வித்துவான், M. கோவிந்தசாமி தேவர்,
தமிழ்ப் பேராசிரியர், ஜமால் முகம்மது கல்லூரி,
திருச்சிராப்பள்ளி.

வித்துவான், P. N. சுப்பராம சர்மா,
அர்ச். சூசையப்பர் உயர்நிலைப்பள்ளி
திருச்சிராப்பள்ளி.







T. G. கோபால் பிள்ளை
பதிப்பாளர்

தெப்பக்குளம் திருச்சிராப்பள்ளி | 2/27, பிராட்வே ஜி. டி., சென்னை

1961

[விலை ரூ. 2

முதற் பதிப்பு—நவம்பர், 1958
திருந்திய பதிப்பு—செப்டம்பர், 1961




# முகவுரை

சென்னை அரசினர் 23-4-1958இல் எட்டாம் வகுப்பிற்கென வெளியிட்டுள்ள புதிய பாடத்திட்டத்தைத் தழுவித் தமிழ் மணித் திரட்டு என்னும் இந்நூல் தொகுக்கப்பட்டுள்ளது.

இதில் எளிய சுவை நிரம்பிய செய்யுள், உரைநடைப் பகுதிகள் ஆய்ந்தெடுத்துச் சேர்க்கப்பட்டுள்ளன. அவைகள், படிக்கும் இளைஞர்களின் உள்ளத்திற்கு உற்சாகத்தை ஊட்டி அவர்களது தமிழார்வத்தையும் அறிவையும் மிகுவிக்கும் என்பது எமது தூய எண்ணம்.

இந்நூலில் வந்துள்ள செய்யுட் பகுதிகள் எல்லாம் தொடக்கத்தில் நூலின் சிறப்பு, நூலாசிரியரின் வரலாற்றுக் குறிப்பு இவைகளையும், இறுதியின்கண் அருஞ்சொற்பொருள், வினாக்கள், இன்றியமையாத இலக்கணக் குறிப்புகள் ஆகியவற்றையும் பெற்றுள்ளன. உரைநடைப் பகுதியில் ஒவ்வொரு பாடத்தின் இறுதியிலும் அருஞ்சொற்பொருளும், இலக்கணப் பயிற்சியும் கொடுக்கப்பட்டுள்ளன.

இந்நூலில் பல பேரறிஞர்களது கட்டுரைகள், அன்னார் இசைவு பெற்றுச் சேர்க்கப்பட்டுள்ளன. அவர்களுடைய பேரன்பிற்கும், பெருந்தன்மைக்கும் நாங்கள் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

இந்நூல் தற்கால மாணவர்களின் மனப்பாங்கிற்கு ஏற்ற முறையில் அமைந்திருப்பதை, இதனைக் கண்ணுறும் தமிழாசிரியர்களும், பள்ளிக்கூடத் தலைவர்களும் நன்குணர்வர். அவர்கள் இந்த நூலைத் தமது பள்ளிக்கூடங்களில் பாட புத்தகமாக வைத்து எமது முயற்சிக்கு ஆக்கம் தருவார்களென நாங்கள் பெரிதும் நம்புகிறோம்.



இங்ஙனம்,
தொகுப்பாளர்கள்.

Kabeer Printing Works, Madras (4541)

# உள்ளுறை

## செய்யுட் பகுதி

## உரைநடைப் பகுதி

# நாட்டு வணக்கம்

ஜனகண மன அதி நாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா

பஞ்சாப ஸிந்து குஜராத மராட்டா
த்ராவிட உத்கல வங்கா

விந்திய ஹிமாசல யமுனா கங்கா
உச்சல ஜலதி தரங்கா

தவசுப' நாமே-ஜாகே
தவசுப ஆசிஷ மாகே
காயே தவ ஜய காதா

ஜன கண மங்கள தாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா

ஜயஹே! ஜயஹே! ஜயஹே!
ஜய ஜய ஜய ஜயஹே!

—மகாகவி இரவீந்திரநாத தாகூர்

## பொருள்

இந்தியாவின் சுக துக்கங்களை நிர்ணயிக்கிற நீதான் மக்கள் எல்லாருடைய மனத்திலும் ஆட்சி செலுத்துகிறாய்.

நின் திருநாமம், பஞ்சாபையும் ஸிந்துவையும் குஜராத்தையும் மஹாராஷ்டிரத்தையும் திராவிடத்தையும் ஒரிஸாவையும் வங்காளத்தையும் உள்ளக் கிளர்ச்சியடையச் செய்கிறது.

அது விந்திய ஹிமாலய மலைகளில் எதிரொலிக்கிறது; யமுனை கங்கை நதிகளின் இன்ப நாதத்தில் கலக்கிறது; இந்தியக் கடலலைகளால் ஜபிக்கப்படுகிறது.

அவை நின் ஆசியை வேண்டுகின்றன; நின் புகழைப் பாடுகின்றன.

இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற உனக்கு

வெற்றி! வெற்றி!! வெற்றி!!!

# I. வாழ்த்து

## 1. கடவுள் வாழ்த்து

கீழ்வரும் கடவுள் வாழ்த்து கம்பராமாயணத்தில் உள்ளது. அது கம்பரால் இயற்றப்பட்டது.

கம்பர், சோழநாட்டில் திருவழுந்தூரில் பிறந்தவர். உவச்சர் குலத்தினர். ஆதித்தன் என்பவர் இவரது தந்தை என்பர். இளமையிலேயே இவர் தம் பெற்றோரை இழந்தார். திருவெண்ணெய் நல்லூர்ச் சடையப்ப வள்ளலால் ஆதரிக்கப் பெற்றுக் கல்வியில் சிறந்தவரானார். இவர் வைணவ சமயத்தைத் தழுவியவர். கம்பராமாயணத்தைத் தவிர, இவர் ஏரெழுபது, சரசுவதி அந்தாதி, திருக்கை வழக்கம் முதலிய நூல்களையும் இயற்றியுள்ளார். இவரது காலம் கி. பி. 9ஆம் நூற்றாண்டு என்றும், கி. பி. 12ஆம் நூற்றாண்டு என்றும் சொல்வர்.

உலகம் யாவையும் தாமுள வாக்கலும்
நிலை பெறுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகி லாவிளை யாட்டுடை யார் ;அவர்
தலைவர் ; அன்னவர்க்கே சரண் நாங்களே. 1

—கம்பர்.

பின்வரும் கடவுள் வாழ்த்தைப் பாடியவர் தாயுமானவர்.

இவர் சோழநாட்டில் திருமறைக்காடு என்னும் தலத்தில் தோன்றியவர். இவரது தந்தையார் கேடிலியப்ப பிள்ளை என்பவர். இவர் சைவவேளாள மரபைச் சார்ந்தவர். இவர் தந்தையார் அக்காலத்தில் திருச்சியை ஆண்ட விசயரகுநாத சொக்கலிங்க நாயக்க மன்னரிடம் கணக்கெழுதும் அலுவலில் இருந்தார். தந்தைக்குப் பிறகு, தாயுமானவரும் அந்த வேலையை மேற்கொண்டார். சிறிது காலம் இல்லறம் நடத்தினார். பிறகு துறவை நாடி மௌன குரு என்பவரிடம் உபதேசம் பெற்றுத் துறவியானார். இவர், அக்காலத்தில் பாடிய பாடல்கள் 'தாயுமானவர் பாடல்' என்னும் பெயரால் வழங்கி வருகின்றன. இவர் கி. பி. 1659இல் உலக வாழ்வைத் துறந்தார்.

குன்றி டாத கொழுஞ்சுடரே! மணி
மன்று ளாடிய மாணிக்கமே! உனை
அன்றி யார்துணை யாருற வார் கதி?
என்று நீயே இன்னருள் செய்வதே? 2

—தாயுமானவர்.

## 2. தமிழ் வாழ்த்து

இந்த வாழ்த்து, தண்டியலங்காரம் என்னும் அணி யிலக்கண நூலில் காணப்படுகிறது. இதைப் பாடியவர் அந் நூலாசிரிய ராகிய தண்டியே என்பர். மற்றுஞ் சிலர் வேறொரு தண்டி என்னும் பெயரினர் பாடினர் என்பர். இன்னும் சிலர், கம்பரது மகன் அம்பிகாபதியால் இது பாடப் பெற்றதாகும் என்றும் கூறுவர்.

ஓங்க லிடைவந் துயர்ந்தோர் தொழவிளங்கி
ஏங்கொலிநீர் ஞாலத் திருளகற்றும்—ஆங்கவற்றுள்
மின்னேர் தனியாழி வெங்கதிரொன் றேனையது
தன்னே ரிலாத தமிழ். 3

—தண்டியலங்கார மேற்கோள்.

## 3. நாட்டு வாழ்த்து

பின்வரும் நாட்டு வாழ்த்தைப் பாடியவர் தேசீய கவி பாரதியார். அவர் மறுமலர்ச்சிப் புலவர்.

பாரதியார் எட்டையபுரத்தில் சின்னசாமி அய்யருக்கும் இலட்சுமி அம்மாளுக்கும் புதல்வராகத் தோன்றினர். இளமை யிலேயே கவிபாடும் திறமைபெற்ற இவர், இளைஞர் முதல் முதிய வர் வரையில் யாவரும் படித்துணரத் தகுந்த பல பாடல்களைப் பாடியுள்ளார். இவர் 1882இல் பிறந்து 1921இல் காலமானர்.

எந்தையும் தாயும் மகிழ்ந்து குலாவி
இருந்தது மிந்நாடே—அதன்
முந்தைய ராயிர மாண்டுகள் வாழ்ந்து
முடிந்தது மிந்நாடே—அவர்

சிந்தையி லாயிர மெண்ணம் வளர்ந்து
சிறந்தது மிந்நாடே—இதை
வந்தனே கூறி மனதி லிருத்தியென்
வாயுற வாழ்த்தேனே—(இதை) 4

—சி. சுப்பிரமணிய பாரதியார்.

### அருஞ்சொற்பொருள்

1. உள வாக்கல் - உள்ளனவாகச் செய்தல், படைத்தல்; நிலை பெறுத்தல் - காத்தல், நீக்கல் - அழித்தல், அலகு இலா - கணக்கில் லாத, அன்னவர்க்கே - அத் தன்மையர்க்கே, சரண் - அடைக்கலம்.

2. குன்றிடாத - குறையாத, மணி மன்றுள் - அழகிய ஞான அரங்கில், உறவு - உறவினர், கதி - புகலிடம், இன்னருள் செய்வது என்று எனக் கூட்டுக.

3. ஓங்கல் - மலை, அது பொதியமலையைக் குறிப்பது; ஏங்கு ஒலி - மிக்க ஒலி, இருள் - இருட்டு, அறியாமை; மின் - ஒளி, வெங் கதிர் - சூரியன்.

4. முந்தையர் - முன்னோர், முடிந்ததும் - இறந்ததும்.

### வினாக்கள்

1. கடவுள் இயற்றும் தொழில்கள் யாவை?

2. தாயுமானவர் மன்றுளாடிய இறைவனை எவ்வாறு பாராட்டு கிறார்?

3. பாரதியார் இந்த நாட்டின் பெருமையைப் பற்றிக் கூறுவது யாது?

4. தாயுமானவர், பாரதியார்—இவர்களது வரலாற்றுக் குறிப்புத் தருக.

# II. அறவுரை

## சங்க காலம்

## 1. திருக்குறள்

சிறந்த வெண்பாக்களால் ஆகிய நூல் ஆதலால், இது திருக்குறள் எனப் பெயர் பெற்றது. திரு என்பது அடை மொழி. குறள் என்பது குறுகிய இரண்டு அடிகளை உடைய ஒரு வகை வெண்பா ஆகும். இத் திருக்குறள் 1330 குறட்பாக்களை உடையது. பால், இயல், அதிகாரம் ஆகிய பகுப்புக்களைக் கொண்டது. இது அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்று பொருள்களையும் உணர்த்துவதால், முப்பால் எனவும், எல்லாக் காலத்திற்கும், இடத்திற்கும், சமயத்திற்கும் பொதுவானதாகையால், பொது மறை எனவும் பெயர் பெறும். இது இலத்தீன் முதலிய மேனாட்டு மொழிகள் பலவற்றுள் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. பதினெண் கீழ்க் கணக்கைச் சேர்ந்தது.

திருக்குறளை இயற்றியவர் திருவள்ளுவர். அவர் வரலாறு நன்கு அறியப்படுவதற்கில்லை. அவர் மயிலாப்பூரில் பிறந்தவர்; மதுரையில் வாழ்ந்தவர். அவர் வாசுகி அம்மையார் என்னும் கற்பரசியாரை மணந்து இல்லறம் நடத்தியவர். அவர் காலம் கி. பி. இரண்டாம் நூற்றுண்டு.

கடவுள் வாழ்த்து

வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்
கியாண்டு மிடும்பை யில. 1

வான் சிறப்பு

விசும்பிற் றுளிவீழி னல்லான்மற் றுங்கே
பசும்புற் றலைகாண் பரிது. 2

நீத்தார் பெருமை

இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்டார்
பெருமை பிறங்கிற் றுலகு. 3

### அறன் வலியுறுத்தல்

சிறப்பீனுஞ் செல்வமு மீனு மறத்தினூஉங்
காக்க மெவனோ வுயிர்க்கு. 4

ஒல்லும் வகையா னறவினை யோவாதே
செல்லும்வா யெல்லாஞ் செயல். 5

### இல்வாழ்க்கை

அறத்தாற்றி னில்வாழ்க்கை யாற்றிற் புறத்தாற்றிற்
போஒய்ப் பெறுவ தெவன். 6

### வாழ்க்கைத் துணைநலம்

பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்
திண்மையுண் டாகப் பெறின். 7

சிறைகாக்குங் காப்பெவன் செய்யு மகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை. 8

### புதல்வரைப் பெறுதல்

தம்மிற்றம் மக்க ளறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லா மினிது. 9

### அன்புடைமை

அறத்திற்கே யன்புசார் பென்ப வறியார்
மறத்திற்கு மஃதே துணை. 10

### விருந்தோம்பல்

இருந்தோம்பி யில்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு. 11

### இனியவை கூறல்

இன்சொலா லீர மளைஇப் படிறிலவாஞ்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல். 12

அல்லவை தேய வறம்பெருகும் நல்லவை
நாடி யினிய சொலின். 13

செய்ந்நன்றியறிதல்

செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும்
வானகமு மாற்ற லரிது. 14

நடுவு நிலைமை

கெடுவல்யா னென்ப தறிகதன் னெஞ்சம்
நடுவொரீஇ யல்ல செயின். 15

அடக்க முடைமை

காக்க பொருளா அடக்கத்தை ஆக்கம்
அதனினூங் கில்லை உயிர்க்கு. 16

எல்லார்க்கு நன்றும் பணித லவருள்ளுஞ்
செல்வர்க்கே செல்வந் தகைத்து. 17

பொறையுடைமை

ஒறுத்தாரை யொன்றாக வையாரே வைப்பர்
பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து. 18

அழுக்காறாமை

அழுக்காற்றி னல்லவை செய்யா ரிழுக்காற்றின்
ஏதம் படுபாக் கறிந்து. 19

வெஃகாமை

அஃகாமை செல்வத்திற் கியாதெனின் வெஃகாமை
வேண்டும் பிறன்கைப் பொருள். 20

ஒப்புரவறிதல்

ஒப்புரவி னால்வருங் கேடெனி னஃதொருவன்
விற்றுக்கோட் டக்க துடைத்து. 21

ஈகை

வறியார்க்கொன் றீவதே யீகைமற் றெல்லாங்
குறியெதிர்ப்பை நீர துடைத்து. 22

இலனென்னு மெவ்வ முரையாமை யீதல்
குலனுடையான் கண்ணே யுள. 23

அற்ரு ரழிபசி தீரத்த லஃதொருவன்
பெற்ருன் பொருள்வைப் புழி. 24

புகழ்

ஒன்ரு உலகத் துயர்ந்த புகழல்லாற்
பொன்ருது நிற்பதொன் றில். 25

வசையென்ப வையத்தார்க் கெல்லா மிசையென்னு
மெச்சம் பெருஅ விடின். 26

புலான் மறுத்தல்

தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பா
னெங்கன மாளு மருள். 27

தவம்

வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ
மீண்டு முயலப் படும். 28

கூடாவொழுக்கம்

மழித்தலு நீட்டலும் வேண்டா வுலகம்
பழித்த தொழித்து விடின். 29

வாய்மை

வாய்மை யெனப்படுவ தியாதெனின் யாதொன்றுந்
தீமை யிலாத சொலல். 30

வெகுளாமை

தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க காவாக்காற்
றன்னையே கொல்லுஞ் சினம். 31

இன்ஞ செய்யாமை

நோயெல்லா நோய்செய்தார் மேலவா நோய்செய்யார்
நோயின்மை வேண்டு பவர். 32

நிலையாமை

நெருந லுளனெருவ னின்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு. 33

மெய்யுணர்தல்

காமம் வெகுளி மயக்க மிவைமூன்ற
னுமங் கெடக்கெடு நோய். 34

ஊழ்

நன்ருங்கா னல்லவாக் காண்பவ ரன்ருங்கா
லல்லற் படுவ தெவன். 35

இறைமாட்சி

காட்சிக் கெளியன் கடுஞ்சொல்ல னல்லனேல்
மீக்கூறு மன்ன னிலம். 36

கல்வி

எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டுங்
கண்ணென்ப வாழு முயிர்க்கு. 37

உவப்பத் தலைக்கூடி யுள்ளப் பிரித
லனைத்தே புலவர் தொழில். 38

கல்லாமை

கல்லா வொருவன் றகைமை தலைப்பெய்து
சொல்லாடச் சோர்வு படும். 39

விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல்
கற்ருரோ டேனை யவர்.

கேள்வி

நுணங்கிய கேள்வியர் அல்லார் வணங்கிய
வாயின ராத லரிது. 41

அறிவுடைமை

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப,தறிவு. 42

எவ்வ துரைவ துலக'முலகத்தோ
டவ்வ துறைவ தறிவு. 43

பெரியாரைத் துணைக்கோடல்

தம்மிற் பெரியார் தமரா வொழுகுதல்
வன்மையு ளெல்லாந் தலை. 44

இடிப்பாரை யில்லாத வேமரா மன்னன்
கெடுப்பா ரிலானுங் கெடும். 45

தெரிந்துசெயல்வகை

ஆக்கங் கருதி முதலிழக்குஞ் செய்வினை
யூக்கா ரறிவுடை யார். 46

நன்ருற்ற லுள்ளும் தவறுண் டவரவர்
பண்பறிந் தாற்ருக் கடை. 47

வலியறிதல்

நுனிக்கொம்ப ரேறினா ரஃதிறந் தூக்கி
னுயிர்க்கிறுதி யாகி விடும். 48

ஆகா றளவிட்டி தாயினுங் கேடில்லை
போகா றகலாக் கடை. 49

காலமறிதல்

அருவினை யென்ப வுளவோ கருவியாற்
கால மறிந்து செயின். 50

கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த விடத்து. 51

இடனறிதல்

அஞ்சாமை யல்லாற் றுணைவேண்டா வெஞ்சாமை
யெண்ணி யிடத்தாற் செயின். 52

தெரிந்து வினையாடல்

அன்பறிவு தேற்ற மவாவின்மை யிந்நான்கு
நன்குடையான் கட்டே தெளிவு. 53

சுற்றந்தழால்

பற்றற்ற கண்ணும் பழைமைபா ராட்டுதல்
சுற்றத்தார் கண்ணே யுள. 54

பொச்சாவாமை

அச்ச முடையார்க் கரணில்லை யாங்கில்லை
பொச்சாப் புடையார்க்கு நன்கு. 55

செங்கோன்மை

கொலேயிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
களேகட் டதனொடு நேர். 56

வெருவந்த செய்யாமை

அருஞ்செவ்வி யின்னு முகத்தான் பெருஞ்செல்வம்
பேஎய்கண் டன்ன துடைத்து. 57

கண்ணோட்டம்

கண்ணோட்டத் துள்ள துலகிய லஃதிலா
ருண்மை நிலக்குப் பொறை. 58

ஊக்கமுடைமை

உரமொருவற் குள்ள வெறுக்கையஃ தில்லார்
மரமக்க ளாதலே வேறு. 59

ஆள்விணை உடைமை

தாளாண்மை யென்னுந் தகைமைக்கட் டங்கிற்றே
வேளாண்மை யென்னுஞ் செருக்கு. 60

தெய்வத்தா னுகா தெனினு முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும். 61

அமைச்சு

அறிகொன் றறியா னெனினு முறுதி
யுழையிருந்தான் கூறல் கடன். 62

விணைத்தூய்மை

ஈன்றுள் பசிகாண்பா னுயினுஞ் செய்யற்க
சான்றோர் பழிக்கும் விணை. 63

விணைத்திட்பம்

விணைத்திட்ப மென்ப தொருவன் மனத்திட்ப
மற்றைய வெல்லாம் பிற. 64

குறிப்பறிதல்

அடுத்தது காட்டும் பளிங்குபோ னெஞ்சங்
கடுத்தது காட்டும் முகம். 65

படைச்செருக்கு

விழுப்புண் படாதநா ளெல்லாம் வழுக்கினுள்
வைக்குந்தன் னாளை யெடுத்து. 66

நட்பு

நவிறொறு நூனயம் போலும் பயிறொறும்
பண்புடை யாளர் தொடர்பு. 67

நட்பாராய்தல்

ஊதிய மென்ப தொருவற்குப் பேதையார்
கேண்மை யொரீஇ விடல். 68

பழைமை

பேதைமை யொன்றோ பெருங்கிழமை யென்றுணர்க
நோதக்க நட்டார் செயின். 69

சூது

சிறுமை பலசெய்து சீரழிக்குஞ் சூதின்
வறுமை தருவதொன் றில். 70

மானம்

புகழின்றாற் புத்தேணாட் டுய்யாதா லென்மற்
றிகழ்வார்பின் சென்று நிலை. 71

சான்றாண்மை

கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை
சொல்லா நலத்தது சால்பு. 72

இன்னாசெய் தார்க்கு மினியவே செய்யாக்கா
லென்ன பயத்ததோ சால்பு. 73

நாணுடைமை

அணியன்றோ நாணுடைமை சான்றோர்க் கஃதின்றேற்
பிணியன்றோ பீடு நடை. 74

குடிசெயல்வகை

குற்ற மிலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்
சுற்றமாச் சுற்று முலகு. 75

உழவு

இலமென் றசைஇ யிருப்பாரைக் காணி
னிலமென்னு நல்லா ணகும். 76

நல்குரவு

நற்பொரு ணன்குணர்ந்து சொல்லினு நல்கூர்ந்தார்
சொற்பொருள் சோர்வு படும். 77

இரவச்சம்

இரவுள்ள வுள்ள முருகுங் கரவுள்ள
வுள்ள தூஉ மின்றிக் கெடும். 78

கயமை

தேவ ரனையர் கயவ ரவருந்தா
மேவன செய்தொழுக லான். 79

அறைபறை யன்னர் கயவர்தாங் கேட்ட
மறைபிறர்க் குய்த்துரைக்க லான். 80

—திருவள்ளுவர்.

அருஞ்சொற்பொருள்

1. வேண்டுதல் - விரும்புதல், வேண்டாமை - வெறுப்பு, யாண்டும் - எக்காலத்தும், இடும்பை - பிறவித் துன்பங்கள்.

2. விசும்பு - மேகம், மற்று ஆங்கே - வீழாதாயின் அப்போது, காண்பு - காணுதல்.

3. இருமை - பிறப்பு, வீடு என்ற இரண்டு; வகை - துன்ப, இன்ப வகை; அறம் - துறவறம், ஈண்டு - இப் பிறப்பில், பிறங்கிற்று - உயர்ந்தது, உலகு - உலகில்.

4. வலியுறுத்தல் - வலிமையை உறுதியாகக் கூறல், சிறப்பு - வீடுபேறு, ஊங்கு - மிக்க, எவனோ - யாது?

5. ஒல்லும் - இயலும், ஓவாது - ஒழியாது, செல்லும்வாய் எல்லாம் - பொருந்தும் இடங்கள் எல்லாவற்றுலும், செயல் - செய்க.

6. இல் - இல்லாள், இடவாகுபெயர். அறத்துஆற்றின் - அறத்தின்வழி, புறத்து ஆற்றில் - அதற்குப் புறமான நெறியில், பெறுவது - பெறும்பயன், எவன் - யாது?

7. துணை நலம் - இல்லாளின் நன்மை, பெருந்தக்க - மேம்பட்ட பொருள்கள், திண்மை - கலங்காநிலை.

8. சிறை - மதிலும், வாயில் காவலும் என்பன; எவன் - என்ன

பயன், நிறை - மனத்தைக் கற்புநெறியில் நிறுத்தல், தலை - முதன்மை யான காவல்.

9. மன்னுயிர் - நிலைபெற்ற உயிர். இனிது - இன்பம் தருவது.

10. சார்பு - துணை, மறம் - அறத்தின் நீங்கிய செயல்.

11. ஓம்பல் - புறந்தருதல், வேளாண்மை - உதவி, ஓம்பி - போற்றி, பேணி.

12. ஆல் - அசை, ஈரம் அளைஇ - அன்போடு கலந்து, படிறு - வஞ்சனை, செம்பொருள் - அறம், கண்டார் - அறிந்தார்.

13. நல்லவை - நன்மைதருஞ் சொற்கள், நாடி - ஆராய்ந்து, இனிய - இனியனவாக.

14. வானகம் - விண்ணுலகம், ஆற்றல் - ஒத்தல்.

15. நடு ஒரீஇ - நடுவுநிற்றலை விடுத்து, அல்ல - நடுவல்லாதன வற்றை.

16. அதனின் ஊங்கு ஆக்கம் எனக் கூட்டுக. ஊங்கு ஆக்கம் - மிக்க செல்வம்.

17. செல்வம் தகைத்து - மற்றொரு செல்வம் ஆகும் சிறப்பு உடையது.

18. பொறை - பொறுமை, ஒறுத்தார் - கண்டித்தவர், ஒன்று - ஒரு பொருள், வையார் - கருதார், பொதிந்து - பாதுகாவலாய்.

19. அழுக்காற்றின் - அழுக்காறு காரணமாக, ஏதம்படுபாக்கு - துன்பம் வருதலை.

20. வெஃகாமை - கவரக் கருதாமை, அஃகாமை - சுருங்காமை.

21. ஒப்புரவு - உலக நடை, கேடு - பொருட்கேடு, விற்று கோள் தக்கது உடைத்து - தன்னை விற்றேனும் கொள்ளுந் தகுதியை உடைத்து.

22. மற்று எல்லாம் - வறியார் அல்லாதார்க்கு ஒரு பயன் நோக்கிக் கொடுக்கும் எல்லாக் கொடையும், குறிஎதிர்ப்பு - அளவாக வாங்கி வாங்கியபடியே எதிர்கொடுப்பது, நீரது - நீர்மை உடையது.

23. எவ்வம் - துன்பமொழி, உரையாமை ஈதல்-உம்மைத்தொகை, குலனுடையான் - உயர்குடிப் பிறந்தான்.

24. அற்றார் - வறியர், அழி - மிக்க, ஒருவன் பெற்றான் பொருள் என்பதைப் பொருள் பெற்றான் ஒருவன் எனக் கூட்டுக. வைப்புஉழி - வைக்கும் இடம், அஃது - அந்த அறம்.

25. ஒன்று ஆ - தனக்கு இணை இல்லாததாக, பொன்றுது - இறவாது.

26. இசை - புகழ், எச்சம் - எஞ்சி நிற்கும் பொருள், வசை - பழிச்சொல், என்ப - என்று நல்லோர் கூறுவர்.

27. புலால் - ஊன் உண்ணுதல், ஊன் - உடம்பு, ஆகுபெயர் ; பிறிது - வேறோருயிரின், எங்ஙனம் - எவ்வாறு, ஆளும் - நடத்தும்.

28. வேண்டிய - விரும்பிய பயன்கள், வேண்டிஆங்கு - விரும்பிய வாறே, ஈண்டு - இப் பிறவியில்.

29. கூடா ஒழுக்கம் - தகாத நடத்தை, மழித்தல் - தலைமயிரை மொட்டை அடித்தல், நீட்டல் - சடைவளர்த்தல், பழித்தது - குற்ற மாகக் கூறிய ஒழுக்கத்தை, உலகம் - ஆகுபெயர்.

30. தீமை யாது ஒன்றும் - தீங்கு சிறிதும் பயவாத, சொலல் - சொல்வதாகும்.

31. வெகுளாமை - சினங்கொள்ளாமை, சினம் காக்க - மனதில் சினம் தோன்றுமல் தடுக்க, கொல்லும் - கடுந் துன்பங்களை அனுப விக்கச் செய்யும்.

32. இன்னு - துன்பந்தரும் செயல்கள், மேல - பலவின்பால் குறிப்பு வினையால் அணையும் பெயர்.

33. நிலையாமை - அழியும் தன்மை, நெருநல் - நேற்று, பெருமை- நிலையாமை மிகுதி, என்னும் - என்று கூறும்.

34. மயக்கம் - அறியாமை, மூன்றின் நாமம் - மூன்றினது பெய ருங்கூட, நோய் - வினைப்பயன்கள்.

35. நன்று ஆம் கால் - நல்வினை பயன்தரும் காலத்தில், நல்ல ஆ காண்பவர் - நல்ல என்று உடன்பட்டு நுகர்பவர், அன்று - தீவினை, அல்லல்படுவது - துன்புறுவது, எவன் - என் கருதி ?

36. காட்சிக்கு - காண்பதற்கு, மன்னன் நிலம் - மன்னனது நாட்டை, மீக்கூறும் - உலகத்தார் உயர்த்துக் கூறுவர்.

37. எண் என்ப - கணிதம் என்று சொல்லப்படுவன, எழுத்து என்ப - இலக்கணம் என்று சொல்லப்படுவன, இ இரண்டும் – இந்த இரண்டு கலைகளையும், வாழும் உயிர்க்கு - சிறப்புடைய மாந்த ருயிர்க்கு.

38. உவப்ப - மகிழும்படி, தலைக்கூடி - கலந்து அளவளாவி, உள்ள - இவரை நாம் எவ்வாறு மறுமுறையும் கூடுவோம் என்று நினைக்கும்படி, பிரிதல் அனைத்து - நீங்குதல் ஆகிய அத்தன்மையை உடையது.

39. கல்லாமை - கற்றலைச் செய்யாமை, தகைமை - மதிப்பு, தலைப்பெய்து - கண்டு, சொல்ஆட - உரையாட, சோர்வுபடும் - கெடும்.

40. விலங்கொடு - விலங்கை நோக்க, மக்கள் அனையர் - மக்கள் எவ்வளவு நன்மை உடையவர், அவ்வளவு தீமை உடையவர் ; இலங்கு - விளங்கிய, கற்றுரோடு ஏனையவர் - கற்றுரோடு நோக்கக் கல்லாதவர்.

41. நுணங்கிய - நுட்பமாகிய, வணங்கிய வாயினர் - பணிதலைப் புலப்படுத்தும் சொற்களை உடையவர், அரிது - கூடாது.

42. எப்பொருள் - யாதொரு பொருளை, யார் யார் வாய்க் கேட்பினும் - யார் யார் சொல்லக் கேட்டாலும், மெய்ப்பொருள் - நிலைத்த பயனை.

43. எவ்வது - எந்த வழியால், அவ்வது - அவ்வழியால், உறைவது- ஒழுகுவது.

44. பெரியார் - மேம்பட்டவர், தமர்ஆ - தமக்குச் சிறந்த துணைவ ராகும்படி, வன்மையுள் எல்லாம் - எல்லா வலிமை உடைமையினும்.

45. இடிப்பார் - நெருக்கி உறுதிமொழி கூறத்தக்க பெரியார், ஏமரா - காவல் அற்ற, இல் ஆனும் - இல்லை ஆனாலும், கெடும் - தானே கெடுவான்.

46. தெரிந்து செயல்வகை - ஆராய்ந்து செய்யும் திறம், ஆக்கம் - ஊதியம், ஊக்கார் - மேற்கொள்ளமாட்டார்.

47. நன்று ஆற்றலுள் உம் - நல்ல உபாயம் செய்தற்கண்ணும், தவறு - குற்றம், ஆற்ருக்கடை - செய்யாவிடின்.

48. கொம்பர் - மரக்கிளை, அஃது இறந்து - தம் ஊக்கத்தால் அந்த அளவினைக் கடந்து, ஊக்கின் - மேலும் ஏற ஊக்கம் கொள்ளின், இறுதி யாய் - அழிவைச் செய்வதாய்.

49. ஆகு ஆறு - செல்வம் வருகின்ற வழி, இட்டிது - சிறிது, போகு ஆறு - போகின்ற நெறி, அகலாக்கடை - பெருகாது ஆயின்.

50. கருவி - தொழிலை நிறைவேற்றுதற்கு ஏற்ற கருவிகள், காலம் - ஆகும் காலம்.

51. கூம்பும் பருவத்து - தொழின்மேல் செல்லாது இருக்கும் காலத் தில், சீர்த்த விடத்து - நடக்கும் காலம் வாய்த்தபோது, அதன் குத்து ஒக்க - கொக்கு தன் தொழிலைச் செய்துமுடிக்கும் விதம்போலத் தவரு மல் செய்துமுடிக்க.

52. எஞ்சாமை எண்ணி - ஒன்றையும் விடாமல் தீர ஆலோசித்து, இடத்தால் - இடத்தோடு பொருந்த, திண்மை - பகைவர்க்கு அஞ்சாத மன உறுதி, துணை - வேறு துணை.

53. வினையாடல் - தொழில்களை ஆளும் திறன், தேற்றம் - மனங் கலங்காமை, நன்கு - நிலைபெற, தெளிவு - அரசன் செயலை ஒப்புவித்து இருக்கும் நம்பிக்கை.

54. தழால் - அணைத்தல், பற்று அற்ற கண்ணும் - செல்வம் தொலைந்து வறுமை உற்ற இடத்தும், பழமை - பழைய தொடர்பை, பாராட்டுதல் - கொண்டாடும் இயல்புகள்.

55. பொச்சாவாமை - சோர்தலைச் செய்யாமை, அரண் - பாது காவல், ஆங்கு - அதுபோல, நன்கு - செல்வம், காரியவாகுபெயர்.

56. ஒறுத்தல் - தண்டித்தல், பைங்கூழ் - பசும்பயிர், களை கட்டத னேடு - களையைப் பறித்துப் பாதுகாத்ததோடு, நேர் - சமம்.

57. அருஞ்செவ்வி - தன்னைக் காணவேண்டுவாருக்குப் பார்க்கச் சமயங் கிடைத்தற்கு அரியவன், இன்னு - வெறுப்புக் காட்டுகிற, பே எய்

கண்டு அன்னது - பேயால் காணப்பட்டாற் போல்வது, உடைத்து - குற்றம் உடையது.

58. கண்ணோட்டம் - மனம் இரங்கல், உலகியல் - உலகத்தாரது நடத்தை, உள்ளது - நிகழ்வது, நிலக்குப் பொறை - நிலத்திற்குச் சுமையாகும்.

59. உரம் - வலிய அறிவு, உள்ள வெறுக்கை - ஊக்க மிகுதி, வேறு - வேற்றுமை வடிவு.

60. ஆள்வினை - இடைவிடாத மெய்ம்முயற்சி, தாளாண்மை - முயற்சி, தகைமை - உயர்ந்த குணம், வேளாண்மை - உதவுதல், செருக்கு - மேம்பாடு.

61. தெய்வத்தால் - ஊழ்வயத்தால்.

62. அறி - அறிவு, கொன்று - அழித்து, உறுதி - நன்மை, உழை யிருந்தான் - அமைச்சன், உழை - அருகாமையில்.

63. ஈன்றாள் - பெற்ற தாய், காண்பான் ஆயினும் - கண்டு இரக்கப் படும் இயல்பினன் ஆனாலும்.

64. வினைத்திட்பம் - வினையை முடித்தற்கு வேண்டிய மன உறுதி, மனத்திடம் - மன உறுதி, மற்றைய எல்லாம் - அஃது ஒழிந்தவை எல்லாம், பிற - திண்மையாகமாட்டா.

65. குறிப்பு - மனத்தில் கருதியதை, அடுத்தது - தன்னைச்சேர்ந்த பொருளினது நிறத்தை, கடுத்தது - மிகுந்த குணத்தை.

66. செருக்கு - வீர மிகுதி, வழுக்கினுள் - பயன்படாது கழிந்த நாளுள்ளே, விழுப்புண் - சிறந்த புண், மார்பிலும், முகத்திலும் பட்ட புண்; தன் நாளை எடுத்து - தனக்குச் சென்ற நாட்களை எடுத்து எண்ணி.

67. நூல் நவில் தொறும் - நூற்பொருளைக் கற்கும்போதெல்லாம், நயம்போலும் - இன்பம் செய்தலை ஒக்கும்.

68. கேண்மை - நட்பு, ஒரீஇவிடல் - ஒழிந்து நீங்குதல், ஊதியம் - பேறு.

69. நோதக்க - வெறுக்கத்தக்கனவற்றை, பேதைமை ஒன்றோ பெருங்கிழமை - ஒன்றில் அறியாமை என்றுவது, ஒன்றில் மிக்க உரிமை என்றுவது; நட்டார் - நண்பர்.

70. சிறுமை - துன்பங்கள், சீர் - புகழ், வறுமை - ஏழ்மை.

71. இகழ்வார் பின் - தன்னை அவமதிப்பவர் பின்னே, சென்று நிலை - சென்று நிற்கின்ற நிலை, புத்தேள் நாட்டு - தேவருலகத்திற்கு, உய்யாது - செலுத்தாது.

72. நோன்மை - தவம், நலத்தது - அறத்திலுள்ளது, குணத்தி லுள்ளது.

73. இன்னா - துன்பம் தருவனவற்றை, என்ன பயத்தது - என்ன பயனை உடையது.

74. அணி அன்று ஓ - அணிகலம் ஆகும், பீடுநடை - பெருமித நடை, பிணி - துன்பம் தருவது, அன்று ஓ - தேற்றம்.

75. குற்றம் இலனாய் - குற்றமானவற்றைச் செய்யாது, செய்து - உயரச் செய்து, சுற்றும் - சூழ்வர்.

76. இலம் என்று - ஏழ்மை உடையேம் என்று, அசைஇ - சோம்பி, நகும் - எள்ளி நகையாடும்.

77. நல்குரவு - வறுமை, இல்லாமை; நற்பொருள் - மெய்ந்நூற் பொருள்களை, சொல் - சொல்லிய சொல், பொருட் சோர்வு - பொருள் இன்மை, படும் - பொருந்தி நிற்கும்.

78. இரவு உள்ள - இரப்பதன் கொடுமையை நினைத்தால், உருகும் - கரையும், கரவு - இல்லை என்று சொல்வதன் கொடுமை, உள்ளதூஉம் - அவ்வுருகும் அளவுதானும்.

79. கயமை - கீழ்மக்களின் தன்மை, அனையர் - ஒரு தன்மையர், மேவன - விரும்புவனவற்றை.

80. அறை பறை - அறையப்படும் பறை, மறை - மறைக்கத் தகும் செய்திகளை, இரகசியங்களை; உய்த்து - பல இடங்களுக்கும் தாங்கிச் சென்று, உரைக்கலான் - சொல்வதால்.

### வினாக்கள்

1. 'திருக்குறள்'—இப் பெயர் வரக் காரணம் யாது? இந்த நூல் எந்தத் தொகுப்பைச் சேர்ந்தது?
2. திருக்குறளின் பெருமை பற்றி ஐந்து வாக்கியங்கள் வரைக.
3. கடவுள் எத்தன்மையன்? அவனடி சேர்ந்தார் எய்தும் பயன் யாது?
4. யார் பெருமை உலகில் உயர்ந்தது?
5. அறத்தின் மிக்க உறுதி இல்லை என்றது ஏன்?
6. வள்ளுவர், அறவினையை எவ்வாறு செய்தல்வேண்டும் என்று கூறுகிறார்?
7. நிறை காக்கும் காப்பே தலை என்று ஏன் கூறப்பட்டது?
8. மன்னுயிர்க்கு இனிது—எது?
9. மறத்திற்கும் அஃதே துணை—அஃது என்பது எதனை?
10. இல் வாழ்வது எதன் பொருட்டாகும்?
11. இன்சொல்லின் இலக்கணத்தையும், அதைக் கூறுவதால் உண்டாகும் பயனையும் கூறுக.
12. செய்யாமற் செய்த உதவியின் பெருமை எத்தன்மையது?
13. செல்வர்க்கே செல்வந் தகைத்து—எது?
14. 'காக்க பொருளா அடக்கத்தை' என்று கூறியது ஏன்?
15. அறிவுடையார் அழுக்காறு காரணமாக ஏன் அல்லவை செய்யார்?

16. செல்வம் குறையாதிருப்பதற்குக் காரணம் யாது?
17. விற்றுக் கோட்டக்க துடைத்து—எது?
18. குறிஎதிர்ப்பை நீரதுடைத்து—விளக்கந் தருக.
19. குலனுடையான் கண்ணே உள்ளன யாவை?
20. பொருள் பெற்றான் அதனை வைக்கும் இடம் யாது என்று வள்ளுவர் கூறுகிறார்?
21. புலால் மறுத்தலை வள்ளுவர் எவ்வாறு வற்புறுத்தியுள்ளார்?
22. தவம் ஈண்டு முயலவேண்டும்—ஏன்?
23. வாய்மை எனப்படுவது யாது?
24. சினத்தைக் காக்க வேண்டும் என்பதற்கு வள்ளுவர் காட்டுங் காரணம் யாது?
25. நோயின்மை வேண்டுபவர் செய்யத் தக்கது யாது?
26. வினைப்பயன்கள் எப்போது கெடும்?
27. உயர்ந்தோர் எத்தகைய மன்னனது நிலத்தை மேம் படுத்திக் கூறுவர்?
28. எண்ணும் எழுத்தும் கண்ணெனத்தகும்—இக்கருத்தமைந்த குறளை வரைந்து, அதற்குப் பொழிப்புரை தருக.
29. புலவர் தொழில் யாது?
30. கல்லா ஒருவன் தகைமை எப்போது சோர்வு படும்?
31. கற்றாருக்கும், கல்லாருக்கும் உள்ள வேறுபாட்டை வள்ளுவர் எவ்வாறு விளக்கியுள்ளார்?
32. கேள்வியின் சிறப்பு யாது?
33. அறிவுடைமை என்ற தலைப்பில் வரும் குறட்பாக்களுக்குப் பொழிப்புரை தருக.
34. வன்மையுள் எல்லாம் தலை—எது?
35. எத்தகைய மன்னன் தானே கெடுவான்?
36. அறிவுடையார் எத்தகைய செயலை மேற்கொள்ளார்?
37. நன்றாற்ற லுள்ளும் தவறுண்டு என்றது ஏன்?
38. "நுனிக் கொம்பர் ஏறினார்.....இறுதி யாகிவிடும்"—இக்குறளால் உணர்த்தப்படும் பொருள் யாது? இக்குறளில் அமைந்துள்ள அணி யாது?
39. கொக்கின் செயலால் அறிவிக்கப்படும் நீதி யாது?
40. அரசன், தனது செயலை எத்தகையோரிடத்தில் நம்பிக்கை கொண்டு ஒப்படைப்பான்?
41. அச்சமுடையார்க்கு அரணில்லை—இது எப்பொருளை விளக்க வந்தது? இக்குறளில் உள்ள அணி யாது?
42. பைங்கூழ் களைகட்டதனொடுநேர்—உவமையை விளக்கி உவமேயத்தோடு பொருத்துக.
43. வெருவந்த செய்யாமை—இத்தொடர்ப் பொருளை விளக்குக.

44. பேஎய் கண்டன்னது—இதன் பொருளை விளக்குக. உவமேயமும் தருக.
45. நிலக்குப்பொறை—யார் ?
46. உரமொருவற்கு—இத் தொடக்க முடைய குறளுக்குப் பொழிப்புரை தருக. இதில் அமைந்துள்ள அணி யாது ?
47. அமைச்சன் கடமை யாது ?
48. பழி பயக்கும் வினையைச் செய்யக் கூடாது என்புதை வள்ளுவர் எவ்வாறு விளக்குகிறார் ?
49. அகத்தின் அழகு முகத்தில் தெரியும்—இக்கருத்தமைந்த குறள் யாது ?
50. விழுப்புண்—சொற்களைப் பிரித்துக் காட்டிப் பொருள் கூறுக.
51. பண்புடையார் தொடர்பு எதனை ஒத்தது ? விளக்குக ?
52. ஒருவற்கு ஊதிய மென்பது யாது ?
53. நட்டார் நோதக்க செயின் எவ்வாறு கருத வேண்டும் ?
54. சூதின் கொடுமை எவ்வாறு கூறப்படுகிறது ?
55. நோன்மை, சால்பு இவை எங்கு உள்ளன ?
56. சால்பிற்கு ஏற்ற செயல் யாது ?
57. பீடு நடை பிணியாவது எப்பொழுது ?
58. சுற்றமாச் சுற்று முலகு—எவனை ?
59. நில மென்னும் நல்லாள் யாரை நகும் ?
60. நல்குரவின் கொடுமையை வள்ளுவர் எவ்வாறு விளக்குகிறார் ?
61. கயவருக்குத் தேவரையும், அறை பறையையும் உவமை கூறியது எவ்வாறு பொருந்தும் ?

## 2. நாலடியார்

நான்கு அடிகளை உடைய வெண்பாக்களால் ஆகிய நூலாதலால், நாலடியாரெனப் பெயர் பெற்றது. இது பதினெண்கீழ்க் கணக்கைச் சேர்ந்தது. அறம், பொருள், இன்பம் ஆகிய முப்பாலையும் கூறுகிறது. திருக்குறளுக்குச் சமமான பெருமையை உடையது. " ஆலும் வேலும் பல்லுக்குறுதி, நாலுமிரண்டும் சொல்லுக் குறுதி " என்னும் இப்பழமொழி, இது திருக்குறளோடு ஒத்த பெருமையை உடையது என்பதை அறிவுறுத்துகிறது. இதற்கு நாலடி, நாலடி நானூறு, வேளாண்வேதம் என்ற வேறு பெயர்களும் உண்டு. இதனை இயற்றியவர் சமண முனிவர்கள். தொகுத்தவர் பதுமனார் என்னும் சைனப் புலவர்.

### கல்லாதவன் சிறுமை

கல்லாது நீண்ட ஒருவன் உலகத்து
நல்லறி வாளர் இடைப்புக்கு—மெல்ல
இருப்பினும் நாயிருந் தற்றே: இராஅது
உரைப்பினும் நாய்குரைத் தற்று. 1

### தலை, இடை, கடை மக்களின் இயல்பு

கல்லாக் கழிப்பர் தலையாயார்; நல்லவை
துவ்வாக் கழிப்பர் இடைகள்; கடைகள்
இனிதுண்ணேம் ஆரப் பெறேம்யா மென்னு
முனிவினல் கண்பா டிலர். 2

### கற்றவர் நட்பும், கல்லார் தொடர்பும்

கருத்துணர்ந்து கற்றறிந்தார் கேண்மை எஞ்ஞான்
குருத்தின் கரும்புதின் றற்றே—குருத்திற் [றும்
கெதிர்செலத் தின்றன்ன தகைத்தரோ என்றும்
மதுர மிலாளர் தொடர்பு. 3

### மக்கள் செய்ய வேண்டுவன

அறிமின் அறநெறி; அஞ்சுமின் கூற்றம்;
பொறுமின் பிறர்கடுஞ்சொல்; போற்றுமின் வஞ்சம்;
வெறுமின் வினைதீயார் கேண்மை; எஞ்ஞான்றும்
பெறுமின் பெரியார்வாய்ச் சொல். 4

### நண்பரின் குற்றம் பொறுத்தல்

நல்லா ரெனத்தா நனிவிரும்பிக் கொண்டாரை
அல்லா ரெனினு மடக்கிக் கொளல் வேண்டும்;
நெல்லுக் குமியுண்டு; நீர்க்கு நுரையுண்டு;
புல்லிதழ் பூவிற்கு முண்டு. 5

—சமண முனிவர்கள்

### அருஞ்சொற்பொருள்

1. நீண்ட - வளர்ந்த, இடைப்புக்கு - நடுவிலே புகுந்து, இருந்தது + அற்று = இருந்தற்று.

2. துவ்வா - அனுபவித்து, கடைகள் - கீழ்மக்கள், ஆர - செல்வம் நிரம்ப, முனிவு - வெறுப்பு, கண்பாடு - உறக்கம்.

3. கேண்மை - நட்பு, தின்றது + அற்று = தின்றற்று, மதுரம் - இனிய பண்பு.

4. கூற்றம் - எமன், வஞ்சம் - வஞ்சகம், வினைதீயார் - தீவினை யாளர்.

5. அல்லார் - தீயவர், அடக்கிக் கொளல் - மனத்தில் வெளி விடாமல் மறைத்து வைத்துக் கொள்ளுதல், புல்லிதழ் - பயன் அற்ற புறவிதழ்.

### வினாக்கள்

1. நாலடியார்—இது எந்தத் தொகை நூலைச் சேர்ந்தது?
2. தலையாயார், இடையாயார், கீழ்மக்கள்—இவர்கள் இயல்பு யாது?
3. நாயிருத்தல், குருத்தின் கரும்பு தின்றல்—இவை உணர்த்துவன யாவை?
4. நெல்லுக்கு உமியுண்டு—இது எதனை உணர்த்துகின்றது?

## 3. திரிகடுகம்

சுக்கு, திப்பிலி, மிளகு என்னும் இம் மூன்று பொருளும் சேர்ந்து உண்டாகிய மருந்து திரிகடுகம் எனப்படும். அது உடற் பிணியைப் போக்கி நன்மை புரிகிறது. அதுபோல, இந்நூலில் உள்ள ஒவ்வொரு செய்யுளும் மும்மூன்று செய்திகளை அறிவிப்ப தாய் மாந்தரது மனப்பிணியாகிய அறியாமையைப் போக்கி நலம் விளைவிக்கிறது. ஆகையால், இந்நூல் திரிகடுகம் எனப் பெயர் பெற்றது. இது பதினெண்கீழ்க் கணக்கைச் சேர்ந்தது.

இதனை இயற்றியவர் நல்லாதனர். இவரது வரலாறு அறியப்படவில்லை. இவர் கடைச்சங்க காலத்தவர்.

### தூயோர் தொழில்

உண்பொழுது நீராடி யுண்டலும், என்பெறினும்
பால்பற்றிச் சொல்லா விடுதலும்,—தோல்வற்றிச்
சாயினும் சான்ருண்மை குன்ருமை, இம்மூன்றும்
தூஉயம் என்பார் தொழில். 1

### நட்புக் கொள்ளத் தகாதவர்

பொய்வழங்கி வாழும் பொறியறையும், கைதிரிந்து
தாழ்விடத்து நேர்கருதும் தட்டையும்,—ஊழினால்
ஒட்டி வினை நலம் பார்ப்பானும், இம்மூவர்
நட்கப் படாஅ தவர். 2

### சிறந்த ஒழுக்கம்

பிறர்தன்னைப் பேணுங்கால் நாணலும், பேணார்
திறன்வேறு கூறிற் பொறையும்,—அறவினையைக்
காராண்மை போல ஒழுகலும், இம்மூன்றும்
ஊராண்மை என்னுஞ் செருக்கு. 3

### செல்வம் உடைக்கும் படை

தன்னை வியந்து தருக்கலும், தாழ்வின்றிக்
கொன்னே வெகுளி பெருக்கலும்,—முன்னிய
பல்பொருள் வெஃகும் சிறுமையும், இம்மூன்றும்
செல்வம் உடைக்கும் படை. 4

### நல்ல செயல்கள்

ஈதற்குச் செய்க பொருளை ; அறநெறி
சேர்தற்குச் செய்க பெருநூலை ;—யாதும்
அருள்புரிந்து சொல்லுக சொல்லை ; இம்மூன்றும்
இருளுலகம் சேராத ஆறு. 5

—நல்லாதனார்

### அருஞ்சொற்பொருள்

1. பால் பற்றி - ஒரு பக்கம் சார்ந்து, கொல்லா - நீதி வழங்காது, தோல் - உடல், சான்றாண்மை - பெருமைக்குணம், தூஉயம் - தூய்மை உடையோம்.

2. பொறி யறை - நல்வினை அற்றவன், கைதிரிந்து - செல்வம் குறைந்து, நேர்கருதும் - துன்பம் செய்ய நினைக்கும், தட்டை - அறிவிலி, ஒட்டி - பந்தயம் வைத்து, நட்கப் படாதவர் - நட்புக் கொள்ளத் தகாதவர்.

3. பேணுங்கால் - கொண்டாடும் பொழுது, நாணல் - கூசுதல், பேணார் - பகைவர், திறன் வேறு கூறின் - திறமையை வேறு படப் பழித்துக் கூறினால், பொறை - பொறுமை, காராண்மை - மேகத்தின் பெருங்குணத்தை ஒத்துப் பயன் கருதாது பிறர்க்குக் கொடுத்தல், செருக்கு - செல்வம்.

4. வியந்து - புகழ்ந்து, தருக்கல் - செருக்குக் கொள்ளுதல், கொன்னே - வீணுக, முன்னிய - நினைத்த, வெஃகும் - ஆசை கொள்ளும், சிறுமை - அற்பகுணம்.

5. செய்க - தேடுக, படிக்க ; இருளுலகம் - நரகம், ஆறு - வழி.

### விளுக்கள்

1. திரிகடுகம்—இந்நூலுக்கு இப்பெயர் வரக் காரணம் என்ன ? இது எந்தத் தொகையைச் சேர்ந்தது ?

2. மருந்தின் பெயரால் வழங்கப்படும் வேறு நூல்கள் யாவை ?

3. தூஉயம் என்பார் தொழில்கள் யாவை ?

4. நட்கப் படாஅ தவர்—யார் ?

5. ஊராண்மை என்னும் செருக்கு என்று கூறப்பட்டன எவை ?

6. செல்வம் உடைக்கும் படை என்று எவற்றை நல்லாதனுர் கூறுகிறுர் ?

7. இருளுலகம் சேராமைக்கு உரிய வழிகள் யாவை ?

8. பொருள் கூறுக :—கொன்னே, பொறியறை, ஊராண்மை, வெஃகும், தட்டை.

# III. தொடர்நிலைச் செய்யுள்

## சங்க காலம்

## 1. மணிமேகலை

### விழாவறை காதை

கோவலனுக்கு மாதவியிடத்தில் பிறந்த மகளாகிய மணிமேகலையினுடைய வரலாற்றைக் கூறுவதால், இந்நூல் மணிமேகலை எனப் பெயர் பெற்றது. இதற்கு மணிமேகலை துறவு எனவும் ஒரு பெயருண்டு. ஐம்பெருங் காப்பியங்களில் இதுவும் ஒன்று. முப்பது காதைகளாகிய உட்பிரிவுகளை உடையது.

மணிமேகலையை இயற்றியவர் மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார் என்பவர். இவரது இயற்பெயர் சாத்தனார் என்பது. இவர் மதுரையிலே வாழ்ந்தவர். தானிய வாணிபம் செய்தவர். வணிக குலத்தினர். இவரது பிறப்பிடம் சோழ நாட்டில் உள்ள சீத்தலை என்பர். இவர் பௌத்த மதத்தைத் தழுவியவர். இவரது நண்பர் இளங்கோவடிகள். இவர் காலம் கி. பி. இரண்டாம் நூற்றாண்டு ஆகும்.

இந்திர விழாவை ஊர் மக்களுக்கு முரசறைந்து அறிவித்த கதைப் பகுதி.

முரசு கடிப்பிடூஉ முதுக்குடிப் பிறந்தோன்
திருவிழை மூதூர் வாழ்கென் றேத்தி
வானமும் மாரி பொழிக ; மன்னவன்
கோணிலை திரியாக் கோலோன் ஆகுக ;
தீவகச் சாந்தி செய்தரு நன்னாள்

ஆயிரங் கண்ணோன் தன்னோடு ஆங்குள
நால்வேறு தேவரு நலத்தகு சிறப்பின்
பால்வேறு தேவரு மிப்பதிப் படர்ந்து
மன்னன் கரிகால் வளவனீங் கியநாள்
இந்நகர் போல்வதோர் இயல்பின தாகிப்

பொன்னகர் வறிதாப் போதுவ ரென்பது
தொன்னிலை யுணர்ந்தோர் துணிபொரு ளாதலின்
தோரண வீதியும் தோமறு கோட்டியும்
பூரண கும்பமும் பொலம்பா லிகைகளும்
பாவை விளக்கும் பலவுடன் பரப்புமின் ;
காய்க்குலைக் கமுகும் வாழையும் வஞ்சியும்
பூக்கொடி வல்லியுங் கரும்பு நடுமின் ;
பத்தி வேதிகைப் பசும்பொற் றூணத்து
முத்துத் தாம முறையொடு நாற்றுமின் ;
விழவுமலி மூதூர் வீதியு மன்றமும்
பழமணன் மாற்றுமின் ; புதுமணற் பரப்புமின் ;
கதலிகைக் கொடியுங் காழூன்று விலோதமும்
மதலை மாடமும் வாயிலுஞ் சேர்த்துமின் ;
நுதல்விழி நாட்டத்து இறையோன் முதலாப்
பதிவாழ் சதுக்கத்துத் தெய்வமீ ருக
வேறுவேறு சிறப்பின் வேறுவேறு செய்வினை
யாறறி மரபின் அறிந்தோர் செய்யுமின் ;
தண்மணற் பந்தரும் தாழ்தரு பொதியிலும்
புண்ணிய நல்லுரைஅறிவீர் பொருந்துமின் ;
ஒட்டிய சமயத்து உறுபொருள் வாதிகள்
பட்டிமண் டபத்துப் பாங்கறிந் தேறுமின் ;
பற்று மாக்கள் தம்முடன் ஆயினும்
செற்றமும் கலாமும் செய்யாது அகலுமின் ;
வெண்மணற் குன்றமும் விரிபூஞ் சோலையும்
தண்மணல் துருத்தியும் தாழ்பூந் துறைகளும்
தேவரு மக்களு மொத்துடன் திரிதரும்
நாலேழ் நாளினு நன்கறிந் தீரென
ஒளிறுவாண் மறவரும் தேரும் மாவும்
களிறும் சூழ்தரக் கண்முரசு இயம்பிப்
பசியும் பிணியும் பகையும் நீங்க
வசியும் வளனும் சுரக்கென வாழ்த்தி
அணிவிழா அறைந்தனன் அகநகர் மருங்கென்.

—சீத்தலைச் சாத்தனார்

## அருஞ்சொற்பொருள்

1—5. கடிப்பு இடூஉம் - குறுந்தடி கொண்டு அறையும், பிறந் தோன் - பிறந்த வள்ளுவன், திருவிழை - இலக்குமி வாழ்வதற்கு விரும்புகின்ற, மும்மாரி - மூன்று முறை மழை, கோள்நிலை திரியா - கோள்கள் (கிரகங்கள்) நிற்கும் நிலை குலையாமைக்குக் காரணமான, கோலோன் - செங்கோல் செலுத்துபவன், தீவகச் சாந்தி - நாவலந் தீவிற்குச் சாந்தியாகிய இந்திர விழா.

6—10. ஆயிரங்கண்ணோன் - இந்திரன், நால்வேறு தேவரும் - நால்வகையாகப் பிரிக்கப்படும் முப்பத்து மூவராகிய தேவரும், நலத் தகு சிறப்பு - நன்மை அமைந்த சிறப்பு, பால்வேறு தேவர் - பதி னெண் தேவகணங்கள், படர்ந்து - நினைந்து, இந்நகர் போல்வது - இந்த நகரம் வறிதாகிய தன்மைபோல.

11—15. போதுவர் - அடைவர், தொன்னிலை - பழைமை, தோம் - குற்றம், கோட்டி - மன்றம், பூரண கும்பம் - நிறைகுடம், பொலம் - பொன்னாலாகிய, இங்குக் கூறப்பட்டன மங்கலப் பொருள்கள்.

16—20. கமுகு - பாக்குமரம், வஞ்சி - வஞ்சிமரம், கொடிவல்லி - ஒரு பொருட் பன்மொழி, பத்தி வேதிகை - வரிசையாக அமைந்த திண்ணைகளில் உள்ள, தாமம் - மாலை, நாற்றுமின் - தொங்கவிடுங்கள், மன்றம் - மரத்தடிகள், பொதுவிடங்கள்.

21—25. கதலிகைக் கொடி - துகிற் கொடி, காழ் ஊன்று விலோ தம் - காம்பிஞல் ஊன்றப் படும் கொடி, மதலை - கொடுங்கைகள், பதி வாழ் - காவிரிப்பூம்பட்டினத்துள்ள, ஈறுஆக - இறுதிஆக.

26—30. வேறுவேறு சிறப்பின் - வெவ்வேறு வகைப்பட்ட சிறப்பு களோடு கூடிய, ஆறு - செய்யும் நெறி, மரபின் - முறைமையினை உடைய, தாழ்தரு - பலர் தங்குகின்ற, பொதியில் - மன்றம், நல்லுரை - அற உரைகள், பொருந்துமின் - பொருந்திக் கூறுங்கள், ஒட்டிய சமயத்து - தத்தம் மதத்திற்குப் பொருந்திய, உறுபொருள் - விழுமிய பொருளை.

31—35. பட்டிமண்டபம் - வித்தியா மண்டபம், பற்று மாக்கள் - பகைவர், செற்றம் - சினம், கலாம் - சண்டை, துருத்தி - ஆற்றிடைக் குறை, தாழ் பூந்துறை - ஆழ்ந்த பொலிவுடைய நீர்த்துறை.

36—41. ஒத்து உடன் திரிதரும் - வேறுபாடு இல்லாமல் சேர்ந்து உலாவும், நன்கு அறிந்தீர் - இவற்றை நன்கு தெரிந்தவர் ஆகி, சூழ்தர - தன்னைச் சூழ்ந்துவர, கண்முரசு இயம்பி - முகம் உடைய முரசத்தை அடித்து, பகை - பகைமை, வசி - மழை, வளம் - செல்வ வளம், அணிவிழா - அழகிய விழா, அகநகர் - நகரினுள்ளே.

### வினாக்கள்

1. மணிமேகலை எனப் பெயர் வரக் காரணம் என்ன ?
2. சீத்தலைச் சாத்தனாரின் வரலாற்றுக் குறிப்புத் தருக.
3. முரசறைவோன் முதலில் எவ்வாறு வாழ்த்தினான் ?
4. அவன், நகரை அணிசெய்ய வேண்டியதற்குக் கூறிய காரணம் யாது ?
5. அவன், எவ்வாறு நகரை அழகு செய்ய வேண்டும் என்று கூறுகின்றான் ?
6. அறிஞர்களும், சமயவாதிகளும் செய்யத் தகுவனவாக அவன் கூறியவை யாவை ?
7. முரசறைவோன் இறுதியில் யாது கூறி வாழ்த்தினான் ?

## இடைக்காலம்

## 2. நளவெண்பா

### கலி தொடர் காண்டம்

நளவெண்பா என்பதற்கு நளனுடைய வரலாற்றை வெண்பாக்களினால் கூறும் நூல் என்பது பொருள். இந்த நூல் சுயம்வர காண்டம், கலிதொடர் காண்டம், கலிநீங்கு காண்டம் என்று மூன்று காண்டங்களை உடையது. சுமார் 411 வெண்பாக்களைக் கொண்டது.

நளவெண்பாவின் ஆசிரியர் புகழேந்திப் புலவர். இவர் தொண்டைமண்டலத்தில் பொன்விளைந்த களத்தூரில் பிறந்தவர். துளுவ வேளாளர் குலத்தைச் சேர்ந்தவர். மள்ளுவ நாட்டை ஆண்ட சந்திரன் சுவர்க்கியால் ஆதரிக்கப் பெற்றார். அவனது வேண்டுகோளுக்கு இணங்கி இந்நூலைப் பாடினார். இவர் பாடிய வேறு தமிழ் நூல், இரத்தினச் சுருக்கம். ஔவை, ஒட்டக்கூத்தர் முதலியோர் இவர் காலத்தில் இருந்தனர். இவர் வாழ்ந்த காலம் கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டு.

கலி நளனைத் தொடர்ந்த வரலாற்றைக் கூறுவது கலிதொடர் காண்டமாகும்.

#### கலி நளனுக்கு முன் புள் வடிவாய் வரல்

கன்னிறத்த சிந்தைக் கலியுமவன் முன்பாகப்
பொன்னிறத்த புள்வடிவாய்ப் போந்திருந்தான்—நன்னெறிக்கே
அஞ்சிப்பா ரீந்த வரசனையும் தேவியையும்
வஞ்சிப்பான் வேண்டி வனத்து. 1

### தமயந்தி நளனை வேண்டுதல்

தேன்பிடிக்கும் தண்டுழாய்ச் செங்கட் கருமுகிலை
மான்பிடிக்கச் சொன்ன மயிலேபோல்—தான்பிடிக்கப்
பொற்புள்ளைப் பற்றித்தா வென்றாள் புதுமழலைச்
சொற்கிள்ளை வாயாள் தொழுது. 2

### நளன் பறவையைப் பிடித்தல்

எற்றித் திரைபொரநொந் தேறி யிளமணலிற்
பற்றிப் பவளம் படர்நிழற்கீழ்—முத்தீன்று
வெள்வளைத்தா யோடுநீர் வேலைத் திருநாடன்
புள்வளைத்தா னுடையாற் போந்து. 3

### பறவை நளனை நோக்கிக் கூறல்

கூந்த லிளங்குயிலுங் கோமானுங் கொண்டணைத்த
பூந்துகில்கொண் டந்தரத்தே போய்நின்று—வேந்தனே !
நன்னாடு தோற்பித்தோ னுனேகா ணென்றதே
பொன்னாடு மானிறத்த புள். 4

### நளன் தமயந்தி இவர்கள் நிலைமை

காவிபோற் கண்ணிக்குங் கண்ணியந்தோட் காளைக்கும்
ஆவிபோ லாடையுமொன் றானதே—பூவிரியக்
கள்வேட்டு வண்டுழலுங் கானத் திடைக்கனகப்
புள்வேட்டை யாதரித்த போது. 5

### நளன் பாழ்மண்டபம் காணல்

எங்காம் புகலிடமென் றெண்ணி யிருள்வழிபோய்
வெங்கா னகந்திரியும் வேலைதனில்—அங்கேயோர்
பாழ்மண் டபங்கண்டான் பால்வெண் குடைநிழற்கீழ்
வாழ்மண் டபங்கண்டான் வந்து. 6

### நளன் அம்மண்டபத்தில் உறங்கலாமெனல்

மூரி யிரவும்போய் முற்றிருளாய் மூண்டதால்
சாரு மிடமற்றுத் தானில்லை—சோர்கூந்தல்
மாதராய் ! நாமிந்த மண்டபத்தே கண்டுயிலப்
போதரா யென்றான் புலர்ந்து. 7

### நளன் தமயந்தியை உறங்கச் சொல்லல்

தீய வனமும் துயின்று திசை துயின்று
பேயும் துயின்றதால் பேர்யாமம்—நீயுமினிக்
கண்மேல் துயில்கை கடனென்ருன் கைகொடுத்து
மண்மேல் திருமேனி வைத்து. 8

### நளன் ஆடையை அரிதற்கு எண்ணல்

காரிகைதன் வெந்துயரங் காணுமல் நீத்தந்தக்
கூரிருளில் போவான் குறித்தெழுந்து—நேரே
இருவர்க்கு மோருயிர்போ லெய்தியதோ ராடை
அரிதற் கவன்நினைத்தா னுங்கு. 9

### கலி வாளாய்க் காணப்படல்

எண்ணிய வெண்ண முடிப்ப விகல்வேந்தன்
கண்ணி யதையறிந்த காய்கலியும்—பண்ணினுக்குக்
கேளான தேமொழியை நீக்கக் கிளரொளிசேர்
வாளாய் மருங்கிருந்தான் வந்து. 10

### அவ்வாளால் நளன் தன் ஆடையை அரிதல்

ஒற்றைத் துகிலு முயிரு மிரண்டாக
முற்றுந்தன் னன்பை முதலோடும்—பற்றி
அரிந்தா னரிந்திட் டவணிலேமை நெஞ்சில்
தெரிந்தா னிருந்தான் திகைத்து. 11

### நளன் மனக்கலக்கம் அடைதல்

போயொருகால் மீளும் புகுந்தொருகான் மீண்டேகும்
ஆயர் கொணர்ந்த அடுபாலின்—தோயல்
கடைவார்தம் கைபோலு மாயிற்றே காலன்
வடிவாய வேலான் மனம். 12

### நளன் கானுறை தெய்வத்தை வேண்டல்

தீக்கா னகத்துறையுந் தெய்வங்காள் ; வீமன்றன்
கோக்கா தலியைக் குறிக்கொண்மின்—நீக்காத
காதலன்பு மிக்காளைக் காரிருளிற் கைவிட்டின்
றேதிலன்போற் போகின்றேன் யான். 13

### நளன் மனைவியைப் பிரிதல்

தாருவெனப் பார்மேற் றருசந் திரன்சுவர்க்கி
மேருவரைத் தோளான் விரவார்போல்—கூரிருளில்
செங்கா னகஞ்சிதையத் தேவியைவிட் டேகினன்
வெங்கா னகந்தனிலே வேந்து. 14

### தமயந்தி விழித்து நளனைக் காணாது வருந்தல்

வெய்ய தரையென்னு மெல்லமளி யைத்தடவிக்
கையரிக்கொண் டெவ்விடத்துங் காணமல்—ஐயகோ!
என்னப்போய் வீழ்ந்தா ளினமேதி மென்கரும்பைத்
தின்னப்போம் நாடன் திரு. 15

### தமயந்தி வருந்தித் தரையில் விழுதல்

வான்முகிலு மின்னும் வறுநிலத்து வீழ்ந்ததுபோல்
தானுங் குழலுந் தனிவீழ்ந்தாள்—ஏனம்
குளம்பான் மணிகிளைக்குங் குண்டுநீர் நாடன்
இளம்பாவை கைதலேமே லிட்டு. 16

### இரவு நீங்கிப் பொழுது புலர்தல்

தையல் துயர்க்குத் தரியாது தஞ்சிறகாங்
கையால் வயிறலைத்துக் காரிருள்வாய்—வெய்யோனை
வாவுபரித் தேரேறி வாவென் றழைப்பனபோற்
கூவினவே கோழிக் குலம். 17

### தமயந்தி நளனை எண்ணிப் புலம்புதல்

செய்தபிழை யேதென்னுந் தேர்வேந்தே யென்றழைக்கும்
எய்துதுய ரக்கரைகா ணேனென்னும்—பையவே
என்னென்னு தென்னென்னு மிக்கானில் விட்டேகு
மன்னென்னு வாடு மயர்ந்து. 18

### தமயந்தி மான், மயில் இவைகளை வினவுதல்

வெறித்த விளமான்காள்! மென்மயில்கா ளிந்த
நெறிக்க ணெடிதூழி வாழ்வீர்—பிறித்தெம்மைப்
போனுரைக் காட்டுதிரோ வென்னுப் புலம்பினள்
வானுடர் பெற்றிலா மான். 19

### தமயந்தி ஒரு பாம்பினிடம் சேரல்

வேட்ட கரியை விழுங்கிப் பெரும்பசியால்
மோட்டு வயிற்றரவு முன்ருேன்ற—மீட்டதனை
ஓரா தருகணைந்தா ளுண்டே னறற் கூந்தல்
போரார் விழியாள் புலர்ந்து. 20

### அருஞ்சொற்பொருள்

1. கல் + நிறத்த - கன்னிறத்த, நிறத்த - தன்மை வாய்ந்த, பொன் + நிறத்த - பொன்னிறமுள்ள, வஞ்சிப்பான் - வஞ்சகம் செய்வதற்கு, வேண்டி - விரும்பி.

2. துழாய் - துளபமாலை, முகிலை - மேகம் போன்ற இராமனை, மயில் - மயில் போன்ற சீதை, வாயாள் - வாய்மொழியை உடையவளாகிய தமயந்தி.

3. திரை - அலைகள், பொர - மோத, பவளம் - பவளக்கொடிகள், வளைத்தாய் - சங்குகளாகிய தாய்கள்.

4. அந்தரம் - ஆகாயம், பொன் நாடு மால் நிறத்த - பொன்னும் அடைதற்கு எண்ணுகின்ற பெருமை வாய்ந்த நிறமுடைய.

5. கள் - தேன், ஆதரித்த - விரும்பிய, காவி - நீலமலர்.

6. புகலிடம் - தங்குவதற்கு ஏற்ற இடம், ஆம் - உள்ளது, இருள் வழி - இருள் சூழ்ந்த பாதை, மண்டபம் - கொலு மண்டபம், கண்டான் - கண்டிருந்த நளன்.

7. மூரி - மந்தமான, வலிய; போதராய் - வருவாய், புலர்ந்து - வாடி.

8. திருமேனி வைத்து - அழகிய உடலைப் படுக்க வைத்து, துயில்கை - உறங்குவது.

9. கூரிருளில் - மிகுந்த இருட்டில், குறித்து - எண்ணி, எய்தியது - சேர்ந்திருப்பதாகிய.

10. இகல் - போர் செய்வதில் வலிமை, கண்ணியது - நினைத்தது, காய் - சினக்கின்ற, பண் - இசைப்பாடல், கேள் - உறவு, தேன் + மொழி - தேமொழி, கிளரொளி - விளங்குகின்ற ஒளி.

11. முதலோடும் - வேரோடும், பற்றி - பிடித்து, தெரிந்தான் - எண்ணிப் பார்த்து.

12. அடுபால் - காய்ச்சின பால், தோயல் - தோய்ந்த தயிர், காலன் வடிவு ஆய - எமன் உருவமான.

13. கோ - சிறந்த, காதல் அன்பு - ஆசையும் பக்தியும், ஏதிலன் - அயலான்.

14. கால் + நகம் = கானகம், சிதைய - தேய.

15. வெய்ய - கொடிய, அமளி - படுக்கை, கையரிக் கொண்டு - தேடி, இனமேதி - கூட்டமாயுள்ள எருமைகள்.

16. ஏனம் - பன்றிகள், கிளைக்கும் - கிண்டுகின்ற, குண்டுநீர் -

ஆழமான நீர்வளம், நீர்குண்டு - நீரையுடைய குளங்கள் எனினும் ஆம், பாவை - தமயந்தி.

17. வெய்யோன் - சூரியன், வாவுபரி - தாவுகின்ற குதிரை, குலம் - இனம்.

18. என் என்னுது என் என்னும் - உனக்கு வந்த துயரம் என்ன என்று கேளாதது என்ன காரணம் என்று சொல்வாள், மன் - அரசே, என்ன - என்று கூறி.

19. வெறித்த - பயந்து நின்ற, வான்நாடர் - தேவலோகத்தில் வாழும் தேவர், பெற்றிலா - பெறமுடியாத, ஊழி - உலக முடிவுக் காலம் வரை.

20. வேட்ட - விரும்பின, மோட்டு வயிறு - பருத்த வயிறு, மீட்டு - திரும்பிப் பார்த்து, ஓராது - அறியாமல், அறல் - கருமணல் போன்ற, போர் ஆர் - காதணிகளோடு மோதிப் போர்த்தொழில் புரிகின்ற, புலர்ந்து - வாடி.

### வினக்கள்

1. புழேந்திப் புலவரின் வரலாற்றுக் குறிப்புத் தருக.
2. நளவெண்பா—இப்பெயர் வரக் காரணம் என்ன ?
3. தமயந்தி நளனைப் பறவையைப் பற்றித் தா எனக் கேட்டது எதனை ஒத்திருந்தது ?
4. நளனுடைய நிடத நாடு எவ்வாறு சிறப்பிக்கப்பட்டு உள்ளது ?
5. பறவை நளனை நோக்கிக் கூறியது யாது ?
6. பாழ் மண்டபத்தில் நளன் தமயந்தியை நோக்கி யாது கூறினன் ?
7. இருவர்க்கும் ஒருயிர் போல் இருந்தது எது ?
8. நளன் ஆடையை அரிதலைப் புலவர் எவ்வாறு கூறியுள்ளார் ?
9. நளன் கானகத் துறையும் தெய்வங்களை நோக்கி வேண்டியது யாது ?
10. நளனைப் பிரிந்த தமயந்தியின் அவலநிலையை விளக்கி எழுதுக.
11. பொழுது புலர்தலைப் புலவர் எவ்வாறு வருணித்துள்ளார் ?
12. கலி நளனை எவ்வெவ்வாறு வஞ்சித்தான் என்பதை விளக்குக.
13. (1) மேருவரைத் தோளான் விரவார், (2) வான்முகிலும் மின்னும் வறுநிலத்து வீழ்ந்தது, (3) ஒருயிர், (4) அடுபாலின் தோயல் கடைவார் தம் கை—இந்த உவமைகளை விளக்கி உவமேயத் தோடு பொருத்துக.
14. இடம் சுட்டிப் பொருள் விளக்குக :
    (1) " நன்றுடு தோற்பித்தோ னுனே "
    (2) " நீயுமினிக் கண்மேல் துயில்கை கடன் "
    (3) " எய்து துயரக் கரை காணேன் "
15. புகழேந்திப் புலவர் நன்றியறிதல் உள்ளவர் என்பதை ஒரு சான்றுல் விளக்குக.

பிற்காலம்

## 3. திருவிளையாடற் புராணம்

### மாமனாக வந்து வழக்குரைத்த படலம்

திருவிளையாடற் புராணம் என்பது மதுரையில் எழுந்தருளி உள்ள சோமசுந்தரக் கடவுளுடைய திருவிளையாடல்களைக் கூறும் புராணம் எனப் பொருள்படும். இந்நூல் மதுரைக் காண்டம், கூடற்காண்டம், திருவாலவாய்க் காண்டமென மூன்று காண்டங்களை உடையது.

திருவிளையாடற் புராண ஆசிரியர் பரஞ்சோதி முனிவர். அவர் வேதாரணியம் என வழங்கும் திருமறைக் காட்டில் மீனாட்சி சுந்தர தேசிகருக்குத் திருமகனாராகத் தோன்றினார். சைவ வேளாள மரபைச் சேர்ந்தவர். கல்வி, அறிவு, இறை அன்பு முதலியவற்றில் சிறந்தவர். இவர் மதுரைப் பதிற்றுப் பத்தந்தாதி, போற்றிக் கலிவெண்பா முதலிய வேறு நூல்களையும் இயற்றி யுள்ளார். இற்றைக்குச் சுமார் 350 ஆண்டுகளுக்கு முன்பிருந் தவர்.

#### தனபதியும் சுசீலையும் இல்லறம் நடாத்தல்

கன்னிநான் மாடக் கூடற்
 கடிநகர் வணிக மாக்கள்
தன்னில்மா நிதிக்கோ னன்னான்
 தனபதி யென்னும் பேரான்
மன்னினான் ; அனையான் கற்பின்
 மடவரற் சுசீலை யென்பாள்
பொன்னி நாண் முளரிச் சேக்கைப்
 புண்ணியத் திருவி னன்னாள். 1

#### தனபதி மருமகனை மகவாகக் கொள்ளல்

எனவிவர் தமக்கு மைந்தற்
 பேறின்றி யிரங்கு நாளில்
தனபதி மருகன் தன்னைத்
 தகவுசால் மகவாக் கொண்டு

மனமகிழ் சிறப்பா னல்க
மனைவியுந் தொழுது வாங்கிப்
புனைவன புனைந்து போற்றிப்
பொலிவுற வளர்த்துக் கொண்டாள். 2

### தனபதி தங்கையோடு பூசல் விளைத்தல்

தனபதி மகப்பே றற்று
ஞயினும் தணவாக் காதல்
மனைவிமேல் வைத்த வாசை
மயக்கினுல் வருந்தி யீன்ற
தனையனை மகவாத் தந்த
தங்கைமேற் றீராப் பூசல்
வினைவிளைத் தொழுக வோர்நாள்
இளையளும் வெகுண்டு சொல்வாள். 3

### தங்கை ஏசத் தனபதி தவமியற்றச் செல்லல்

" பெருமித முனக்கேன்? பிள்ளைப்
பேறற்ற பாவி! நீ என்
அருமைநன் மகனு லன்றோ
இருமையு மடைவா " யென்னப்
பெரிதுநா ணடைந்து மேலைக்
காயினும் பிள்ளைப் பேறு
தருதவம் புரிவே னென்னுத்
தனபதி தவமேற் செல்வான். 4

### தனபதியின் செல்வத்தைத் தாயத்தார் கவர்தல்

தன்பெருஞ் செல்வ மெல்லாம்
மருமகன் தனக்கே யாக்கி
அன்புகொள் மனைவி யோடும்
அருந்தவ நெறியிற் சென்ருன்;
பின்பவன் வரவு தாழ்ப்ப
மருமகன் பெற்ற வெல்லாம்
வன்பினுல் வழக்குப் பேசி
வௌவினர் தாய மாக்கள். 5

### தாயத்தார் பொருள்கவரத் தங்கை கடவுளைச் சரணடைதல்

விளை நில னடிமை பைம்பூண்
வெறுக்கைநன் பசுக்க ளேனை
வளனுமாற் றலர்கைக் கொள்ள
வன்சிறை யிழந்த புட்போல்
தளர்வுறு மகனுந் தாயும்
சார்பிலார் தம்ம னேர்க்கோர்
களைகணு யிருக்குங் கூடற்
கடவுளே சரண மென்னு. 6

### கோயில் வந்து சோமசுந்தரரை வணங்குதல்

வந்துவா னகடு போழ்ந்த
மணிமுடி விமானக் கோயில்
சுந்தர நாதன் பாதத்
துணைதொழு திறைஞ்சி "யார்க்கும்
தந்தையும் தாயு மாகும்
தம்பிரான் ! நீயே எங்கட்கு
எந்தையும் யாயும்" என்னு
விரங்கிநின் றினைய சொல்வாள் : 7

### வணிகன் தங்கை கடவுளிடம் தன் குறையை முறையிடல்

"என்மகன் றன்னை மைந்தன்
இன்மையா லெவருங் காணத்
தன்மக னுகக் கொண்டு
தகுதியா லன்றே காணி
பொன்மனை பிறவு நல்கிப்
போயினன் என்முன் ; இப்பால்
வன்மையால் தாயத் தார்கள்
அவையெலாம் வௌவிக் கொண்டார். 8

ஒருத்தி நான் ; ஒருத்திக் கிந்த
வொருமகன் ; இவனும் தேரும்
கருத்திலாச் சிறியன் ; வேறு
களைகணும் காணேன் ; ஐய !

அருத்திசால் அறவோர் தேரு
மருட்பெருங் கடலே! யெங்கும்
இருத்திநீ யறியாய் கொல்லோ!''
என்றுபார் படிய வீழ்ந்தாள். 9

**தங்கை கனவில் கடவுள் தோன்றிச் சொல்லல்**

''புலர்ந்தபின் தாயத் தோரைப்
புரவல னுணை யாற்றல்
வலந்தரு மன்றத் தேற்றி
மறித்தனை யிருத்தி; யாம்போந்து
அலந்தரு மறிவான் மூத்தோர்
அனைவரு மிசைய வந்தச்
சலந்தரு வழக்குத் தீர்த்துத்
தருகுவம்; போதி'' யென்றூர். 10

**பொழுது புலர்ந்தபின், வணிகப் பெண் தாயத்தாரை நீதிமன்றத்திற்கு அழைத்தல்**

''அட்டில்வாய் நெருப்பி டேல்; ஓர்
அடியிடேல்; அறத்தா றன்றிப்
பட்டிமை வழக்கால் வென்று
போகொட்டேன்; பலருங் கேட்ப
இட்டனன் அரச னுணை;
யறத்தவி சேறி யான்ருேர்
ஒட்டிய படிகேட் டெங்கள்
உரிப்பொருள் தந்து போமின்.'' 11

**தாயத்தார் அவளை வருத்த, அவள் நீதிமன்றம் சேர்ந்து முறையிடல்**

என்றனள் மறித்த லோடு
மிழுக்குரை யாடி வைது
வன்றிறல் வலியார் தள்ளி
யடித்தனர்; மைந்த னேடும்
சென்றவள் ''முறையோ!'' வென்னுத்
திருந்தறத் தவிசி னேர்முன்
நின்றுரை யாடி னுள்; கேட்
டறிந்தனர் நீதி நூலோர். 12

**இறைவன் தனபதி வடிவந் தாங்கி முறையிட்டுக் கொண்டு நீதிமன்றம் வரல்**

“அரசனிங் கில்லை கொல்லோ !
ஆன்றவர் இல்லை கொல்லோ !
குரைகழல் வேந்தன் செங்கோல்
கொடியதோ ? கோதில் நூல்கள்
உரைசெயும் தெய்வந் தானும்
இல்லைகொல் ! உறுதி யான
தருமமெங் கொளித்த தேகொல் !”
என்றறத் தவிசிற் சார்வார். 13

**அங்கு வந்திருந்த தாயத்தார்கள் தனபதியைக் கண்டு அஞ்சி வெட்கப்படல்**

தனபதி வரவு நோக்கி
வஞ்சனைத் தாயத் தார்கள்
இனையுறு மனத்த ராகி
விம்மித மெய்தி வெல்லும்
மனவலி யிழந்து பண்டு
வழக்கலா வழக்கால் வென்ற
வினைநினைந் துள்ள மச்சம்
நாணினுல் விழுங்கப் பட்டார். 14

**மாமனாக வந்த இறைவன், தங்கையையும் மருமகனையும் கண்டு மனம் வருந்துதல்**

குடங்கையின் நெடுங்க ணாளும்
குமரனும் வணிகர் தாளில்
தடங்கணீர் ஆட்ட வீழ்ந்தார் ;
தடக்கையா லெடுத்துப் புல்லி
மடங்கலே றனையார் தாமு
மற்றவர் தமைத்தங் கண்ணீர்
நெடுங்கடல் வெள்ளத் தாழ்த்திக்
குமரனை நேர்ந்து நைவார். 15

### அணிகலன்களைத் தாயத்தார் கவர்ந்தனரே என்று அவர் புலம்பல்

ஐம்படை மார்பிற் காணேன்!
சிறுசிலம் படியிற் காணேன்;
மொய்ம்பிடை மதாணி காணேன்;
முகத்தசைச் சுட்டி காணேன்;
மின்படு குழைகள் காணேன்;
வெற்றுடல் கண்டே னப்பா!
என்பெறு மென்று பிள்ளைப்
பணிகளும் கவர்ந்தா ரென்ன. 16

### சோமசுந்தரரை நோக்கிக் கும்பிட்டுப் புலம்பல்

மங்கல மாட மோங்கும் மதுரைநா யகனை நோக்கிச்
செங்கரஞ் சிரமேற் கூப்பி மாணிக்கந் தேற்றி விற்கும்
எங்குல வணிக ரேறே, எம்மனோர் வழக்கை இந்தப்
புங்கவ ரிடனுத் தீர்த்துத் தருகெனப் புலம்பி யார்த்தார்.

### நீதி மன்றத்தாரை நோக்கிக் கூறல்

ஆவலித் தழுத கள்வர் வஞ்சரை வெகுண்டு நோக்கிக்
காவலன் செங்கோல் நுண்ணூல் கட்டிய தருமத் தட்டில்
நாவெனும் துலைநா விட்டெம் வழக்கையும் நமராய் வந்த
மேவலர் வழக்குந் தூக்கித் தெரிகென விதந்து சொன்னார்.

### நீதி மன்றத்தார் வழக்கைக் கேட்டு முடிவு தெரிவித்தல்

நரைமுது புலியன் ஞன்சொற்
கேட்டலும் நடுங்கிச் சான்றோர்
இருவர்சொல் வழக்குமேற் கொண்டு
அனுவதித் திரண்டும் நோக்கித்
தெரிவழி இழுக்கும் ஞாதி
வழக்கெனச் செப்பக் கேட்டு
வெருவினர் தாயத் தார்கள்;
வலியரின் வேறு சொல்வார். 19

**தாயத்தார், "வந்தவர் தனபதி அல்லர்" என, இறைவன், தானே தனபதி என்று உறுதிப்படுத்தல்**

தவலருஞ் சிறப்பி னூன்ற
தனபதி வணிக ரல்லர்
இவரென அவையங் கேட்ப
இருகையும் புடைத்து நக்குக்
கவளமா னுரித்துப் போர்த்த
கண்ணுதல் வணிகர் கோமான்
அவரவர் குடிப்பேர் பட்டங்
காணிமற் றனைத்துங் கூறும். 20

**அவையோர், அவரே தனபதி எனத் தாயத்தார் பயந்து ஓடுதல்**

அனையது கேட்ட ஆன்றோர்
அனைவரும் நோக்கி, "அந்தத்
தனபதி வணிகர் தாமே
இவரெ"னச் சாற்ற லோடும்
மனவலித் தாயத் தார்தம்
வழக்கிழுக் கடைந்தது; "ஈது
நனைவழி வேம்பன் தேரின்
தண்டிக்கும் நம்மை" என்னு. 21

**நீதிமன்றத்தார் தனபதி செல்வத்தை மருமகனுக்கு உரிமை ஆக்கித்தர, இறைவன் மறைதல்**

அனையவர் போக, நின்ற
அறநவில் மன்றத் துள்ளோர்
தனபதி வணிகர் தந்த
தனமெலாம் தத்த மைந்தற்கு
எனமனை எழுதி வாங்கி
ஈந்தனர்; ஈந்த எல்லை
மனமொழி கடந்த நாய்கர்
மறைந்து தங்கோயில் புக்கார். 22

—பரஞ்சோதி முனிவர்

## அருஞ்சொற்பொருள்

1. கடி நகர் - காவல் உள்ள நகரம் (மதுரை), மாநிதிக்கோன் - குபேரன், கன்னி - அழியாத, நான் மாடக் கூடல் - மதுரை, பொன்னி - அழகிய, நாள்முளரி - அன்று மலர்ந்த தாமரைப்பூ, சேக்கை - இருப்பிடம், திருவின் அன்னாள் - இலக்குமியை ஒத்தவள்.

2. மைந்தற்பேறு - புத்திரப்பேறு, தகவுசால் - தகுதிவாய்ந்த, புனைவன - அணியத் தகுந்த அணிகலன்கள்.

3. தணவா - நீங்காத, ஆசை மயக்கினால் - ஆசை காரணமாக ஏற்பட்ட அறியாமையால், தீரா - நீங்காத, பூசல்வினை - சண்டையாகிய தொழில்.

4. பெருமிதம் - செருக்கு, மேலைக்கு - மறுபிறவியில்.

5. தாழ்ப்ப - தாமதிக்க, வன்பினால் - பலவந்தமாக, தாயமாக்கள் - பங்காளிகள், வௌவினார் - கவர்ந்தனர்.

6. வெறுக்கை - செல்வம், மாற்றலர் - பகைவர், புள் - பறவை, சார்பு - ஆதரவு, களைகண் ஆய் - ஆதரவுஆக.

7. வான் அகடு - ஆகாயத்தின் நடுவிடம், இனைய - இத்தன்மையான சொற்கள், யாய் - தாய்.

8. பொன் - செல்வம், அழகிய; முன் - முன்னோன்.

9. தேரும் கருத்து - ஆராயும் அறிவு, அருத்திசால் - அன்பு மிகுந்த.

10. புரவலன் - பாண்டிய மன்னன், வலம் - வெற்றி, மறித்தனை - அகலவிடாது, அலந்தரு - நிரம்பிய, இசைய - உடன்பட, சலம்தரு வழக்கு - பொய்வழக்கு.

11. அட்டில் - அடுப்பு, பட்டிமை - பொய், உரிப்பொருள் - உரிமைப் பொருள்.

12. வன்திறல் - மிக்க வலிமை.

13. கோது - குற்றம், நூல்கள் - ஈண்டு வேத ஆகமங்கள், சார்வார் - சேருவார்.

14. இனையுறு - வருந்துகின்ற, விம்மிதம் - வியப்பு, வழக்கலா வழக்கு - பொய் வழக்கு.

15. குடங்கை - உள்ளங்கை, ஆட்ட - நனைக்க, மடங்கல் ஏறு - ஆண் சிங்கம், நேர்ந்து - பார்த்து.

16. ஐம்படை - ஐம்படைத்தாலி, மொய்ம்பு - மார்பு, மின் - ஒளி, பணிகள் - அணிகள்.

17. புங்கவர் - சிறந்தோர்.

18. ஆவலித்து - வாய்விட்டுப் புலம்பி, மேவலர் - பகைவர், தூக்கி - ஆராய்ந்து.

19. அனுவதித்து - முன்சொல்லியதைப் பின்னும் சொல்லி, தெரி வழி - ஆயும்போது, இழுக்கும் - தவறுதலாகும்.

20. தவல் - குற்றம், அவையம் - அவை, கவளமான் - சோற் றுருண்டை தின்னும் யானை, கண் + நுதல் - (கண்ணுதல்) சிவ பெருமான்.

21. நனைவழி - தேன் சொரிகின்ற, வேம்பன் - வேப்பமாலை அணிந்த பாண்டியன், தேரின் - அறியின்.

22. தத்த மைந்தர் - சுவீகாரப் பிள்ளை, மனை - சாசனம், நாய்கர் - சோமசுந்தரக் கடவுள்.

## வினாக்கள்

1. தனபதி தன் மருகனை ஏன் மகவாகக் கொண்டான்?
2. தனபதி தங்கைமீது பூசல் விளைக்கக் காரணம் என்ன?
3. அவன் தவம் செய்யச் சென்றது ஏன்?
4. 'வன்சிறை இழந்த புட்போல்'—உவமானத்தை விளக்கி உவமேயத்தோடு பொருத்துக.
5. வணிகன் தங்கை சோமசுந்தரக் கடவுளிடம் என்ன சொல்லி முறையிட்டாள்?
6. வணிகப் பெண்ணின் கனவில் சோமசுந்தரக் கடவுள் சொன்னது என்ன?
7. பொழுது புலர்ந்ததும், தாயத்தாரிடம் வணிகப் பெண்வந்து கூறியவை யாவை?
8. மாமனாக வந்த இறைவன் தன் மருகன்மீது அணிகலன்களைக் காணுமையால் யாது கூறிப் புலம்பினான்?
9. மாணிக்கம் தேற்றி விற்கும் எங்குல வணிகரேறே—இதில் அடங்கிய கதை யாது?
10. நீதிமன்றத்தார் கூறிய முடிவு யாது?
11. இறைவன் தானே தனபதி என்பதை நீதிமன்றினர் முன்பு எவ்வாறு உறுதிப்படுத்தினார்?
12. இடஞ்சுட்டிப் பொருள் கூறுக:
    (1) நனைவழி வேம்பன் தேரின் தண்டிக்கும்.
    (2) இரண்டும் நோக்கித் தெரிவழி இழுக்கும்.
    (3) நீயே எங்கட்கு எந்தையும் யாயும்.
13. இப் பாடத்தால் நீவிர் அறியும் நீதி யாது?

பிற்காலம்

# 4. தேம்பாவணி

## மகவருள் படலம்

தேம்பாவணி என்னும் தொடர், தேம்பா+அணி எனப் பிரிந்து நின்று, வாடாத பூமாலே போன்ற பாமாலேயை உடையது எனப் பொருள்படும். இந்த நூல் ஏசுநாதரின் வளர்ப்புத் தந்தை ஆகிய சூசையப்பர் வரலாற்றை விளக்குவதாகும். இது முப்பத் தாறு படலங்களே உடையது.

இதனே இயற்றியவர் கான்சடென்டின் சோசப் பெசுகி என்பவர். இவர் வீரமாமுனிவரெனத் தமிழ் நாட்டவரால் வழங் கப்படுகிருர். இவர் மேனுட்டினர். இத்தாலி நாட்டில் காசிடிகிலி யோனி என்னும் ஊரில் 1680ஆம் ஆண்டில் தோன்றினுர். இந்தி யாவிற்குக் கிறித்தவ மத போதகராய் வந்து, தமிழ் நாட்டில் தங்கியபோது, தமிழைத் தீதறக் கற்ருர். தமிழில் அகராதி, இலக் கண நூல், செய்யுள் நூல்கள், வசன நூல்கள் முதலியவற்றை எழுதித் தமிழ்த் தொண்டு புரிந்தார். இவர் இந்தியாவில் வாழ்ந்த காலம் 18ஆம் நூற்ருண்டின் முற்பகுதி யாகும்.

### இயேசுநாதர் தோற்றம்

உலகம் மூன்றினும் உவமை நீக்கிய
இலயை மூன்றினும் இழிவில் கன்னியாய்
அலகில் மூன்றினுள் நடுவ மைந்தனே
நிலவு மூன்றினும் நிறப்ப ஈன்றனள். 1

மாத மார்கழி வைகல் ஐயைந்தாய்
ஏதி லாநிசிக் கிருத்தை மூவைந்தாய்
ஆதி நாளென ஆதி நாதனேக்
காதல் நாயகி களிப்பின் நல்கினுள். 2

### இரவு நீங்கப் பகலவன் தோன்றல்

தோன்றி ஞனென நசையுள் தூண்டினுற்
போன்றி வாவுதேர் முடுக்கிப் போயொளி
கான்றி ராசிவம் களிப்ப மாலிஎல்
ஈன்றி ராவன்று குறுகிற் றென்னவே. 3

### தேவன் தோற்றத்தால் உலகில் காணப்பட்ட நன்னிமித்தங்கள்

பேயும் போயின ; அமரர் பிந்தினர் ;
தீயும் போயின ; அறங்கள் தேறின ;
நோயும் போயின ; நாற்கள் தேர்ந்தன ;
தோயும் ஓகையில் துளங்க வையமே. 4

பாய்ந்த வான்தருப் பருவ மின்றியும்
ஈய்ந்த தீங்கனி இயையப் பூத்தலும்
வேய்ந்த நாயகன் விளைத்த நன்றியால்
வாய்ந்த ஓகையின் முறுவல் மானுமே. 5

### தேவதூதர் குழந்தையை ஏந்தித் தாய்க்குக் காட்டல்

சொக்க ளாவுருத் தோன்றிய தோன்றலை
மிக்க யேலொடு காபிரி யேல்விழைந்து
ஒக்க ஏந்தினர் ; ஒக்கவும் தாய்முனர்
மக்கள் நாதனை மாண்பெழக் காட்டினர். 6

### மரியன்னையின் மகிழ்ச்சி

பொதிர்கொள் பூமணம் போன்மக வீன்றனள்
கதிர்கொள் சேயொடு கண்கள் கலந்தகால்
எதிர்கொள் வெஞ்சுடர் காண்முழு இந்தென
முதிர்கொள் இன்ப முகத்து விளங்கினள். 7

### திருக்குமாரன் தாயே, “நீயும் என்னைப் போன்றிரு” என அருளல்

தன்னை ஈன்றினி தாய்தனை நோக்கலொடு
“அன்ன, நீயுமென் சாயலின் ஆ”கென
மின்னை வீறிய தோன்றல் விளம்பினன்
என்னை ஆள்பவள் இன்பலை மூழ்கவே. 8

### அன்னை மரியின் அன்புச் செயல்கள்

காந்தள் நேரிய செங்கரத் தேந்தினள் ;
ஏந்த மார்பில் இறுகவும் சேர்த்தனள் ;
வாய்ந்த பூம்பதம் நீவி வணங்கினள் ;
ஆய்ந்த நூற்கடந்து ஆருணர் வெய்தினள். 9

### மரியம்மையாரின் அழைப்பிற் கிணங்கிச் சூசையப்பர் வந்து தேவகுமாரனைக் காணல்

இந்து நேர்நுதல் மீன்கள் நேர்விழி
இண்டை நேர்முக நீர்மையால்
கந்த நேர்நளிர் தாதுநேர் உடல்
காட்டு நாதனை, அம்புயச்
சந்தம் நேரிய கன்னி நேர்கையில்
தாம நேரிய முத்தெனச்
சிந்து நேர்நயம் மூழ்கு சீர்மையில்
தேற நோக்கினன் சூசையே. 10

### சூசையப்பர் தம் கையில் தேவகுமாரனை வாங்கி மகிழ்தல்

கைத்தலத்தில் எடுத்து மார்பொடு
காதல் ஓங்க அணைத்தலும்
முத்தமிட்டலும் நோக்கில் தீட்டலும்
முற்ற நீரில் நனைத்தலும்
சித்தமுற்றலும் நாண்ம லர்க்கழல்
சென்னி யின்மிசை வைத்தலும்
இத்திறத்திலும் உண்ம கிழ்ந்துறும்
இன்ப மெல்லையு மில்லையே! 11

### பின்னர்த் தேவகுமாரன் கன்னித் தாயின் கையில் கொடுக்கப்பட்டு உறங்க, சூசையப்பர் மகிழ்ந்து துதித்தல்

“கண்பட் டுறங்கக் கண்டேனே
கருணை கரனே! களிக்கடலே!
புண்பட் டுளையும் நெஞ்சிற்கோர்
பொருவா மருந்தே! அருளன்பே!
மண்பட் டலையும் கடலன்ன
மருளென் நெஞ்சிற் குயிர்நிலையே!
எண்பட் டுயர்ந்த செல்வரசே!
எம்மேல் இரங்கும் தயைஇதுவோ!” 12

"அறந்தாய் தந்தை சுற்றமுமற்
றனைத்தும் நீயே ; கதி நீயே ;
பிறந்தாய் உலகிற்கு உயிரன்னாய் !
பிறந்தெம் துயரும் எம்பகையும்
துறந்தாய் ; எங்கள் சிறைதீர்த்தாய் ;
துகள்பூட் டியவீட்(டு) உயர்வாயில்
திறந்தாய் ; இவையா வருமறியத்
திறன்செய் தருள்செய் திரங்காயோ ?" 13

—வீரமாமுனிவர்

அருஞ்சொற்பொருள்

1. உவமை நீக்கிய - தனக்கு உவமை 'இல்லாத, கன்னி என்பத னோடு கூட்டுக, இலயை மூன்றினும் - பிள்ளையைப் பெறு முன்னும், பெறும் போதும், பெற்றபின்னும் ஆகிய முக்காலத்தும், அழிவு இல் - அழியாத, அலகு இல் - அளவு இல்லாத, 'மூன்றினுள் - பிதா, சுதன், இசுபிரீத்து சாந்து என்னும் கருத்தாவாகிய மூன்று ஆட்களில், நடுவ மைந்தனை - இரண்டாமாள் ஆகிய சுதனை, மூன்றினும் - முச்சுடரினும், நிறப்ப - விளக்க.

2. வைகல் ஐயைந்தாய் - இருபத்தைந்தாம் நாள், ஏது - குற்றம், இருத்தை மூவைந்தாய் - பதினைந்து நாழிகை ஆகி, ஆதிநாள் - ஞாயிற்றுக்கிழமை, நல்கினள் - தந்தாள்.

3. தோன்றினன் என - கடவுள் மகனாய்ப் பிறந்து தோன்றினன் என்று கருதி, நசை உள் - தன் உள்ளத்தில் (அவனைக் காணும்) ஆசை, வாவு தேர் - தாவுகின்ற (குதிரைகள் பூட்டிய) தேர், ஒளி - கிரணம், கான்று - வீசி, இராசிவம் - தாமரை, ராஜீவம் என்ற சொல் திரிந்து வந்தது, மாலி - சூரியன், எல் - பகல், ஈன்று + இரா + அன்று எனப் பிரிக்க.

4. பிந்தினர் - தொடுத்து வந்தனர், தீயும் - தீயவை, தேறின - தேறி வளர்ந்தன, தேர்ந்தன - தெளிவடைந்தன, தோயும் - பொருந்திய.

5. பாய்ந்த - வான்அளாவ ஓங்கிய, வான் - பெருமை வாய்ந்த, ஈய்ந்த - தந்த, தீங்கனி இயைய - இனிய பழங்களோடு பொருந்த, வேய்ந்த - (உலகில் மனிதனாகத்) தோன்றிய, விளைத்த நன்றியால் - உண்டாக்கிய நன்மைகளால், முறுவல் - புன் சிரிப்பு, மரங்கள் பூத் திருத்தல்... மகிழ்ச்சியால் புன் சிரிப்புச் சிரித்தாற்போன்று இருந்தது எனக் கொள்க.

6. சொக்கு அளாவு உரு - அழகு பொருந்திய வடிவம், மிக்கயேல், காபிரியேல் - தேவ தூதர்கள், ஒக்க - சேர, மாண்பு எழ - மாட்சிமை யோடு.

7. பொதிர்கொள் பூமணம்போல் - தான் குறைவுபடாமல் பூமுகை நறுமணம் வீசியதுபோல, ஈன்றனள் - கன்னித்தன்மை அழியாமல் பெற்றனள், கன்னித் தன்மை கெடாமைக்குப் பூமுகை உவமை, கதிர்கொள் - ஒளி வீசுகின்ற, எதிர்கொள் - எதிராக வந்து தோன்றிய, வெஞ்சுடர் காண் முழு இந்து - சூரியனைக் கண்ட பூரணசந்திரன், முதிர்கொள் - மிகுந்த, முகத்து - முகத்தோடு.

8. தன்னை ஈன்றினிதாய் தனை நோக்கலோடு - தன்னை ஈன்ற ஆய் தனை இனிது நோக்கலோடு எனக் கூட்டுக. நோக்கலோடு - நோக்கி, சாயலின் - போல, ஆக - இரு, இன்பலை - இன்பக்கடல், அலை - கடல்.

9. ஏந்த - ஏந்தி, நீவி - தடவி, ஆய்ந்த நூல் கடந்த ஆர் உணர்வு - ஆராய்ந்து உணர்ந்த நூல்களின் அறிவையும் கடந்த நிறைந்த உண்மை அறிவு.

10. நேர் - போன்ற, மீன்கள் - விண்மீன்கள், இண்டை - தாமரை, கந்தம் நேர் நளிர்தாது நேர் உடல் - நறுமணம் பொருந்திய குளிர்ந்த மகரந்தப் பொடிகளை உடைய பூவை ஒத்த உடம்பு, சந்தம் - அழகு, தாமம் நேரிய முத்து - ஒளி வீசுகின்ற முத்து, தாமரையில் முத்துப் போலக் கன்னித்தாயின் கையில் தேவகுமாரன் இருந்தான் என அறிக.

11. காதல் - அன்பு, நோக்கில் தீட்டல் - கண்களில் ஒற்றிக்கொள்ளுதல், நாண்மலர் - அன்று மலர்ந்த தாமரை மலர், கழல் - பாதங்கள், கழல் - தனியாகு பெயர்.

12. பட்டு - மூடி, களி - இன்பம், உளையும் - வருந்தும், பொருவா - இணை அற்ற, மருந்து - அமுதம், மருள் - மயக்கம், அறியாமை; எண் பட்டு - எண்ணைக் கடந்து.

13. கதி - புகலிடம், பகை - பகைவர், துகள் பூட்டிய - பாவத்தால் பூட்டப்பெற்ற, இவை - இவற்றை, திறன் - வல்லமை, அருள்செய்து - கருணைகொண்டு.

## வினக்கள்

1. கன்னி மரியம்மை தேவகுமாரனை எப்பொழுது ஈன்முள்?

2. மாலி தோன்றியது எவ்வாறு விளக்கப்பட்டுளது?

3. தேவகுமாரன் தோன்றிய காலத்தில் உலகில் உண்டான நன்னிமித்தங்கள் யாவை?

4. மாண்பெழக் காட்டினர்—யார்? யாரை?

5. எதிர்கொள் வெஞ்சுடர் காண் முழு இந்து: இதனை உவமேயத்தோடு விளக்குக.

6. மரி அன்னையின் அன்புச் செயல்கள், குமாரனைக் கையில் ஏற்ற சூசையப்பரின் அன்புச் செயல்கள்—இவற்றை விளக்குக.

7. தாம நேரிய முத்து—இது எதனை விளக்க வந்தது?

8. சூசையப்பர் தேவ குமாரன் உறங்குகையில் எவ்வாறு துதித்தார்?

## பிற்காலம்

# 5. அரிச்சந்திர புராணம்

## மயான காண்டம்

அரிச்சந்திர புராணம் என்பது அரிச்சந்திரனைப்பற்றிய பழைய வரலாறு என்று பொருள்படும். புராணம் - பழைய வரலாறு. சூரிய குலத்தோன்றல் ஆகிய அரிச்சந்திரன் வாய்மையால் உலகப் புகழ் எய்தியவன்.

அரிச்சந்திரனுடைய வரலாற்றைப் புராணமாகப் பாடியவர் நல்லூர் வீர கவிராயர் ஆவர். இவர் விரைவில் கவிபாடும் திறம் பெற்று விளங்கினமையால் ஆசுகவிராயர் எனப் புகழப்பட்டார். இவர் திருநெல்வேலி மாவட்டத்தில் நல்லூர் என்ற ஊரில் பிறந்து வாழ்ந்தவர். சைவ மதத்தினர். இவர் காலம் கி. பி. 15ஆம் நூற்றுண்டின் பிற்பகுதியும், 16 ஆம் நூற்றுண்டின் முற்பகுதியும் ஆகும்.

பின்வரும் பகுதி மயான காண்டத்தில் உள்ளது. காசி மன்னனின் மகவைச் சந்திரமதி கொன்றதாகக் கொலைக் குற்றம் சாட்டப்பட்டாள். அவளை அம்மன்னவன் ஆணையால் அரிச்சந்திரன் கயிற்றுல் கட்டிக் கொலைக்களத்திற்குக் கொண்டு செல்கிறுன்.

### அரிச்சந்திரன் புரிசையின் புறத்தே வருதல்

'என்ன பாதகம் செய்தனம் !' என இறை நகைத்துக்
கன்னி கைகளைக் கட்டிய கயிறுதான் பிடித்துத்
துன்னும் மாமணித் தோரண வாயிலைக் கடந்து,
பொன்னின் மாநகர்ப் புரிசையின் புறத்துவந் திறுத்தான்.

### கௌசிகன் வந்து "ஒரு பொய் சொல்" எனல்

அந்த வேளையில் கௌசிகன் விரைந்து வந்து, "அரசே !
இந்த நோதக வெய்தல்என்? எனக்கு நீ முன்னம்
தந்த நாடு, யான் தந்திலேன் எனும்மொழி சாற்றி
உந்தம் நாடும்இவ் வுயிர்களும் பெறு"கென உரைத்தான்.

அரிச்சந்திரனும் சந்திரமதியும் அவனுக்கு மறுமொழி கூறல்

சேர நின்றவன் செப்பிய தாங்கவர் அன்றி
ஆரும் கேட்டிலர்; வசிட்டனும் அமரரும் அறிந்தார்;
வீரவேந்தனும் மங்கையும் அவனடி வீழ்ந்(து) ''இங்(கு)
ஆரை நீயிந்த ஏழைமைக் காட்செய்தி ?'' என்றார். 3

அவர்கள் ''வாய்மையே எமக்கு நோன்பு'' எனல்

'சேய்மை அண்மையில் உயிர்க்கொரு துணை எனச்சிறந்த
வாய்மை யால்அகம் தூய்மையாம் ; மற்றிலை ; புறத்தைத்
தூய்மை செய்வது நீர் அலால் சொல்லின்வே றுளதோ ?
நோய்மை செய்யினும், வாய்மையே நோன்பெமக்கறிதி.' 4

அவர்கள் '' உண்மை பிறழத் தரியேம் '' எனல்

'புலைய னும்விரும் பாதஇப் புன்புலால் யாக்கை
நிலைள னுமருண் டுயிரினும் நெடிதுறச் சிறந்தே
தலைமை சேர்தரு சத்தியம் பிறழ்வது தரியேம்;
கலைஉ ணர்ந்தநீ எமக்கிது கழறுவ தழகோ ?' 5

'' நரகினைச் சேர்ந்தாலும் உண்மையைக் கைவிடோம் '' எனல்

'இம்மை அம்மைவீ டெனமறை புலங்கொள இயம்பும்
மும்மை யும்தரும் முறையுடைத் தெனும்நிலை முரணி
எம்மை ஆழ்வயிற் றடக்கிமீட் டுமிழ்கலா எரிவாய்
வெம்மை கூர்நர குய்க்கினும் மெய்ம்மையை விடேமால்.' 6

அருந்தவன் அவர்கள் மொழிகேட்டு மறைந்துபோதல்

''பதிஇ ழந்தனம்; பாலனை இழந்தனம்; படைத்த
நிதிஇ ழந்தனம் இனிஎமக் குளதென நினைக்கும்
கதிஇ ழக்கினும் கட்டுரை இழைக்கிலேம்'' என்றார்;
மதிஇ ழந்து, தன் வாய்இழந் தருந்தவன் மறைந்தான். 7

இந்திரனுடன் கௌசிகன் இருத்தல்

மறைந்து போகலும் வாசவன் மாமுனி வனைக்கூய்,
''அறைந்த காரணம் அறைந்துபோ !'' என
[அருகழைத்தான் ;
நிறைந்த நாணமும் குறைந்தபார் வையும்உற நினைவு
குறைந்தி ருந்தனன் முகிலிடத் தவருடன் கூடி. 8

### அரிச்சந்திரன் மனைவியைத் தள்ளிக்கொண்டு சுடுகாட்டை அடைதல்

வாசத் தார்புனை வாசவ னுடன்முனி வைகப்
பாசத் தாள்கரம் பிணித்ததோர் பாசங்கை பற்றிப்
பேசத் தான்பெருன், பிணம்சுடு கோலினல் தள்ளி
நேசத் தார்மகன் கிடந்ததோர் நெடுநிலம் உற்ருன். 9

### கிழக்கு நோக்கி இருக்கச்சொன்ன தன் கணவனைச் சந்திரமதி வேண்டிக் கொள்ளல்

"வழக்கின் என்றும்நீ வழிபடு தெய்வத்தை வணங்கிக்
கிழக்கு நோக்கிஈண் டிரு" எனக் கிளிமொழி மடந்தை
பழக்கம் ஆனஅக் கணவனைப் பரவி, "என் ஆவி
இழக்கற் கஞ்சிநீ அறம்வழு வேல்" என இயம்பும். 10

"பொருந்தும் நீத்தத்தில் புற்புதவாழ்வைநீ மெய்யென்று
அருந்த வத்தையும் அறத்தையும் மெய்யையும் விடுத்து
வருந்தல் மன்னவ! வழிவழி சிறக்"கென வாழ்த்தி
இருந்த பின்சுடர் வாள்படை வலக்கையின் எடுத்தான். 11

### அரிச்சந்திரன் உண்மையின் உயர்வைக் கூறி வாள் வீசுதல்

"உலகு யிர்க்கெல்லாம் பசுபதி ஒருமுதல் ஆயின்,
அலகில் சீருடை அவர்மொழி மறைஎனின், அதன்கண்
இலக றம்பல வற்றினும் வாய்மைஈ டிலதேல்,
விலகு ருமல் அவ் வாய்மையே விரதமாக் கொளின்யான்."

### வீசியவாள் மாலையாய்ச் சந்திரமதி கழுத்தில் விழுதல்

"நெறியின் அன்னஎன் றனைவிடா நிறைஇவட் குளதேல்
இறுதி இன்மையைப் பெறுக; இல் எனின் இவள் இறுதி
பெறுக" என்றுவாள் வீசினன்; பேதைதன் கழுத்தில்
மறும ணத்திடும் மாலையாய் வீழ்ந்ததவ் வடிவாள். 13

### சந்திரமதியின் பொலிவு

படத்த காதபா டியாவையும் பட்டுளத் தழுத்தும்
திடத்தி னின்றுவாள் வெட்டினிற் பிழைத்தடு செழுந்தீப்
புடத்தி னின்றுமாற் றுயர்ந்தசெம் பொன்னெனப்பொலிந்
மடத்தின் தீர்ந்தொளிர் சந்திர மதிஎனும் அணங்கு.[தாள்

### அரிச்சந்திரன் மேம்பாடு உறுதல்

சடைபட் டோங்கிய முடிமுனி தனதுசூழ் வினையால்
அடைபட் டுறுபா டனைத்தையும் கடந்துசா ரணையினுல்
கடைபட் டானபின் செழுமணி என ஒளிகாட்டிக்
கொடைபட் டார்புகழ்க் கோமகன் விளங்கினன்குணத்தால். 15

—நல்லூர் வீரகவிராயர்.

### அருஞ்சொற்பொருள்

1. பாதகம் - பாவம், இறை - அரசன், கன்னி - சந்திரமதி, துன்னும் - நெருங்கிய, புரிசை - மதில், இறுத்தான் - சேர்ந்தான்.

2. வேலை - சமயம், கௌசிகன் - விசுவாமித்திரன், நோதகவு - துன்பம்.

3. சேர - அணுகி, ஏழைமை - அறியாமை, ஆட்செய்தி - அடிமைப்படுத்துகிருய்.

4. செய்மை - மறுமை, அண்மை - இம்மை, சொல்லின் - பேசுமிடத்து, நோய்மை - துன்பம்.

5. புன்புலால் யாக்கை - இழிவான மாமிச உடம்பு, நிலை எனு - நிலைத்திருப்பது என்று கருதி, நெடிது உறச் சிறந்த - மிக மிகச் சிறப்பு வாய்ந்த, தலைமை - முதன்மை, கழறுவது - சொல்வது.

6. புலம் கொள - அறிவு கொள்ளுமாறு, முரணி - மாறுபட்டு, மீட்டு உமிழ்கலா - திரும்ப வெளிவிடாத, எரிவாய் - நெருப்புப் பொருந்திய, உய்க்கினும் - வீழ்த்தினுலும்.

7. பதி - நகரம், கதி - வீடுபேறு, கட்டுரை - சொன்ன உறுதி மொழி.

8. உற - உண்டாக, நினைவு குறைந்து - நினைவு அழிந்து, முகிலிடம் - மேக மண்டலம், அவருடன் - இந்திரன் முதலிய தேவருடன்.

9. தார் - பூமாலை, வாசவன் - இந்திரன், பாசத்தாள் - அன்பினள், நேசத்து ஆர் - நேசம் பொருந்திய, மகன் - தேவதாசன், நெடுநிலம் - சுடுகாடு.

10. வழக்கின் - வழக்கப்படி, பரவி - துதித்து.

11. நீத்தம் - நீர்ப்பெருக்கு, புற்புதம் - நீர்க்குமிழி (போன்ற) வருந்தல்-வருந்தற்க, எதிர்மறை வியங்கோள் வினை. படை - ஆயுதம்.

12. பசுபதி - சிவன், 'ஒருமுதல் - ஒப்பற்ற முதற்கடவுள், இலகு - விளங்குகின்ற, விலகு உறுமல் - தவறுமல்.

13. நிறை - குணம், கற்பு; இறுதி - அழிவு, மறுமணம் - இரண்டாம் திருமணம்.

14. பாடு - துன்பங்கள், மடத்தின் தீர்ந்து - அறியாமை நீங்கி, உளத்து அழுத்தும் திடத்தின் நின்று - தன்மனத்தில் அழுத்தமாகக் கொண்ட உண்மை நோன்பில் நின்று.

15. சடைபட்டு - சடை பொருந்தி, சூழ்வினை - வஞ்சகச் செயல்களால், ஊறுபாடு - துன்பம், கொடைபட்டு - ஈகையைச் செய்து.

### வினுக்கள்

1. கௌசிகன் வந்து அரிச்சந்திரனிடம் கூறியது யாது ?
2. அரிச்சந்திரனும் சந்திரமதியும் கௌசிகனிடம் கூறிய மொழிகளைத் தொகுத்து வரைக.
3. சுடுகாட்டிற்குச் சென்ற அரிச்சந்திரன், சந்திரமதியை நோக்கி யாது கூறினன் ? அப்போது அவள் அவனுக்குக் கூறிய மெய்ம் மொழியாது ?
4. வாளை எடுத்த அரிச்சந்திரன், யாது கூறி அதனை வீசினன் ?
5. சாணையினல், கடைபட்டான பின் செழுமணி - இதனை விளக்கி உவமேயத்தோடு பொருத்துக.
6. இடம் சுட்டிப் பொருள் கூறுக :
   1. " அறைந்த காரணம் அறிந்துபோ."
   2. " கலை உணர்ந்த நீ எமக்கிது கழறுவது அழகோ ?"
   3. " ஆரை நீ இந்த ஏழைமைக் காட்செய்தி ?"

## இக்காலம்

# 6. குசேலோபாக்கியானம்

குசேலோபாக்கியானம் என்னும் தொடர், குசேல+உபாக்கியானம் எனப் பிரியும். குசேலனது வரலாற்றைக் கூறும் கிளைக் கதை என்பது இத் தொடரின் பொருள். உபாக்கியானம் - கிளைக் கதை. இக் கதை பாகவதத்தில் வருகிறது.

இந் நூலாசிரியர் வல்லூர் தேவராசப் பிள்ளை என்பவர். தொண்டை மண்டலத்தில் வல்லூரில் பிறந்தவர். சைவவேளாள குலத்தினர். திரிசிரபுரம் மகாவித்துவான் மீனட்சிசுந்தரம் பிள்ளை அவர்களிடம் இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றவர். இவர் குசேலோபாக்கியானத்தைப் பாடத் தொடங்கி, இடர்ப்பட்டதை அறிந்த பிள்ளையவர்கள், தாமே பாடிமுடித்து இவர் பேரால் நூலை வெளிவரச் செய்தார்.

**குசேலர் கண்ணன் அவைக்குச் செல்ல விரும்பியபோது வாயிற் காவலர், "அரசவை புகுவார் இன்ன சிறப்புக்கள் பெற்றிருக்க வேண்டும்" எனல்**

பொருள்நனி உளனென்றி யாரும்
புகலுமோர் வார்த்தை வேண்டும்;
இருகையும் கடகம் வேண்டும்;
இலங்குகுண் டலங்கள் வேண்டும்;
வருவிர லாழி வேண்டும்;
மார்பிடை மதாணி வேண்டும்;
உருவமுத் தாரம் வேண்டும்;
உயர்ந்தபட் டாடை வேண்டும்; 1

சிவிகைமுன் ஊர்தி வேண்டும்;
செழும்பொருட் செலவும் வேண்டும்;
குவிகையே வலரும் வேண்டும்;
கோலமார்ந் திருக்க வேண்டும்;
கவிகைதாங் குநரும் வேண்டும்;
கையுறை சிறப்ப வேண்டும்;
அவிகையில் விளக்கம் வேண்டும்;
அரசவை குறுகு வார்க்கே. 2

**குசேலர், இச்சிறப்புக்கள் தனக்கு இல்லையே என வருந்துதல்**

மின்செய்த மதாணியாம்; முத்
தாரமாம்; விளங்கு பட்டாம்;
பொன்செய்த ஊர்தியாம்; இப்
போதியாம் பெறுவ தெங்கே?
நன்செய நம்மூ தாதை
நாளினும் கேட்ட தின்றால்!
என்செய்வோம்! எண்ணு தொன்றை
இயற்றுதல் என்றுந் தீதே. 3

**சில வாயிற்காவலர் குசேலரை மதித்துக் கூறல்**

யாரென நினைத்தீர் இந்த
இருந்தவத் தலைவன் தன்னை?
சேருறு பொய்ம்மை இல்லன்;
செறிந்தநோன் புழந்த நல்லன்;

வாருறு மறைகள் வல்லன் ;
மற்றெங்கும் செல்வா னல்லன் ;
ஏருறு மினிய சொல்லன் ;
என்னவே யாமுட் கோடும். 4

### வாயிற்காவலர் குசேலர் வரவைக் கண்ணனுக்கு அறிவித்தல்

மாமறைத் தலைவ போற்றி!
மதிக்குல விளக்கே போற்றி!
காமரிந் திரன்முன் னோர்
காண்பதற் கரியாய் போற்றி!
தாமரைக் கண்ண போற்றி!
தரியலர் ஏறே போற்றி!
தோமறு செல்வம் வாய்ந்த
துவாரகைக் கிறைவ போற்றி! 5

ஆதி நாளைய நின்னோ
டருங்கலை கற்று ளானும் ;
போதவும் சிறந்த நட்புப்
பூண்டு கொண்டவனும் ; கந்தை
மேதக் கொண்ட நீரான் ;
மெய்ம்மறை யவர்கு லத்தான் ;
கோதறு குணத்தின் மிக்கான் ;
குசேலனென் றியம்பி னன்பேர். 6

வற்றியென் பெழுந்த யாக்கை
மாதவ னின்மேல் வைத்த
பற்றினை யெம்ம னோரோ
பகுத்தறிந் தளக்க வல்லார்!
இற்றைநாள் வந்து வாயி
லிருக்கின்றான் ; எதிர்ந்த போரில்
வெற்றிகொள் கழற்கால் வேந்தே,
விண்ணப்ப மிதுவே யென்றார். 7

**கண்ணன் குசேலரை அழைத்துவர ஆணையிடல்**

என்றலு முவகை விம்ம
எழின்முக மலர்ச்சி காட்டப்
பொன்றலில் கருணை பொங்கிப்
பொழிதர விரைவிற் சென்று
இன்றுநம் வாயில் வந்த
இருந்தவத் தலைவன் தன்னை
மன்றவிங் கழைப்பீ ரென்று
வாய்மலர்ந் தருளி னானே. 8

**வாயிற்காவலர் குசேலரை அடைதல்**

கேட்டனர் துவார பாலர்;
கிளர்ந்தெழு களிப்புத் துள்ள
வாட்டமில் மனத்த ராகி
வாயில்கள் பலவும் நீத்து
நாட்டுதங் காவல் வாயி
னண்ணினர்; ஆங்கி ருக்கும்
கோட்டமில் மனத்துச் செய்ய
குசேலமா முனியைச் சார்ந்தார். 9

—வல்லூர், தேவராசப் பிள்ளை.

**அருஞ்சொற்பொருள்**

1. இலங்கு - விளங்குகின்ற, குண்டலம் - காதணி, மதாணி - மார்பணி, உருவம் - அழகிய, முத்தாரம் - முத்துமாலை.

2. சிவிகை - பல்லக்கு, குவி+கை ஏவலர் எனப் பிரிக்க, கோலம் - அழகு, கவிகை - குடை, கையுறை - காணிக்கைப் பொருள், அவிகை இல் - அணைதல் இல்லாத.

3. இப்போது+யாம் - இப்போதியாம், நன்செயல் - நல்ல காரியம்.

4. சேருறு - பொருந்திய, உழந்த - வருந்திய, வார்உறு - மிகுந்த, ஏர்உறு - அழகு மிகுந்த, உட்கோடும் - கருதுவோம்.

5. மதிக்குலம் - சந்திர குலம், காமர் - அழகிய, தரியலர் - பகைவர், தோம்அறு - குற்றம் அற்ற.

6. போதவும் - மிகவும், மேதக - மேன்மையாக, கோது - குற்றம்.

7. எழுந்த - தோன்றிய, யாக்கை - உடல், பற்று - அன்பு.

8. விம்ம - அதிகரிக்க, மன்ற - உறுதி, பொன்றல் - கெடுதல்.

9. கிளர்ந்து எழு - மிகுதியாகத் தோன்றிய, கோட்டம் - மாசு, செய்ய - நேர்மையான.

**வினுக்கள்**

1. குசேலோபாக்கியானம்—இத்தொடரைப் பிரித்துப் பொருள் கூறுக.

2. இந் நூலாசிரியரைப் பற்றிக் குறிப்பு வரைக.

3. அரசவை செல்வோர்க்கு என்னென்ன ,சிறப்புகள் இருத்தல் வேண்டுமெனக் காவலர் கூறுகின்றனர் ?

4. காவலர் கூறியதைக் கேட்டுக் குசேலர் என்ன எண்ணினுர் ?

5. குசேலரைப் பற்றிச் சில வாயிற் காவலர் பெருமையாகக் கூறியவை யாவை ?

6. வாயிற் காவலர், குசேலரைப் பற்றிக் கண்ணனிடம் அறிவித்தது என்ன ?

7. 'கேட்டனர் துவார பாலர்'—துவார பாலர் கேட்டது யாது ?

8. இடம் சுட்டிப் பொருள் விளக்குக :
   (1) எண்ணு தொன்றை இயற்றுதல் என்றும் தீதே.
   (2) நின்மேல் வைத்த பற்றினே எம்மனேரோ பகுத்தறிந் தளக்க வல்லார்.

9. பிரித்து எழுதுக.
   கோதறு, இப்போதியாம், முத்தாரம், வாயினண்ணினர்.

## இக்காலம்

# 7. ஆசிய சோதி

ஆசிய சோதி, 'எட்வின் ஆர்ணல்டு' என்னும் அறிஞர் புத்த பெருமானைப் பற்றி ஆங்கிலத்தில் எழுதிய அருங்கவிதைகளைத் தழுவித் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. இந்நூல் ஏழு பகுதிகளைக் கொண்டது.

இந்த நூலை ஆக்கியவர் உயர் திரு. கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை அவர்கள். இவர் திருவாங்கூரைச் சேர்ந்த தேரூரில் தோன்றியவர். இவரது தந்தையார் சிவதாணுப் பிள்ளை. வேளாள குடும்பத்தினர். பல பள்ளிகளில் தமிழாசிரியராய் இருந்து 1931இல் வேலையிலிருந்து விலகினுர். இவர் இயற்றிய கவிகள் எண்ணற்றவை. 'மலரும் மாலையும்' என்பது இவரது கவிதைத் தொகுப்பு. இவர் 1954இல் மறைந்தார்.

**தாயின் அவலநிலை**

காடும் மலையுங் கடந்து வந்தேன்—உன்னைக்
கண்டு துயரெல்லாம் போக்க வந்தேன் ;
வாடும் மலர்ச்செண்டு போல்கிடக்கும்—இந்த
மைந்தன் உயிரெழச் செய்யுமையா ! 1

பெற்ற வயிறு துடிக்குதையா—ஒரு
பிள்ளையும் வேறெனக் கில்லை, ஐயா!
உற்ற உறவினர் இல்லை யையா!—என்மீது
உள்ளம் இரங்கிட வேணுமையா! 2

புத்தர் அருள் மொழி

தாயே, நின் மனக்கவலை—ஒழிந்திடத்
தக்கநல் மருந்தளிப்பேன்;
சேயினை எழுப்பிடுவேன்—விளையாடித்
திரியவும் செய்திடுவேன். 3

நாவிய கடுகு வேண்டும்—அதுவுமோர்
நாவுரி தானும் வேண்டும்;
சாவினை அறியாத—வீட்டினில்
தந்ததா யிருக்க வேண்டும். 4

தாய் கடுகுதேடித் திரும்பிவந்து புத்தரிடம் கூறல்
வேறு

என்றுரைத்த மொழிகேட்டவ் வேழை மார்பில்
ஏந்தியணைத் திடுமகனோ டூரில் எங்கும்
சென்றுகடு கிரந்து வெறுங்கைய ளாகித்
திரும்பிமுனி திருவடியைச் சிரமேற் கொண்டு; 5

வேறு

புவியெலாம் நிறைந்த புகழோய்! புலவர்
கவியெலாம் நிறைந்த கருணையங் கடலே!
ஊரெலாம் அலைந்தேன், ஒவ்வொரு மனையும்
ஏறி இறங்கினேன், என்குறை உரைத்தேன். 8

ஏழை ஒரு மகள்—
இட்ட கடுகை ஏற்பதன் முன்னம்
தாயே, நீவிர் தங்கும் மனையிது
சாவறி யாத தனிமனை தானோ?

தந்தை தாயார் தமக்கை தங்கை 7
மைந்தர் எவரும் மரித்ததும் உண்டோ!
உரைந்திடும் என்றேன்; உரைகேட்ட வரும்
இவள், கணவனை இழந்த கைம்பெண் அம்மா!
இவள் மைந்தனை இழந்த வறியவள் அம்மா! 8

இவள், தமையனை இழந்த தங்கை அம்மா !
இவள், அன்னையை இழந்த அகதி அம்மா !
இறந்தவர் எண்ணிலர் இருப்பவர் சிலரே !
பிறந்தவர் இறப்பதும் இறந்தவர் பிறப்பதும்
உலகின் இயற்கை ஒழித்தலும் எளிதோ ? 9

வேறு

ஐயமிடு மனைகளிலே மரணமென்றும்
அறியாத மனையேதும் இல்லை இல்லை ;
வையகத்தில் பிறப்புளதேல் இறப்பும் உண்டு ;
மாற்றரிய விதியதுவென் றுணர்ந்து கொண்டேன்.
கையமர்ந்த மகவினையும் கானில் இட்டேன் ;
கண்விழியாப் பிணம்வைத்துக் காப்ப துண்டோ ?
செய்யதிரு வடிபணிந்து போற்றி இந்தச்
செய்தியினைத் தெரிவிக்க வந்தேன் என்றாள். 11

—கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை

அருஞ்சொற்பொருள்

1. உற்ற - சிறந்த
2. சேய் - பிள்ளை
3. நாவிய - தூசு போக்கிய, நாவுரி - ஓரளவு
4. சிரமேற்கொண்டு - தலையால் வணங்கி
5. கைம்பெண் - கணவனை இழந்தவள்
6. அகதி - யாரும் அற்றவள்
7. மாற்றரிய - விலக்க முடியாத
8. செய்ய - அழகிய

வினாக்கள்

1. கவிமணி. தேசிக விநாயகம் பிள்ளை அவர்களைப் பற்றிச் சிறு குறிப்பு வரைக.

2. தாய் புத்தரிடம் கூறியது என்ன? அதற்கு அவர் என்ன மறுமொழி தந்தார்?

3. கடுகை ஏற்பதன் முன், ஏழைப் பெண்ணிடம் தாய் என்ன கேட்டாள்?

4. ஏழைப் பெண் அளித்த விடை யாது?

5. மகவை இழந்த தாய், பல வீடுகளிலும் சென்று திரிந்ததால் தான் அறிந்து கொண்டதாகக் கூறிய உண்மை யாது?

6. பகுபத உறுப்பிலக்கணம் கூறுக: கொண்டேன், வந்தேன், இட்டேன், எழுப்பிடுவேன்.

# IV. பல்சுவை

## 1. புனைந்துரை

### 1. சூரியன் மறைவு

இதனைப் பாடியவர் புகழேந்திப் புலவர். அவர் வரலாறு முன்னரே கூறப்பட்டுள்ளது.

வையம் பகலிழப்ப வானம் ஒளியிழப்பப்
பொய்கையும் நீள்கழியும் புள்ளிழப்பப்—பையவே
செவ்வாய அன்றில் துணையழைப்பச் சென்றடைந்தான்
வெவ்வாய் விரிகதிரோன் வெற்பு. 1

—புகழேந்திப் புலவர்.

### 2. மருதூர் வளம்

இது முக்கூடற் பள்ளில் உள்ளது. அதன் காலம் கி. பி. 1680ஆக இருக்கலாம் எனக் கருதப்படுகிறது.

சங்கம் மேடைகள் எங்கும் உலாவும் ;
தரங்க மீன்பொன் னரங்கிடைத் தாவும் ;
திங்கள் சோலை மரங்களை ராவும் ;
தெருக்கள் தோறும் மதுக்களைத் தூவும் ;
பொங்க ரூடிளம் பைங்கிளி மேவும் ;
பூவை மாடப் புருவினங் கூவும் ;
வங்க வாரிதி வெங்கடு வுண்ட
மருதீசர் மருதூர் எங்கள் ஊரே. 3

—என்னயினுப் புலவர்.

### 3. ஞாயிற்றின் தோற்றம்

பின்வரும் செய்யுள் வீரசோழியத்தில் உள்ளது. அது புத்தமித்திரனால் பாடப்பெற்றது.

இரவிடை மதிய மென்பான்
ஆடிப்போய் மறையு மெல்லை
விரியிரு ளெழினி நீக்கி
விசும்பெனு மரங்கு தன்மேற்

கரைகடன் முழவ மார்ப்பக்
கதிரெனுங் கைகள் வட்டித்து
எரிகதி ரென்னுங் கூத்தன்
ஆடுவா னெழுந்து போந்தான். 4

—வீரசோழியம்.

## 4. புலைப்பாடி இயல்பு

இதனைப் பாடியவர் சேக்கிழார். அவரது இயற்பெயர் அருண்மொழித் தேவர். தொண்டை நாட்டில் குன்றத்தூரில் பிறந்தவர். காலம் கி. பி. 12ஆம் நூற்றாண்டு.

கூருகிர் மெல்லடியளகின் குறும்பார்ப்புக் குழுச்சுழலும்
வார்பயின்முன் றிலில்நின்ற வள்ளுகிர்நாய்த் துள்ளுபறழ்
காரிரும்பின் சரிசெறிகைக் கருஞ்சிறார் கவர்ந்தோட
ஆர்சிறுமென் குரைப்படக்கும் அரைக்கசைத்த இருப்புமணி. 5

—சேக்கிழார்.

## 5. மருத நில இயல்பு

ஐவகை நிலங்களில் ஒன்றான மருத நிலத்தின் இயற்கை அழகை இச்செய்யுளில் காணலாம். இதனைப் பாடியவர் கம்பர்.

ஆறுபா யரவ மள்ள ராலைபா யமலை யாலைச்
சாறுபா யோதை வேலைச் சங்குவாய் பொங்கு மோதை
ஏறுபாய் தமர நீரி லெருமைபாய் துழனி யின்ன
மாறுமா றாகித் தம்மின் மயங்குமா மருதவேலி. 6

—கம்பர்.

## 6. முழுமதித் தோற்றம்

இதனைப் பாடியவர் வில்லிபுத்தூராழ்வார். அவர் நடு நாட்டில் சனியூரில் வீரராகவாச்சாரியாருக்கு மகனாகத் தோன்றினார். வரபதியாட் கொண்டானால் ஆதரிக்கப்பட்ட அவர், தமிழில் பாரதம் பாடினார்.

கானெலா மலர்ந்த முல்லைக்
ககனமீ தெழுந்த தென்ன
வானெலாம் வயங்கு தாரை
நிரைநிரை மலர்ந்து தோன்ற

வேனிலான் விழவின் வைத்த
வெள்ளி வெண்கும்ப மென்னத்
தூநிலா மதியம் வந்து
குணதிசைத் தோன்றிற் றம்மா! 7

—வில்லிபுத்தூராழ்வார்.

### அருஞ்சொற்பொருள்

1. கழி - உப்பங்கழி, புள் - பறவை, செவ்வாய - சிவந்த வாயினை உடைய, அன்றில் - ஒருவகைப் பறவை, துணை - பெண் பறவை, வெற்பு - அத்தமன மலை.

2. தரங்கம் - அலை, கடல்; ராவும் - உராயும், பொங்கர் - சோலை, பூவை - ஒருவகைப் பறவை, வங்க வாரிதி - மரக்கலம் செல்லுங்கடல், கடு - நஞ்சு.

3. ஆடி - விளையாடி, விரிஇருள் எழினி - பரந்த இருளாகிய திரைச்சீலை, அரங்கு - நடனமேடை, கரை கடல் முழவம் - ஒலிக்கின்ற கடல் ஆகிய மத்தளம், வட்டித்து - அபிநயம் காட்டி, எரிகதிர் - விளங்குகின்ற ஞாயிறு, போந்தான் - வந்தான்.

4. கூருகிர் - கூரிய நகம், அளகு - பெட்டைக் கோழி, குறும் பார்ப்புக்குழு - சிறிய குஞ்சுக் கூட்டம், வார்பயில் - தோல்வார் மிகுதியாகத் தொங்கவிட்டுள்ள, வள்ளுகிர் - கூர்மையான நகம், பறழ் - நாய்க்குட்டி, சரி - வளையல், ஆர் - பொருந்திய, குரைப்பு - குரைக்கும் ஒலி, அரைக்கு - இடையில், இரும்பு + மணி - இருப்பு மணி.

5. அரவம், அமலை, ஓதை - ஓசை, வேலை - கடல், ஏறு - எருது, துழனி - ஒலி.

6. ககனம் - ஆகாயம், தாரை - விண் மீன்கள், நிரை - வரிசை, குணதிசை - கிழக்குத் திசையில்.

### வினாக்கள்

1. ஞாயிற்றின் மறைவும், தோற்றமும் எவ்வாறு சிறப்பிக்கப் பட்டுள்ளன?

2. புலைப்பாடியின் இயல்பை விளக்குக.

3. மருதநிலம் என்றால் என்ன? அதன் நீர்வளம் விளக்கப் பட்டது எவ்வாறு?

4. வில்லிபுத்தூராழ்வார் முழுமதித் தோற்றத்தை எவ்வாறு புனைந்துரைத்துள்ளார்?

## 2. சீட்டுக் கவி

சீட்டுக்கவி என்பது ஒரு புலவன் வள்ளல் ஒருவனுக்கு எழுதும் கடிதத்தைச் செய்யுள் வடிவிலே எழுதுவதாகும். இதில் வள்ளலின் பெருமையும், புலவனின் தேவைப் பொருளும் குறிக்கப்பெறும்.

பின்வரும் கவியை எழுதியவர் சரவணப் பெருமாள் கவிராயர் ஆவார்.

கல்விச் சமுத்திரம் ; கமலா லயம் ; தமிழ்க்
கடல்மடை திறந்தவெள்ளம் ;
கற்பனை பிறப்பிடம் ; கலைமகள் இருப்பிடம் ;
கவிமாரி பொழியுமேகம் ;
சொல்விற் பனம்விளையு மதுரக் களஞ்சியம் ;
தோன்றுகற் பூரதீபம் ;
சுகிர்தகுண அவதானி சரவணப் பெருமாள்கைத்
தொட்டுஎழுதி விட்டசனது
வில்லுக்கு அருச்சுனன்; சொல்லுக்கு அரிச்சந்திரன்;
வெற்றிக்கு விக்ரமார்க்கன் ;
வித்தைக்கு அகத்தியன் ; முத்துக் கருப்பண்ண
விலட்சணன் எதிர்ந்துகாண்க ;
மல்வெற்றி யாயென்று தாயென்று நீயென்று
மாலென்று வேலென்றுகா
மாவென்று காவென்று நாவொன்று பாவொன்று
வருகின்றது அருள்புரிகவே.

—சரவணப்பெருமாள் கவிராயர்.

### அருஞ்சொற்பொருள்

கமலா + ஆலயம் = கமலாலயம், கமலா - இலக்குமி, ஆலயம் - இருப்பிடம், சொல் விற்பனம் - திறமையான பேச்சு, சுகிர்த குணம் - இனிய நற்பண்புகள், சனது - கடிதம், விலட்சணன் - பேரழகன், மல் - மற்போர், வேல் - வேல் கைக்கொண்ட முருகன், காமா - மன்மதனே ! கா - காப்பாய், நாஒன்று - நாவிலே பொருந்திய.

### வினாக்கள்

1. சீட்டுக் கவி என்பது யாது ?
2. சரவணப்பெருமாள் கவிராயர் முத்துக் கருப்பண்ண வள்ளலை எவ்வாறு புகழ்ந்துள்ளார் ?

## 3. சிலேடை

ஒரு தொடர் பல பொருள் தோன்ற வருவது சிலேடையாகும். அது செம்மொழிச் சிலேடை, பிரிமொழிச் சிலேடை என இரு வகை ஆகும்.

பின்வரும் செய்யுட்கள் கலைசைச் சிலேடை வெண்பா என்னும் நூலில் உள. அந்த நூலை ஆக்கியவர் தொட்டிக் கலை சுப்பிரமணிய முனிவர். அவர் 18ஆம் நூற்ருண்டில் வாழ்ந்தவர்.

ஆயச் சிருர்படமும் ஆர்க்குங் கடாசலமும்
காயத் திரியுங் கலைசையே—நேயமுடன்
பைத்த பதஞ்சலியார் பார்த்துருகப் பொற்பொதுவில்
வைத்த பதஞ்சலியார் வாழ்வு. 1

நாவலர்தம் புத்திரரும் நண்ணும் பிரமரமும்
காவியங்கள் ஆயுங் கலைசையே—தூவெள்ளைக்
கோட்டுக் குழையார் கொழுங்கயற்கண்
கோட்டுக் குழையார் குடி. [மெல்லியலாங் 2

### அருஞ்சொற் பொருள்

1. ஆயச்சிருர் - கூட்டமாய் உள்ள சிறுவர்கள், ஆயம் - கூட்டம், படம் - பட்டம், கடாசலம் - மதம் பெருகும் யானை, காயத்து இரியும் - ஆகாயத்தில் நிலையின்றித் திரிகின்ற, காயதிரியும் - பகைவர்களைக் கொல்லத் திரிகின்ற, பைத்த - படம் உடைய, பதஞ்சலியார் - பதஞ்சலி முனிவர், பதம் சலியார் - ஊன்றி நின்ற காலைச் சலிக்காதவர், பொற்பொது - பொன் அம்பலம், வாழ்வு - வாழும் இடம்.

2. நாவலர்தம் புத்திரர் - புலவர் பிள்ளைகள், காவியங்கள் - இலக்கிய நூல்கள், ஆயும் - ஆராயும், நண்ணும் - தேனை நாடிச்செல்லும் பிரமரம் - வண்டுகள், காவியங்கள் - (கா + வி + அம் + கள்) பூஞ்சோலைகளில் உள்ள மலர்களில் பொருந்திய இனிய தேன், கோடு + குழையார் - (கோட்டுக்குழையார்) வெண்சங்கால் ஆகிய காதணியை உடைய சிவபெருமான், கயல்கண் - கயல் மீன் போன்ற கண், கொழும் - பருத்த, கோட்டுக்கு - உவமை ஆகு பெயர், பூங் கொம்பு போன்ற உமாதேவிக்கு ; உழையார் - அருகு இருப்பவராகிய சிவபெருமான், குடி - குடி இருக்கும் இடம்.

### வினுக்கள்

1. சிலேடை என்பது யாது?
2. காயத்திரியும், பதஞ்சலியார், காவியங்கள் ஆயும், கோட்டுக் குழையார்—இத் தொடர்களுக்கு இரு பொருள் தருக.
3. இச் செய்யுட்களிலிருந்து பிரிமொழிச் சிலேடைக்கு இரு உதாரணங்கள் எடுத்துக் காட்டுக.

# V. சிறு நூல்கள்

## 1. சரபேந்திர பூபால குறவஞ்சி நாடகம்

தமிழில் உள்ள சிறு நூல்களில் குறவஞ்சி நாடகம் என்பது ஒருவகையானது. இது குறத்தி பேச்சாகப் பாடப் பெறும். இதனைக் குறத்தி பாட்டு எனவும் வழங்குவர். சரபேந்திர பூபாலர் என்பது தஞ்சையை ஆண்ட சரபோசி மன்னரைக் குறிப்பதாகும். ஆகவே, சரபோசி மன்னரைப் பற்றிய குறவஞ்சி நாடகம் என்பது இத்தொடரின் பொருள்.

இந்த நூலைப் பாடியவர் திரு. சிவக்கொழுந்து தேசிகர். கும்பகோணத்திற்கு அருகாமையில் உள்ள கொட்டையூரில் தண்டபாணி தேசிகருக்குப் புதல்வராகத் தோன்றினர். சைவ மதத்தினர்.

இவர் கோடீச்சுவரக் கோவை, தஞ்சைப் பெருவுடையாருலா முதலிய நூல்களை இயற்றியுள்ளார். நூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட காலத்தவர்.

செந்திருமா லென்றனக்கு மைத்துனன்காண், அம்மே!
திங்களணி சிவனெனக்குத் தமையன் முறை, அம்மே!
அந்தமிகுங் கந்தனெங்கள் மருமகன்காண், அம்மே!
அன்னநடை வள்ளியெங்கள் கன்னிகைகாண், அம்மே! 1

—சிவக்கொழுந்து தேசிகர்.

## 2. நந்திக் கலம்பகம்

நந்திவர்மன் ஒன்பதாம் நூற்றுண்டில் வாழ்ந்த ஒரு பல்லவ மன்னன். அவனைப் பற்றிப் பாடப் பெற்ற கலம்பக நூல் ஆதலால், இது நந்திக் கலம்பகம் எனப் பெயர் பெற்றது. இதன் ஆசிரியர் வரலாறு ஒன்றும் தெரியவில்லை.

கலம்பகம் என்பது புயவகுப்பு, அம்மானை, குறம் முதலிய பதினெட்டு உறுப்புக்கள் உடையதாய், பாவும் பாவினமும் கலந்து வர, அந்தாதித் தொடையாய்ப் பாடப் பெறுவதாகிய ஒரு பிரபந்தம்.

மறம்: இது கலம்பக உறுப்பினுள் ஒன்று. ஓர் அரசன் மறவர் மகளைத் தனக்கு மணம் பேசி வருமாறு ஒரு தூதனை அனுப்ப, மறவர் மணத்தினை மறுத்து அவ்வரசனை இகழ்ந்து கூறியதாகப் புலவர் பாடுவது.

மறம்

அம்பொன்று, வில்லொடிதல், நாணறுதல்,
நான்கிழவ னசைந்தே னென்றோ
வம்பொன்று குழலாளை மணம்பேசி
வரவிடுத்தார் ; மன்னர் தூதா !
செம்பொன்செய் மணிமாடத் தெள்ளாற்றின்
நந்திபதம் சேரா ரானைக்
கொம்பன்றோ நங்குடிலிற் குறுங்காலு
நெடுவளையுங் குனிந்து பாரே. 2

—நந்திக் கலம்பகம்

## 3. திருவேங்கட மாலை

இது, பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் பாடிய அட்டப் பிரபந்தத்துள் ஒன்று. திருவேங்கடத்தைப் பற்றிய மாலை எனப் பொருள் படும்.

பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் சோழ நாட்டிலே திருமங்கை என்னும் தலத்தில் தோன்றியவர். வைணவ அந்தணராகிய இவர், திருமாலிடம் ஈடுபாடுடையவராய்ச் சிறந்த செய்யுட்களைச் செய்துள்ளார். இவர் இற்றைக்கு 750 ஆண்டுகளுக்கு முன்பிருந்தார்.

இல்லக் குறத்தியரும் யாக்கைநிலை வேட்டவரும்
மெல்லக் கிழங்கெடுக்கும் வேங்கடமே—நல்ல
புதுப்பூவை வண்ணத்தான் போர்முகத்துச் செவ்வாய்
மதுப்பூவை வண்ணத்தான் வாழ்வு. 3

—பிள்ளைப் பெருமாள் ஐயங்கார்.

## 4. ஏர் எழுபது

உழவுத் தொழிலின் சிறப்பினை எழுபது வெண்பாக்களால் கூறும் நூல் இது. இதன் ஆசிரியர் கம்பர்.

ஏரின் சிறப்பு

குடையாளு முடிவேந்தர் கொலையானை தேர்புரவி
படையாளும் இவைநான்கும் படைத்துணைய ராகுலென் ?
மடைவாளை வரும்பொன்னி வளநாடர் தங்கள் கலப்
படைவாளைக் கொண்டன்றிப் பகையறுக்க மாட்டாரே. 4

### தாற்றுக்கோல் சிறப்பு

வெங்கோபக் கலிகடந்த வேளாளர் விளைவயலுள்
பைங்கோல முடிதிருந்தப் பார்வேந்தர் முடிதிருந்தும் ;
பொங்கோதைக் கடற்றானைப் போர்வேந்தர் நடந்துபெருஞ்
செங்கோலை நடத்துங்கோல் ஏரடிக்கும் சிறுகோலே. 5

—கம்பர்.

## 5. திருவீங்கோய் மலை எழுபது

திருவீங்கோய் மலையில் எழுந்தருளியுள்ள சிவபெருமானைப் பற்றி எழுபது செய்யுட்களால் கூறும் ஒரு சிறுநூல். திருவீங் கோய் மலை முசிரிக்கு மேற்கே மூன்றுகல் தொலைவில் உள்ளது.

இதனைப் பாடியவர் சங்ககாலப் புலவராகிய நக்கீரராவர். இவர் மதுரைக் கணக்காயனார் மகனார். சைவவேளாளர். சிவ பெருமானிடம் வாதிட்ட பெருமையை உடையவர்.

### முதுமந்தியின் பேதைமை

வழகிதழ் காந்தள்மேல் வண்டிருப்ப ஒண்தீ
முழுகியதென் றஞ்சி முதுமந்தி—பழகி
எழுந்தெழுந்து கைநெறிக்கும் ஈங்கோயே திங்கள்
கொழுந்தெழுந்த செஞ்சடையான் குன்று. 6

—நக்கீரர்.

#### அருஞ்சொற்பொருள்

1. திங்கள் - பிறைச் சந்திரன், அந்தம் - அழகு, அன்ன நடை - அன்ன நடை போன்ற நடை.

2. ஒன்று - ஒரேஎண், பொருந்திய; ஒடிதல் - ஒடிந்தது, நாண் - நாண்கயிறு, அறுதல் - அறுந்து போனது, அசைந்தேன் - தளர்ந்து போனேன், வம்பு - நறுமணம், குழலாளை - கூந்தலை உடைய பெண்ணை, குறுங்கால் - குறுகிய தூண், கொம்பு - தந்தம்.

3. யாக்கை நிலை வேட்டவர் - உடல் அழியாமல் நிலையாக இருக்க வேண்டுமென விரும்பிய சித்தர்கள், கிழங்கு எடுக்கும் - கிழங்குகளைக் கல்லி எடுக்கும், கிழம் கெடுக்கும் - கிழத்தன்மையைப் போக்கும், பூவை - காயாம் பூவைப் போன்ற, வண்ணத்தான் - திருமேனி நிற முடையவன், செவ்வாய் மதுப்பூ - தேன் பொருந்திய தாமரை போன்ற

சிவந்த வாயில், வை - வைத்துள்ள, நத்து - சங்கு, வாழ்வு - வாழு மிடம்.

4. குடை ஆளும் - வெண் கொற்றக் குடையின் கீழ் உலகை ஆளும், படை ஆள் - படையில் உள்ள காலாள், மடை - மடையில், வாளை - வாளைமீன், பகை - பகைவர்.

5. கலி - வறுமைத் துன்பம், கோல முடி - அழகிய நாற்றுக் கட்டு, முடி - மகுடம், பொங்கு ஓதை - மிகுந்த ஒலி, கடல் தானை - கடல் போன்ற படை, ஏர் அடிக்கும் - ஏரில் பூட்டிய காளைகளை அடித் துச் செலுத்த வல்ல, கோல் - குச்சி.

6. வழகு - அழகு, மென்மை; காந்தள் - செங்காந்தள், திங்கள் கொழுந்து - பிறைச்சந்திரன், செஞ்சடையான் - சிவபெருமான்.

### வினாக்கள்

1. குறத்திக்குத் திருமால் மைத்துனன் ஆவதும், சிவன் தமை யன் ஆவதும் எவ்வாறு?

2. தெள்ளாறு என்பது யாது? அது எவ்வாறு சிறப்பிக்கப்பட் டுள்ளது?

3. கலம்பகம், மறம்—குறிப்பு எழுதுக.

4. மறவனின் வீரம் எதனால் விளங்குகிறது?

5. கிழங் கெடுக்கும், பூவை வண்ணத்தான்—இத் தொடர்களுக்கு இரு பொருள் தருக.

6. சிலேடை என்பது யாது?

7. கலப்பை, தாற்றுக்கோல் இவற்றைக் கம்பர் எவ்வாறு சிறப் பித்துள்ளார்?

8. முது மந்தியின் செயல் யாது?

9. வழகிதழ் காந்தள்—இப்பாட்டில் அமைந்துள்ள அணியை, அதன் இலக்கணத்தோடு கூறுக.

# VI. வழிபாட்டுப் பாடல்

## 1. தேவாரம்

தேவாரம் என்பது தெய்வத்திற்கு அன்போடு சாத்தப்படும் பூமாலை போன்ற பாமாலை எனப் பொருள் படும். தே - தெய்வம்; ஆரம் - பூமாலை போன்ற பாமாலை. தேவாரத்தைப் பாடியவர்கள் நாவுக்கரசர், சுந்தரர், சம்பந்தர் என்னும் சைவ சமயப் பெரியார்கள் ஆவர். அம் மூவருள் நாவுக்கரசர் பாடிய தேவாரத்துள் ஒன்று பின்வருவது.

திருநாவுக்கரசர் திருமுனைப் பாடி நாட்டில் திருவாமூரில் பிறந்தவர். மருள் நீக்கியாரென்னும் பிள்ளைத் திருநாமம் பூண்டவர். இவரது தந்தையார் புகழனர்; தாயார் மாதினியார். தமக்கை திலகவதியார். சைவ வேளாள குலத்தினர். சிறிது காலம் சமண மதத்தைத் தழுவி இருந்து, பின் இறைவனால் ஆட்கொள்ளப்பட்டுச் சைவத்திற்கு மாறினர். இவரது காலம் கி. பி. 7ஆம் நூற்றாண்டு என்பர்.

புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா!
உன்னடி என்மனத்தே
வழுவா திருக்க வரந்தர வேண்டும்;
இவ் வையகத்தே
தொழுவார்க்கு இரங்கி இருந்தருள்செய்
பாதிரிப் புலியூர்
செழுநீர்ப் புனல்கங்கை செஞ்சடை
மேல்வைத்த தீவண்ணனே! 1

—திருநாவுக்கரசர்.

## 2. திருவாசகம்

திருவாசகத்தைப் பாடியவர் மாணிக்க வாசக சுவாமிகள். சைவ மத குரவர்களில் இவர் ஒருவர். இவர் பாடிய திருவாசகம் இனிமையிற் சிறந்தது. "திருவாசகத்துக்கு உருகாதார் ஒரு வாசகத்துக்கும் உருகார்" என்னும் பழமொழி இதன் அருமை பெருமைகளை உணர்த்தும். இந்த நூல் சி. யு. போப்பையர் என்னும் ஆங்கிலப் பெரியாரால் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப் பட்டுள்ளது.

மாணிக்கவாசகர் பாண்டிய நாட்டில் திருவாதவூரில் பிறந்தவர். இவரது இயற்பெயர் திருவாத வூரர் என்பது. தந்தை பெயர் சிவபாத இருதயர். திருக்கோவையார் இவரியற்றிய வேறு நூல். காலம் கி. பி. 9ஆம் நூற்றுண்டு என்பர்.

வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி
ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்க்
கோனாகி யானெனதென் றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை என்சொல்லி வாழ்த்துவனே. 2

—மாணிக்க வாசகர்.

## 3. நாலாயிர திவ்யப் பிரபந்தம்

திருமாலைப் பற்றிய நாலாயிரம் சிறந்த பாசுரங்களைக் கொண்ட நூலாகையால், இப் பெயர் பெற்றது. இந்த நாலாயிர திவ்யப் பிரபந்தம் ஆழ்வார்கள் பன்னிருவரால் பாடப் பெற்றது. இந்த நூலில் உள்ள பெருமாள் திருமொழி என்னும் பகுதியில் பின்வரும் பாடல் உள்ளது. பெருமாள் திருமொழியைப் பாடியவர் குலசேகர ஆழ்வார்.

குலசேகர ஆழ்வார், இப்போது கோழிக்கூடு என வழங்கும் ஊரில் பிறந்தவர். இவர் சேர அரச மரபினர். வைணவ மதத்தினர். இவர் தந்தையார் திடவிரதர் என்னும் பெயரினர். குலசேகர ஆழ்வார் புவி அரசராக விளங்கியதோடு கவியரசராகவும் திகழ்ந்தார். இவர் இயற்றிய வேறு நூல் **முகுந்த மாலை.** இவர் காலம் கி. பி. 8ஆம் நூற்றுண்டு.

தருதுயரம் தடாயேலுன்
சரணல்லால் சரணில்லை
விரைகுழுவு மலர்ப்பொழில்சூழ்
வித்துவக்கோட்டு அம்மானே!
அரிசினத்தால் ஈன்றதாய்
அகற்றிடினும் மற்றவள்தன்
அருள்நினைந்தே அழுங்குழவி
அதுவேபோன் றிருந்தேனே. 3

—குலசேகர ஆழ்வார்.

## 4. இரட்சணிய யாத்திரிகம்

இது இரட்சிப்பு அடைய வேண்டிய ஆத்மாவினது மோட்ச யாத்திரையைப் பற்றிக் கூறும் நூல். இதன் ஆசிரியர் உயர்திரு. எச். எ. கிருட்டினப் பிள்ளை அவர்கள்.

திருவாளர், எச். எ. கிருட்டினப்பிள்ளை அவர்கள் திருநெல் வேலிக் கலாசாலையில் தமிழ்ப் பண்டிதராய்த் திகழ்ந்தவர். இவர் தந்தையார் சங்கர நாராயணப் பிள்ளை என்பவர்; தாயார் தெய்வ நாயகி அம்மையார். வேளாள மரபினர். இவர் வைணவரா யிருந்து பின்னர்க் கிறித்தவ மதத்தைத் தழுவினர். இவர் இயற் றிய நூல்கள் இரட்சணிய மனோகரம், இரட்சணியக் குறள் முதலி யனவாகும். இவர் காலம் 1828—1900 வரையிலாகும்.

கன்னி பாலனுய்க் காசினி தனிலவ தரித்து
மன்னு சீவகோ டிகளெலாம் வான்கதி மருவத்
தன்னுயிர்ப் பரித் தியாகமுஞ் சிலுவையிற் றந்த
என்னு பாசனு மூர்த்தியை யஞ்சலித் திடுவாம். 4

—எச். எ. கிருட்டினப் பிள்ளை

## 5. மாரிவாயில்

பின்வரும் செய்யுள் மாரிவாயில் என்னும் நூலில் உள்ளது. அந்த நூலை இயற்றியவர் உயர்திரு. நாவலர், ச. சோமசுந்தர பாரதியார் எம். ஏ., பி. எல். அவர்கள் ஆவர். தமிழில் இணையில் லாப் புலமை சான்ற இவர் அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராக விளங்கியவர். திருவள்ளுவர், சேரர் பேரூர், முதலிய ஆராய்ச்சி நூல்களை எழுதியுள்ளார்.

பாடுதுநாம் தமிழணங்கின் பல்புகழும்; பாடிப்
பரவுதுமேல் அவளருளப் பட்டுயர்வோ மன்றே!
ஈடுயர்வில் மொழிக்குழவி என்றும்வளர் இளமை
எழிலினிமைக் கிழவியைநாம் ஏத்திஇறைஞ் சிடுவோம். 5

—உயர்திரு. நாவலர், சோமசுந்தர பாரதியார்

அருஞ்சொற்பொருள்

1. வழுவாது - தப்பாமல், வண்ணன் - நிறமுடையவன்.
2. வளி - காற்று, ஒளி - நெருப்பு, நின்றுயை - நின்றஉன்னை.
5. தடாயேல் - தடுக்காவிடில், சரண் - திருவடிகள், சரண் -

புகலிடம், விரை - நறுமணம், வித்துவக்கோடு - சேர நாட்டில் உள்ள ஒரு திருப்பதி, அரிசினம் - மிகுந்த கோபம்.

4. காசினி - மண்ணுலகம், மன்னு - நிலைபெற்ற, சீவகோடிகள் - கணக்கற்ற ஆன்மாக்கள், வான்கதி - வீட்டுலகம், பரித்தியாகம் - துறத்தல், என் உபாசனாமூர்த்தியை - நான் வணங்கும் கடவுளை, அஞ்சலி - கைகூப்பி வணங்குதல்.

5. மாரி - மேகம், வாயில் - தூது, பாடுதும் - பாடுவோம், தமிழ் அணங்கு - தமிழ்த் தெய்வம், பரவுதுமேல் - துதிப்போமானால், ஈடு உயர்வு இல் - தனக்கு இணையும் தன்னைவிட மேலானதும் இல்லாத, குழவி - குழந்தை, எழில் - அழகு, கிழவி - உரிமையாக உடையவள், ஏத்தி - துதித்து, இறைஞ்சிடுவோம் - வணங்குவோம்.

## வினாக்கள்

1. தேவாரம், திருவாசகம்—இப்பெயர்கள் வந்த காரணத்தைக் கூறுக.

2. நாவுக்கரசர் வேண்டும் வரம் யாது ?

3. குலசேகர ஆழ்வார் பாசுரத்தில் அமைந்துள்ள உவமையை விளக்கி, உவமேயத்தோடு பொருத்துக.

4. நாவுக்கரசர், கிருட்டினப்பிள்ளை—இவர்களது வரலாற்றுக் குறிப்புத் தருக.

5. திரு. ச. சோமசுந்தர பாரதியார் தமிழை எவ்வாறு புகழ்ந் துள்ளார் ?

# உரைநடைப் பகுதி

## 1. அதியமானின் வள்ளன்மை

[வித்துவான் திரு. வா. மாணிக்கம்]

தம்மிடம் உள்ள பொருள்களைப் பிறருக்கு வரையாது வழங்குவது, வள்ளன் மைஅல்லது வண்மை எனப்படும். இத்தகைய வண்மை மிக்க வள்ளல்கள் பலர் சங்க காலத்தில் தமிழகத்தில் திகழ்ந்தனர் என்று நூல்கள் தெரிவிக்கின்றன. புலவர்கள் பலர் அவர்களைப் புகழ்ந்து பாடியுள்ள பாக்களிலிருந்தே இதனையறிகின்றோம். இவர்கள் மாரிபோல் கைம்மாறு கருதாமற் பொருளை இரவலர்க்கும், புலவர்க்கும் வாரி வழங்கியவர்களாவர். இவர்கள் ஈத்துவக்கும் இன்பத்தையே பிறவிப் பயன் எனக் கொண்டனர். இரப்பவர்க் கீயாதிருப்பதினும் இறப்பதையே இன்பமாக எண்ணும் இயல்பினர்.

இத்தகைய வள்ளல்களில் ஒருவன்தான் அதியமான். இவனது முழுப்பெயர் அதியமான் நெடுமான் அஞ்சி என்பதாகும். இவன் சேர மரபைச்சேர்ந்த ஒரு சிற்றரசன்; குதிரை மலைக்குத் தலைவன்; தகடூரைத் தலைநகராகக் கொண்டு தனியரசு செலுத்தியவன்; மழவர்கள் என்னும் மரபினர்க்குத் தலைவன்; ஆண்மைமிக்க வீரன்; அஞ்சா நெஞ்சினன்; விழுப்புண்படாத நாளை வீணாளாகக் கருதுபவன். இத்தகைய பெரு வீரனை அதியமான் தமிழ்ப் புலவர்களுடன் அளவளாவுவதிலும், தமிழ்ப் பாக்களைக் கேட்பதிலும் பெருவிருப்புக் கொண்டவனாயிருந்தான். பழுத்த மரத்தை நாடி வௌவால்கள் பறந்து செல்வது இயற்கைதானே! அவ்வாறே தமிழ்ப் புலவர்கள் இடைவிடாமல் அதியமானிடம் வந்து கொண்டே யிருந்தனர். அவன் பெயர் புலவர்களின் பாடல்களில் இடம்பெற்று அழியாத்தன்மையை அடைந்து விட்டது. தமிழ்நாடும், தமிழ் மொழியும் நிலைகெடாத

வரையில் அவன் புகழும் அழியாது நின்ருேங்கும் என்பது உண்மை.

கடைச் சங்க காலத்தில் வாழ்ந்த நல்லிசைப் புலமை மெல்லியலாருள் தலைசிறந்தவர் ஒளவையார். அவர், அதியமானின் தமிழார்வத்தையும், கொடைப் பண்பை யும் பற்றிக் கேள்விப்பட்டார். எனவே, அவர் அவனைக் காணும் கருத்தோடு தகடூரை யடைந்தார். அதியமானைக் கண்டார். தமிழ்ப் பாடல்களைப் பாடி அவனை மகிழ்வித் தார். ஒளவையாரின் பொருள் மிக்க அருங் கவிகளில் அவன் பெரிதும் ஈடுபட்டான். அவரது பாடல்களை அடிக்கடி கேட்கவேண்டும் என்னும் பெருவிருப்பம் அவ னுக்கு உண்டாயிற்று. அவரது நற்பண்புகள் அவனது உள்ளத்தைக். கவர்ந்தன. பரிசில் அளித்துவிட்டால் அவர் அவ்விடத்தைவிட்டு அகன்று விடுவாரே என அவன் அச்சம் கொண்டான். பரிசில் கொடாமல் இருந் தால் அவர் சிறிது காலமாவது தன்னுடன் தங்குவார் எனக் கருதினன். ஆதலால், அவன் ஒளவையாருக்குப் பரிசில் கொடாமல் காலந் தாழ்த்தான்.

அதியமான் பரிசில் கொடாது நீட்டித்தலைக் கண்ட ஒளவையாருக்குச் சினம் மூண்டது. அதியமானை வள்ளல் என உலகம் உரைப்பது உண்மை யல்லவோ என அவர் உள்ளம் உளைந்தது. அவனது தமிழறிவிலும் ஐயந் தோன்றியது. அதனல் அவர் அதியமானின் அரண் மனையில் தங்காது வெளியே வந்துவிட்டார். கடிமனை யின் கடைவாயிலில் காவலன் ஒருவனைக் கண்டார். அவனை நோக்கி ஒளவையார், ''வாயிற் காவல! உனது தலைவன் வள்ளல் எனப் பலரும் வழங்கிய வார்த்தை கேட்டு இங்கு வந்தேன். அது பொய் என்பது இப் பொழுதுதான் புலப்பட்டது. நான் இங்கு வந்து பல நாட்கள் ஆயின. எனினும், அவன் எனக்குப் பரிசில் கொடுத்திலன். அதன் பொருட்டு நான் கவல்கின்றேன் இல்லை. என்னைப் போன்றவர்கட்கு எங்குச் சென்ருலும் உணவுண்டு. கூர்மையான ஒரு கோடரியைக் கொண்டு காட்டிற்குச் சென்று விறகு வெட்டும் ஒருவனுக்கு விறகு

கிடைக்காமற் போய்விடுமா? நான் செல்கின்றேன். நீ இதனை உன் அரசனிடம் சொல்லிவிடு" என்று சொல்லி அவ்விடத்தினின்றும் செல்லத் தொடங்கினர்.

ஔவையார் கூறிச் சென்றதை வாயிற் காவலன் உடனே அதியமானிடம் கூறினன். அது கேட்ட அவன் அச்சமும் அவலமும் அடைந்து, விரைந்து சென்று ஔவையாரை அடைந்தான். தனது பிழையைப் பொறுத் தருளுமாறு வேண்டினன். தனது உள்ளக் கருத்தை அவரிடம் உரைத்தான். அரண்மனைக்குத் திரும்பி வருமாறும் இரந்தான். ஔவையார் அதியமானின் கருத்தை யுணர்ந்தார். புலவர்களிடம் அவன் கொண்டிருந்த அன்பை அப்போதுதான் அவரால் அறிய முடிந்தது. இத்தகைய மன்னனின் மனம் அருந்துயர் அடையும்படி செய்தோமே என்று அவர் தம்மையே நொந்து கொண்டார். பின்பு, அதியமானுடன் அவர் அரண்மனைக்குத் திரும்பிச் சென்று பரிசில் பல பெற்றார். அங்கேயே சில காலம் தங்கியிருந்தார்.

அதியமான் தென்மலையில் அரிதிற் கிடைக்கும் அருக்கனியாம் கருநெல்லிக் கனியைப் பற்றிக் கேள்வியுற்றான். அக்கனி அமிழ்தத்தின் தன்மையைக் கொண்டது. உண்டவரை நீண்டநாள் உயிர் வாழச் செய்வது. எனவே, அங்குச் சென்றான். பலநாள் முயன்று பாதையமைத்தான். பெருமலை விடரகத்து இருந்த அக்கனியை அரிதிற் கைக்கொண்டான். அதனை உண்ணவும் விரும்பினன்.

அந்நிலையில் அதியமான் தனது வருங்கால நிலை பற்றி நினைக்கலானன்: "ஆம்! இந்த நெல்லிக்கனியை நான் உண்பேன். நெடுங்காலம் உயிருடன் வாழ்வேன். அரசர்கள் பலரை வெல்வேன். பகைவர்கள் என்னுடன் போர் செய்ய அஞ்சுவர். நெடுநாள் உயிர் வாழ்ந்த மன்னன் எனப் பிற்காலத்தில் என்னைப் போற்றுவர்" என அவன் எண்ணினன். மறுகணம் அவனுக்கு ஔவை மூதாட்டியின் நினைவு வந்தது. அவனது மனம் மாறியது. "ஆம்! ஆம்; உண்மைதான்; நான் பல வாண்டுகள்

உயிரோடு வாழ்வதனுல் என்ன பயன்? போரில் புகுந்து உலகில் துன்பத்தையே யல்லவா மிகுவிப்பேன்? ஆனுல், ஔவை இக்கனியை உண்டால், ஆ! எவ்வளவு நன்மை யுண்டாகும்! அழியாச் செல்வமாகிய அருந்தமிழ்ப் பாடல்கள் பல அவர் வாயிலிருந்து வருமே! தமிழ் மொழி நன்கு தழைக்குமே! மாநில மாந்தர் மாண்புற்று வாழ்வு பெறுவரே! சரி! இதுதான் சிறந்த முடிவு. அரிதிற் பெற்ற அமுதக் கனியை அவருக்கே அளிப்பேன். இதன் பெருமையை முதலில் உரைத்தால், அவர் இதை உண்ண மறுத்தாலும் மறுக்கலாம். ஆகவே, முதலில் அவர் இதனை உண்ணுமாறு செய்வேன். பின்னரே அதன் பெருமையைப் பகர்வேன்'' என நினைந்து உவந்தான். அங்ஙனமே • ஔவையாரை உண்ணவும் செய்தான். என்னே அதியமானின் கொடைத்திறம்! பிறர்க்கென வாழும் பேரருளாளனன்றே அவன்!

அருந்திய பின்னரே ஔவையார் அக்கனியின் அருமை பெருமைகளை அறிந்தார். அப்பொழுது அவரது மனம் எவ்வாறு இருந்திருக்கும் என்று நீங்களே சிந்தித்துப்பாருங்கள். அதியமானின் அரும் பண்பினை நினைந்து பெருவியப் பெய்தினுர். அதியமானை நோக்கி, "அதிய! பெருமலை விடரகத்து விளங்கிய சிறியிலை நெல்லிக் கனியை அதன் அருமை அறிவியாது சாதல் நீங்க எனக்குக் கொடுத்தருளினுய். எனவே, தன்னலங் கருதாது, தேவர் ஆக்கம் கருதி ஆலகாலத்தினை உண்டு அமுதத்தினை அவர்களுக்கு அளித்த அரனைப்போல், நீயும் நீடூழி காலம் வாழ்வாயாக'' என்று வாழ்த்தினுர்.

அதியமான் போரில் விழுப்புண்ணேற்று விண்ணுலகெய்தினுன். அவன் பிரிவாற்ருது அருந்துயர் அடைந்த ஔவையார் செயலற்ற நிலையில் அவனை நினைந்து வருந்திப் பாடினுர். அதில் அவர் அதியமானின் அரும் பண்புகளை யெல்லாம் அனைவரும் அறியும்வகை அறைந்துள்ளார். அது பின் வருமாறு:

"அதியமான், பெருஞ்சோறு கிடைத்தால் எமக்கே ஈந்து விடுவான். சிறு சோறு கிடைத்தால் எம்மோடு

இருந்து கூடவுண்டு இன்பம் நல்குவான். உணவு கிடைக்கும் இடங்களை எமக்கு அளித்துவிடுவான். அம்பும் வேலும் பாய்ந்து வருமிடங்களைத் தனக்கமைத்துக் கொள்வான். அக்காலங் கழிந்ததே! நறுமணங் கமழும் தன் கையால் புலால் கமழும் எம் தலையைத் தடவிக் கொடுப்பான். அந்நாள் இனி வருமோ? பகைவன் பகழி அவன் ஆகத்தில் ஆழ்ந்தது. ஆ! அவன் மார்பிலோ அந்த அம்பு பாய்ந்தது? இல்லை! இல்லை! பாணர்களின் மண்டைப் பாத்திரத்தில் பாய்ந்தது. இரப்பவர் கையில் பாய்ந்தது. புலவர்களின் நாவில் புகுந்தது. இனி, இவ்வுலகில் பாடுகின்றவர்களும் இல்லை. பாடுகின்றவர்களுக்கு ஒன்றைக் கொடுப்பவரும் இல்லை. பிறர்க்குப் பயன்படாது பூத்து உதிரும் பகன்றைப்பூப் போல பிறர்க்குப் பயன்படாது வாழ்வோரே இவ்வுலகில் பலராவர்" என்பது.

ஔவையார் பாடலின் கருத்தைக் கவனியுங்கள். தமிழ் நாட்டில் வாழும், தமிழைத் தாய்மொழியாகக் கொண்டுள்ள நாமும் புலவர் பாடும் புகழ்பெற வேண்டும். அதுவே தமிழரின் பண்பு. என்றும் பொன்றுது நிற்பது புகழேயன்றோ! அப்புகழுடைலப் பெறுதலே பிறவியெடுத்ததன் பயன். மாணவர்கள் இதனை மனத்திற் கொண்டு மாண்புற வாழ்தல் தலையாய கடனாகும்.

### அருஞ்சொற்பொருள்

வரையாது - அளவுஇன்றி, வள்ளன்மை - கொடைக்குணம், கைம்மாறு - பதில் உதவி, இரவலர் - பிச்சை ஏற்பவர், விழுப்புண் - மார்பிலும் முகத்திலும் பெறும் புண், இசை - புகழ், உளைந்தது - துன்புற்றது. கடி - காவல் உள்ள, உரிச்சொல்; கவல்கின்றேன் - கவலை கொள்கின்றேன், விடரகம் - மலைப்பிளவு.

ஆக்கம் - முன்னேற்றம், அரன் - சிவன், ஆகம் - மார்பு, புலால் - மாமிசம், பகழி - அம்பு, மண்டைப் பாத்திரம் - பிச்சை எடுக்கும் ஓடு.

## வினாக்கள்

1. அதியமானின் நற்குணங்கள் யாவை?

2. அதியமான் ஔவையாருக்குப் பரிசில் தராது தாமதித்திருந்தது ஏன்? அதன் விளைவு என்ன?

3. ஔவையாருக்கு, அதியமான் புலவர்கள் பால் கொண்டுள்ள அன்பு எப்பொழுது புலனாயிற்று?

4. கருநெல்லிக் கனியைப் பெற்ற அதியமான் தன்னுள் எண்ணியவற்றைக் கூறுக.

5. நெல்லிக் கனி உண்ட ஔவையார் அதியமானை எவ்வாறு வாழ்த்தினார்?

6. அதியமான் இறந்தபோது ஔவையார் வருந்திக் கூறியவை யாவை?

## இலக்கணப் பயிற்சி

1. சொற்களைப் பிரித்து எழுதுக: விழுப்புண், வீணாள், பெருவீரன், நல்லிசைப் புலமை, தென்மலை, அருந்துயர், அங்குச் சென்றார், விடரகம்.

2. அதியமான் - பெயர்ச்சொல், விரும்பினான் - வினைச்சொல், மற்று - இடைச்சொல், கடி (மனை) - உரிச் சொல். தமிழில் இங்ஙனம் சொற்கள் நான்கு வகைப்படுதலை அறிக.

இடைச் சொல்லுக்கும் உரிச் சொல்லுக்கும் மும்மூன்று உதாரணங்கள் தருக.

## 2. சோழன் கரிகாலன்

[வித்துவான், திரு. அ. பரிமேலழகன்]

தமிழ் நாடு தொன்றுதொட்டு முடியுடை மன்னர்களாகிய சேர சோழ பாண்டியர் என்ற மூவேந்தர்களாலும் ஆளப்பட்டு வந்தது. அதில் காவிரிப்பூம்பட்டினத்தைத் தலைநகராகக் கொண்டு சோழ மன்னர்கள் சோழ நாட்டை ஆண்டு வந்தனர். சோழ அரசர்களில் கரிகாலன் சிறந்த முறையில் ஆட்சி செலுத்தி வந்தவனுவான்.

கரிகாலன் தந்தையின் பெயர் உருவப் பஃறேர் **இளஞ்சேட் சென்னி** என்பதாம். தாய் அழுந்தூர் வேளின் மகள். மனைவி நாங்கூர் வேளின் மகளாவாள். இவனது இளமைக் காலத்திலேயே இவன் தந்தை காலமாகிவிட்டதனுல், சோழ அரசுரிமை பற்றித் தாயத்தாருக்குள் குழப்பம் ஏற்பட்டது. இவனது தாயத்தார் சிலர் இவனைக் கொன்று, சோழ ஆட்சியைக் கைப்பற்றப் பல சூழ்ச்சிகள் செய்தனர். அப்பொழுது இவனது தாய் மாமனுகிய **இரும்பிடர்த் தலையார்** என்பவரது உதவியால் இவன் கரூரில் ஒளித்து வைக்கப்பட்டிருந்தான்.

அக்கால வழக்கப்படி **கழுமலம்** என்னும் கடிநகரில் பட்டத்து யானையைக் கட்டவிழ்த்து விடவே, அது கருவூரில் ஒளிந்திருந்த கரிகாலனை எடுத்து வந்து, அவனை அரசுக்குரியவனுக்கிற்று.

இவன் அரசுரிமை பெற்ற சில நாட்களில், இவன் ஆண்டில் இளையவன் எனக் கருதி இவனைக் கொன்று நாட்டினைக் கைப்பற்றக் கருதி இருந்த சிலர், இவன்மீது பகைமை கொண்டு இவனைப் பிடித்துச் சிறையிலிட்டனர். கரிகாலன் தகுந்த சமயம் நோக்கிச் சிறை மதிலையிடித்து வெளியேறுவான் என்று நினைத்துப் பகைவர்கள் இவன் உறைந்த சிறை மதிலுக்குத் தீயிட்டனர். அத்தீயினுக்கு அஞ்சாது அதனை மிதித்து வெளியேறுகையில் இவன்

கால் கரிந்து விட்டதனால் இவனது வீரத்தைப் பாராட்டி யாவரும் இவனைக் கரிகாலன் என்றே கூறிவந்தனர். இவனது இயற்பெயர் திருமா வளவன் என்பதாம்.

இவன் ஆட்சிசெலுத்தி வருங்காலத்தில் தம்முள் மாறுபட்ட வழக்கினையுடைய இருவர், தங்களுக்கு நீதி வழங்க வேண்டும் என்பதுணர்ந்த அம்முதுமக்கள், "இவ் வரசன் தன் வழக்கின் முடிவை ஆராய்ந்து கூற அறிவு நிரம்பப் பெருதவன்" என்று நினைத்து இகழ்ந்தனர். இதனை உணர்ந்த கரிகாலன் முதியவர்போல் தலையில் நரைமுடி அணிந்து அவையெய்தி, அவ்வழக்காளர்களது சொற்களைக் கொண்டே அவர்கள் மனமகிழும்படி நீதி வழங்கினான்.

இவனது வீரத்தைச் சிறப்பித்துப் பெருநராற்றுப் படை என்ற நூலில் முடத்தாமக் கண்ணியார் என்ற புலவர் பாடியுள்ளார். இவன் முருகன்போன்ற சீற்றமும் வலிமையுமுடையவன் என்றும், பகைவர்கள் நாட்டை யழித்து அவர்களை ஏவல் கேட்கும்படி செய்தான் என் றும் கூறியுள்ளார். இவன் வெண்ணிப் பறந்தலையில் சேரமான் பெருஞ்சேரலாதனோடும், பாண்டியனோடும் பொருது அவர்களைத் தோல்வியுறச் செய்தான். அவ்விரு பெருவேந்தர்களுக்கும் துணையாக வந்த வேளிர் பதி னொருவரையும் தோற்கடித்தான்.

சிலகாலம் சென்றபின் வாகைப் பறந்தலை என்னு மிடத்தில் இவனுடன் போர் செய்யவந்த பாண்டியன், ஒளியர், அருவாளர், வடவர், குடவர், பொதுவர், இருங்கோவேள், கொங்கர், மழவர் ஆகிய ஒன்பது மன்னர்களும் இவனால் வெல்லப்பட்டு, இவன் எதிரில் செல்லவும் அஞ்சி ஒரே நாளில் தங்கள் குடைகளையும் போட்டுவிட்டு ஓடிவிட்டனர். இவ்வாறு தமிழகத்து முடிமன்னர்களையும், குறுநில மன்னர்களையும் வென்ற தோடு அமையாது போரில் பெரு விருப்புடையவனாய் வடநாட்டு அரசர்களையும் வென்று மேலும் வடதிசை நோக்கிச் சென்றான். ஆங்கு இமயமலை குறுக்கிட்டுத் தடுத்தமையால், "என் விருப்பத்தை இது தடுத்தது"

என்று சினந்து, அதன் உச்சியில் தனது புலிக் கொடியைப் பொறித்து மீண்டான்.

அவன் மீண்டு வரும்போது வச்சிரநாட்டரசன் ஒரு முத்துப் பந்தரையும், மகதநாட்டரசன் ஒரு பட்டி மண்ட பத்தையும், அவந்திநாட்டரசன் ஒரு வாயிற் றோரணத் தையும் திறையாக அளித்தனர்.

அப்பொருள்கள் யாவும் கரிகால் வளவனால் புகாரில் கொண்டுவந்து வைக்கப்பட்டன. மேலும், கரிகாலன் இலங்கைமீது படையெடுத்துச் சென்று, அந்நாட்டு மன்னனையும் வென்று சிங்களக் குடிகள் பலரைச் சிறைப் படுத்தி மீண்டான் என்று இலங்கைச் சரிதமாகிய மகா வம்சம் கூறுகிறது.

இவன் புலவர், கூத்தர், அறிவர், பொருநர், வீரர் முதலியோர்க்கு வரையாது வழங்கிய வள்ளியோ னவான்.

இவன் தன் நாட்டை வளம்படுத்தக் கருதிக் கண் ணுங் கருத்துமாக இருந்து வேளாண்மை, வாணிகம், கைத் தொழில் இவற்றால் தன் நாட்டின் செல்வத்தைப் பெருக்கினான். முதலில் வேளாண்மைத் தொழிலைச் சிறப் புறச் செய்தற்குக் காவிரியின் இரு மருங்கு கரை கட்டியும், வெட்டாறு, அரசிலாறு முதலிய ஆறுகளை வெட்டியும், காடுகளைத் திருத்தி விளை நில மாக்கியும், வேறு பல குளங் கள், ஏரிகள் முதலியன அமைத்தும், உழுதொழில் செய் வோருக்குப் பல வசதிகள் செய்து தந்துள்ளான்.

கரிகாலன் காலத்தில் தமிழ்நாடு வாணிகத்தில் தலை யோங்கி யிருந்தது. சீனா முதலிய நாடுகளிலிருந்து கற் பூரம், பனிநீர், குங்குமம் முதலியனவும், பல ஆபரணங் களும் காவிரிப் பூம் பட்டினத்தில் இறக்குமதி செய்யப் பட்டன. எகிப்து, ரோம் முதலிய நாடுகளிலிருந்து பொன்னணிகளும், பொன்னாலாகிய கலங்களும் இறக்கு மதி செய்யப்பட்டு, இங்கிருந்து மிளகு, ஏலம், இலவங்கம், அரிசி, மயிற்றோகை முதலியன அந்நாடு களுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன. புகார் என்ற காவிரிப் பூம் பட்டினத்தில் ஏற்றுமதி இறக்குமதிப் பொருள்கள்

மூட்டை மூட்டையாக மலைபோல் குவிந்து கிடந்தன என்றும், கரிகாலனது புலி முத்திரை யிடப்பட்டிருந்தன என்றும் தெரியவருகிறது. அப்புகார் நகரில் பல நாட்டு வேற்றுமொழி பேசும் வணிகர்களும், புகார் நகர வணிகர்களும் கலந்து வசித்தனர் என்றும், அவர்கள் யாவரும் சிறந்த மேன்மையாளர் என்றும் சங்க நூல்களால் அறியலாம்.

கரிகாலன் காவிரிப் பூம் பட்டினத்தில் பல கைத்தொழிற் சாலைகளை நிறுவி இருந்தான். அந் நகரின் கடலோரத்திலிருந்த மருவூர்ப் பாக்கத்தில் பருத்தி, பட்டு நூற்சாலைகள் அமைந்திருந்தன. வெண்கலக் கன்னார், சித்திரக்காரர், சிற்பிகள், இரத்தின வேலை செய்வோர், தையற்காரர், நெட்டிவேலை செய்வோர், செம்மட்டித் தொழிலாளர், தச்சர், கொல்லர், தட்டார் முதலியோருக்குத் தொழிற்சாலைகள் அமைத்துக் கொடுக்கப் பட்டன ; கைத்தொழில் ஆதரிக்கப்பட்டது.

இவ்வரசன் காவிரிப் பூம் பட்டினம், உறையூர், காஞ்சிபுரம் ஆகிய நகரங்களையும், பல ஊர்களையும் திருத்த முறப் புதுக்கி அமைத்துள்ளான். அவைகளே அல்லாமல் பல கோயில்கள் கட்டியும், திருவிழாக்கள் செய்வித்தும், பல கல்விச்சாலைகள், நீதி மன்றங்கள், கிராம சபைகள், (பஞ்சாயத்துகள்) அமைத்தும் பலவகைகளிலும் நாட்டிற்கு நன்மை செய்து வந்துள்ளான்.

இவனால், புகார் நகரில் இளவேனிற் காலத்தில் 28. நாட்கள் நடைபெற்று வந்த இந்திர விழாவும் ஆடித் திங்களில் நடைபெற்றுவந்த புதுப்புனல் விழாவும் சிறப்புறக் கொண்டாடப்பட்டன.

கரிகாலன் சிறந்த தமிழ்ப் புலமை யுடையவன். தமிழ் மொழியைப் பொன்னே போல் போற்றி வளர்த்து வந்திருக்கிறான். இவனை நல்லிசைப் புலவர்களாகிய பரணர், நக்கீரர், கருங்குழலாதனார், வெண்ணிக் குயத்தியார் முதலியவர்கள் புகழ்ந்து பாடியுள்ளார்கள். இவன்மீது முடத்தாமக்கண்ணியார் என்ற புலவர் பொருநராற்றுப் படை என்ற நூலையும், கடியலூர் உருத்திரங்கண்ணனார்

என்ற புலவர் பட்டினப்பாலை என்னும் நூலையும் பாடியுள்ளார்கள். பட்டினப்பாலை பாடிய உருத்திரங் கண்ணனுருக்கு இவன் பத்து லட்சம் பொன் பரிசளித் திருப்பதனுல், இவன் தன் தாய்மொழியை மிக்க ஆர்வத் தோடு போற்றி வளர்த்து வந்திருக்கிருன் என்பதை நன்கு உணரலாம். இவன் தன் மாமனுகிய இரும்பிடர்த் தலையாரை அரசியல் புலவராகவும், தனக்கே ஆசிரியராக வும் அமைத்துக் கொண்டுள்ளான்.

இவனுக்குக் கிள்ளிவளவன், நலங்கிள்ளி, மாவளத் தான் என்ற புதல்வர்களும், ஆதிமந்தி என்ற புதல்வி யும் இருந்தனர்.

இவர்கள் யாவரும் நிரம்பிய புலமையுடையவர்கள். இவன் கி. பி. முதல் நூற்றுண்டில் வீரம், வன்மை, நீதி, சூழ்ச்சித்திறன், ஆட்சிவன்மை முதலியவற்றுக்கெல்லாம் எடுத்துக்காட்டாகவும், முடியுடை வேந்தர்களில் தலை சிறந்தவனுகவும் விளங்கி வந்த பெருமை யுடையவ னுவான்.

### அருஞ்சொற்பொருள்

தாயத்தார் - சொத்து உரிமை உடையார், கடி - காவல் உள்ள, பொருது - போர் செய்து, முடிமன்னர் - பேரரசர், குறுநில மன்னர் - சிற்றரசர், வள்ளியோன் - கொடைக்குணம் வாய்ந்தவன், மயில் + தோகை - மயிற்றோகை.

### வினுக்கள்

1. கரிகாலனுடைய பெற்றோர் யார் ?
2. கரிகாலன் எவ்வாறு அரசுரிமை பெற்றுன் ?
3. கரிகாலனுக்கு இப்பெயர் வரக் காரணம் என்ன ?
4. இருமுது மக்களுக்குக் கரிகாலன் எவ்வாறு நீதி வழங்கினுன் ?
5. முடத்தாமக் கண்ணியார் கரிகாலனது வீரத்தை எவ்வாறு சிறப்பித்துள்ளார் ?
6. வெண்ணிப் பறந்தலை, வாகைப் பறந்தலை இவ்விடங்களில் நிகழ்ந்த போரினைப் பற்றி நீவிர் அறிவது யாது ?
7. கரிகாலனுக்கு வடநாட்டரசர் எவற்றைத் திறைப் பொருளாகத் தந்தனர் ?
8. மகாவம்சம் என்பது யாது ? அது கூறுவது என்ன ?

9. கரிகாலன் உழவர்களுக்குச் செய்த உதவி யாது ?

10. கரிகாலன் காலத்தில் வாணிகம் மேம்பாடுற்று இருந்ததைக் குறித்துப் பதினைந்து வரிகள் எழுதுக.

11. கரிகாலன் கைத்தொழிலை ஆதரித்த வகையைப் புலப் படுத்துக.

12. கரிகாலன் நாட்டிற்குச் செய்த நன்மைகளை விளக்கி வரைக.

13. கரிகாலனைப் பாடிய புலவர்கள் யாவர் ?

14. பட்டினப் பாலை—குறிப்பு வரைக.

### இலக்கணப் பயிற்சி

1. கழுமலம், பகைமை, கால், ஆட்சி, வேந்தர், நாடு, குடை, வெட்டாறு, மேன்மை, இளவேனில், கண்—இவற்றுள் ஒவ்வொன்றும் பெயர்ச்சொல் வகையில் எதனைச் சார்ந்தது ?

2. செய்வித்து, கட்டி, ஆதரிக்கப்பட்டது, கிடந்தன, வருகிறது, பொறித்து, மீண்டான்—இவற்றுள் ஒவ்வொன்றும் வினைச்சொல் வகையில் எதனைச் சார்ந்தது ?

## 3. நல்லார் இணக்கம்

[திரு. ரா. பி. சேதுப்பிள்ளையவர்கள் பி. எ., பி. எல்.,
தமிழ் ஆராய்ச்சித் துறைத் தலைவர், சென்னைப் பல்கலைக் கழகம்.]

தமிழ் நாடு தழைத்தோங்கியிருந்த காலத்தில் கோப் பெருஞ் சோழன் என்னும் மன்னவன் சோழநாட்டை ஆண்டு வந்தான். காவிரிக் கரையில் அமைந்த உறை யூரைத் தலைநகராகக் கொண்டு செங்கோல் ஓச்சிய அவ் வளவன் புலவர் பாடும் புகழுடையவனாய் விளங்கினான்.

அக்காலத்தில் பாண்டி நாட்டிலமைந்த பிசிர் என்னும் சிற்றூரில் புலமை சான்ற ஆந்தையார் ஒருவர் இருந்தார். அவரைப் பிசிராந்தை யென்று அன்பர்கள் அழைத்தார்கள். கோப்பெருஞ் சோழனும் பிசிராந்தை யாரும், வேறு வேறு நாட்டிலும், வேறு வேறு குலத் திலும் பிறந்தவராயினும் ஒத்த உணர்ச்சியுற்றமையால் உயரிய நண்பராயினர். சோழ மன்னன், உறையூரில் அரசு வீற்றிருந்தான். ஆந்தை, பாண்டிய நாட்டுப் பழம்பதியாகிய பிசிர் என்னும் ஊரில் வாழ்ந்தார். அரசர் கோமான் வளவர் குலத்தில் பிறந்தவன். ஆந்தை ஆதன் குடியிற் பிறந்தவர். சோழன், பெருஞ் செல்வம் படைத்தவன். ஆந்தை, அறிஞர்க்கு அணியாய வறுமை பூண்டவர். இங்ஙனம் குலத்தாலும், நலத்தாலும், பிற வற்றாலும் வேறுபட்ட அரசனும் ஆந்தையும் உண்மைக் கேண்மைக்கோர் உயரிய சான்றாக விளங்கினர். இருவர் நண்பராதற்கு ஒருவரோடொருவர் நெருங்கிப் பலகாற் பழகுதல் வேண்டற்பாலதன் றென்றும், ஒத்த உணர்ச் சியே நட்பென்னும் உரிமையைப் பயக்கு மென்றும் தமிழ்மறை அருளிய வாய்மைக்கு அரசனும், ஆந்தையும் சிறந்த எடுத்துக்காட்டாக அமைந்தார்கள்.

கோப்பெருஞ் சோழன் தன்பால் வைத்த தலையாய அன்பின் திறமறிந்த ஆந்தையார், ஒருநாள் மாலைப் பொழுதில் ஆகாய வழியே விரைந்து சென்ற ஓர்

அன்னத்தை நோக்கிப் பகர்ந்த அழகிய மொழிகள் நேயம் நிறைந்த அவன் நெஞ்சின் நீர்மையை நன் குணர்த்துவனவாம். வளமார்ந்த குமரித் துறையில் அயிரை மீன் அருந்தி மாலைப் பொழுதில் தன்மனை நோக்கிச் சென்ற ஓர் ஆண் அன்னத்தைக் கண்ட ஆந்தையார், "அன்னமே! அன்னமே!! வளமார்ந்த குமரித்துறையில் நீ அயிரை மீன் அருந்தி வடமலையி லுள்ள உன் மனையை நோக்கி ஏகுவாயாயின், ஒன்று சொல்வேன், கேள்! நீ செல்லும் வழியில் சோழநாடு அமைந்திருக்கின்றது. அந்நாட்டின் தலைநகராய கோழி என்னும் உறையூரில் ஓங்கி உயர்ந்த அழகிய மாளிகை யில் சோழ மன்னன் வாழ்கின்றான். அவ்வரண்மனையின் வாயில் காப்போனைக் கண்டு அஞ்சாது நேராக மாளிகை யின் உள்ளே நீ சென்றால், கோப்பெருஞ் சோழன் என் னும் எனது கோமானைக் காண்பாய். அவன் முன்னே நின்று, 'வளவனே! நான் பிசிர் என்னும் ஊரிலுள்ள ஆந்தையின் அடியுறை என்று சொல்வாயாயின், மன மகிழ்ந்து அன்பார்ந்த நின் பேடை அணிதற்குரிய நல் லணியை அம் மன்னன் உனக்கு நயந்தளிப்பான்" என்று உரைத்த அருமை சான்ற மொழிகளில் அரசனும், அப் புலவரும் உயிர் நண்பராய் அமைந்திருந்த தன்மை நன்கு விளங்கும்.

நெடுங்காலம் உறந்தையில் வாழ்ந்து மன்னுயிரைக் காத்து வந்த மன்னவன், முதுமை வந்துற்ற பொழுது தன்னுயிர்க்கு உறுதுணையாய தவம்புரியக் கருதி நாடும் செல்வமும் துறந்து கானகம் சேர்ந்தான்.

இவ்வாறு சோழன் அருந்தவம் புரியப் போந்தான் என்று அறிந்த ஆந்தையார் தாமும் உற்றார் உறவினரை நீத்துச் சோழன் இருந்த சூழலை நோக்கி நடந்தார். ஆருயிர் நண்பராகிய ஆந்தை தம்மைத் தேடி வருதல் ஒருதலை என்றுணர்ந்த அரசன் தன் அருகிருந்த சான் றோரை நோக்கி, "அன்பரே! என் உயிர்க்குயிராய் உள் ளவன் தென்னவன் நாட்டில் அமைந்த பிசிர் என்னும் சிற்றூரில் உள்ளான். செல்வச் செழுமையுற்று நான்

வாழும் காலத்தில் அவன் வராதிருப்பினும், இவ்வல்லற் காலத்து ஈங்கு வாராது ஆங்கு நில்லான்'' என்று அறிவுறுத்தி ஆவி சோர்ந்தான்.

காடும் நாடும் காலினுற் கடந்து ஆந்தையார் சோழன் தங்கியிருந்த சூழலே வந்தடைந்த பொழுது, அவன் ஆவி துறந்தானென்று அறிந்தார். அந்நிலேயில், அன்பனேப் பிரிந்திருக்க ஆற்றாத ஆந்தையார் உண்ணு நோன்பினே மேற்கொண்டு உயிர் துறந்தார்.

இவ்வாறு ஒத்த உணர்ச்சியுடையார், உயரிய நண்பராய் வாழும் உண்மைக்கு ஒரு சான்று காட்டினுர் கவியரசர் கம்பர். வானர நாட்டு வேந்தனுகிய சுக்கிரீவனும், இலங்கை வேந்தன் தம்பியான விபீடணனும் பலவகை வேற்றுமை யுற்றவர். முன்னவன் வானர நாட்டிற் பிறந்தவன். பின்னவன் இலங்கை நாட்டிற் பிறந்தவன். முன்னவன் வெண்ணிறம் வாய்ந்தவன். பின்னவன் கருநிறம் வாய்ந்தவன். எனினும், இருவரும் ஒத்த உணர்வுடையவராய் இருந்தமையால் உள்ளம் ஒன்றி உயரிய நண்பராயினர்.

"தொல்லருங் கால மெல்லாம் பழகினும் தூய ரல்லர்
புல்லலர்; உள்ளந் தூயார் பொருந்துவர் எதிர்ந்த ஞான்றே;
ஒல்லேவந் துணர்வும் ஒன்ற இருவரும் ஒருநா ளூற்ற
எல்லியும் பகலும் போலத் தழுவினர் எழுவிற் ருேளார்''

என்ருர் கவியரசர்.

முன்பு ஒருவரை யொருவர் கண்டு அறியாத அரிக்குல வேந்தனும், அரக்கர் குல அறிஞனும் அறம் நிரம்பிய மனத்தினர் ஆதலாலும், தம் பிறப்பினுல் வந்த புன்மை தீருமாறு அறநெறியாக நின்ற அஞ்சன வண்ணனேடு உறவு பூண்டமையாலும் இருவர் உணர்வும் ஒன்றுபட்டதென்றும், அந்நிலேயில் ஒருவரை யொருவர் எதிர்ப்பட்டமையால், பலநாட் பழகிய பான்மையாளர் போல் இருவரும் ஒருவரை யொருவர் தழுவினர் என்றும் இனிதெடுத்துரைக்கும் கம்பர் கவியில் நட்பின் பான்மை நன்கிலங்குவதாகும்.

இன்பமும் துன்பமும் கலந்த இவ்வுலக வாழ்க்கையில்

இன்பத்தை நிறைப்பதற்கும் துன்பத்தைக் குறைப்பதற்கும் இனிய துணைவர் வேண்டும் என்று அறிந்தோர் கூறுவர். இன்ப நிகழ்ச்சிகளைக் குறித்து நண்பருடன் நாம் கலந்து பேசுங்கால் நம் மனத்தில் மகிழ்ச்சி பெருகுகின்றது. துன்ப நிகழ்ச்சிகளை நண்பரிடம் சொல்லி ஆற்றுதலால் நம் மனத்துயர் மெல்ல மெல்லத் தேய்ந்து ஒழிகின்றது. இதனாலேயே இறைவனால் மாந்தர்க்கு அருளப் பெற்ற சிறந்த நலங்களுள் நட்பும் ஒன்றென்று உயர்ந்தோர் கருதுகின்றனர்.

இத்தகைய நண்பரைத் தேர்ந்து கொள்ளுதல் எளிதாகத் தோன்றினும் உண்மையில் அது மிக அரிது. பொருளாளரது கேண்மையால் ஒன்றும் பெறுதல் இலரெனினும், அன்னார் நண்பரென அயலார் தம்மை மதிப்பரென்றெண்ணி அவரைச் சூழ்ந்திருப்பர் பலர். இப் புன் மக்கள் போலிப் பெருமையாற் பொலி வெய்தக் கருதித் தம் உடலையும் உயிரையும் பொருளுடையார்க்கு அடியுறையாக்குவர். நட்பினாலாய நற்பயனை ஒருவன் பெறல் வேண்டுமாயின் உணர்ச்சி ஒத்தவரோடு நேசம் கொள்ளுதல் அடுக்குமே யன்றிச் செல்வச் செருக்குற்றாரை நண்பரெனக் கருதுதல் சீரழிவிற்கே ஏதுவாகும். உணர்ச்சியால் ஒருமைப் பட்டோர் உலகில் ஒருசிலரே யாவர் என்னும் உண்மை, "ஊரில் ஒருவனே தோழன்" என்னும் முதுமொழியால் உணரப்படும்.

இவ் வுலகில் வாழும் மக்களின் மனப்பான்மையை நன்குணர்ந்த கவிஞர், நண்பராகக் கொள்ளத்தக்கார் இன்னார் என வரையறுத்து வழிகாட்டியுள்ளனர். வேழம் போல் உயர்ந்தாரது கேண்மையை விரும்பாது நாயனைய நல்லாரது நேசத்தைப் பெறல் வேண்டும் என்று நாலடியார் உணர்த்துகின்றது.

"யானை யனையவர் நண்பொரீஇ நாயனையார்
கேண்மை கெழீஇக் கொளல் வேண்டும்—யானை
அறிந்தறிந்தும் பாகனையே கொல்லும் ; எறிந்தவேல்
மெய்யதா வால்குழைக்கும் நாய்"

என்ற நாலடியின் கருத்து அறியத் தக்கதாகும்.

மாநிலத்தில் வாழும் விலங்குகளுள் வேழமே உருவத்தில் உயர்ந்ததாகும். 'யானை இருந்தாலும் ஆயிரம் பொன், இறந்தாலும் ஆயிரம் பொன்' என்னும் பழமொழியே அதன் அருமையை இனிது உணர்த்துகின்றது. இன்னோரன்ன நலங்களெல்லாம் அமைந்திருப்பினும் வேழத்தோடு பழக லாகாதென்று அறிந்தோர் கூறுவர். அவ்விலங்கினிடம் உருவும் திருவும் அமைந்திருப்பினும் குணநலம் காண்டல் அரிதாகும். சீற்றமும் மயக்கமும் அதன்பால் இயல்பாக அமைந்த சிறுமைகளாகும். காட்டில் வாழும் யானையை நாட்டிற் கொணர்ந்து கவளம் ஊட்டி ஏற்ற வகையிற் போற்றினாலும், அவ்விலங்கின் தன்மை சிறிதும் மாறுபடுமாறில்லை. பசி யறிந்து யானைக்கு உணவருத்திப் பேணும் பாகன் என்றேனும் அதன் வெம்மைக்கே இரையாவான். பன்னாட் பழகிய பாகன் என்றும் பாராது, நல்லுணவளித்த நண்பன் என்றும் கருதாது, சீற்றம் உற்றபோது பாகனைச் சிதைக்கும் சிறுமை வேழத்தின் இயல்பாதலால், அவ்விலங்கின் தன்மை வாய்ந்த மாந்தரோடு பழகுதல் ஆகாதென்று ஆன்றோர் அருளிப் போந்தார். இவ் வுலகில் ஏற்றமும் தோற்றமும் வாய்ந்து இறுமாந்து வாழும் செல்வருடன் அல்லும் பகலும் பழகினாலும், அவர் குறிப்பறிந்து குற்றேவல் செய்தாலும், இடையறாது இச்சகம் பேசி இன்புறுத்தினாலும், அன்னார் வெகுளுங்கால் பன்னாட் பழகிய பான்மையாரைச் சிதைக்கச் சிறிதும் தயங்கார். பிறன் செய்த சிறு நன்மையைப் பெரு நன்மையாகக் கருதி, அவன் புரியும் தீமை அனைத்தும் பொறுத்தல் பண்புடையோர் செயலாகும். அவ்வாறன்றிப் பிறன் ஆற்றிய நன்மையனைத்தும் மறந்து, ஒரு சிறு தவறு கண்டவிடத்து ஒறுத்தல் இழிந்தோர் இயல்பாகும். செல்வச் செருக்குற்றோர் பிறர் தமக்குச் செய்யும் நன்மையை மறந்து தீமையையே நினைந்து சீற்றமுறும் தன்மையராதலின், அன்னார் இணக்கம் ஆகாதென்று ஆன்றோர் அறிவுறுத்தினர்.

வேழத்தை உயர்ந்த பொருளெனக் கருதி மதிக்கும்

உலகம், நாயை மிக இழிந்த பொருளெனக் கருதி இகழ்கின்றது. தம் நிலையின் இழிந்த மாந்தரை, நாய்கள் என்று பழிக்கும் பழக்கம் இந்நாட்டில் உண்டு. ஆயினும், அவ் விலங்கினிடம் ஓர் உயர்ந்த குணம் அமைந்திருக்கக் காணலாம். செய்ந்நன்றி அறிதல் என்னும் சீரிய அறத்தை உயிரினும் உயர்வாகப் போற்றும் பெருமை விலங்கினங்களுள் நாய்க்கே சிறப்பாக உரியதாகும். தெருக்களில் குறுக்கு மறுக்காகத் திரியும் நாய் பெரும் பாலும் மக்கள் தம் வீட்டினின்று கழித்தெறிந்த மிச்சிலையே உண்டு மகிழ்கின்றது. இங்ஙனம் கழித்த உணவை உண்டு களிக்கும் நாய், மிச்சிலிட்டாரைக் கண்ட பொழுது உச்சி குளிர்ந்து, வால் குழைத்துத் தலை தாழ்த்து இன்முகங்காட்டி ஆர்ப்பரிக்கக் காணலாம். பகைவராலேனும் கள்வராலேனும் பிறவற்றாலேனும் தனக்குணவிட்ட தலைவனுக்குத் தீங்கு நேருங்கால் அதனைத் தடுக்கும் முயற்சியில் தன்னுயிரையும் கொடுக்கும் உயரிய பண்பு நாயினிடம் உண்டு. ஆழ்நீரில் தவறி விழுந்த தம் தலைவரைக் கவ்வியெடுத்துக் கரைசேர்த்துக் காத்த நாய்களின் கதை இந்நானிலத்தில் பலவாகும். தனக்கினிய தலைவன் நோய்வாய்ப்பட்டு வருந்துங்கால் நன்றி மறவாத நாய் வெருட்டினும் போகாது, அவனருகே கிடந்து ஊண் உறக்கங் கொள்ளாது, கடைக் கண்ணால் அவனை நோக்கி நோக்கிக் கண்ணீர் உகுத்தலை நாம் கண்டிருக்கிறோம். இவ்வாறு தினைத்துணை நன்மை செய்யினும் பனைத்துணையாகக் கொள்ளும் பான்மை வாய்ந்த நாய், தலைவன் காரணமின்றித் தன்னைத் துன்புறுத்திய போதிலும் அவனருள் நினைத்து அகங்குழையும் தன்மைவாய்ந்ததென்று அறிஞர் கருதுகின்றார்கள். சீற்றமுற்ற தலைவன் தன் கரத்திலமைந்த கூரிய வேற்படையை எறிந்து வெந்துயர் விளைப்பினும் அவ் விலங்கு அவனை நோக்கி இன்முகங்காட்டி வால்குழைத்து நிற்கும். உடல் புண்ணுற்று எரியும்பொழுதும் உள்ளம் நன்றியறிந்து மகிழ்தலை நாயினிடம் நன்கு காணலாம். "கொன்றன்ன இன்னாசெய்யினும் அவர் செய்த ஒன்று

நன்று உள்ளக் கெடும்'' என்னும் பொய்யாமொழியின் வழிநின்று, புரவலன் செய்த பெருந்தீமையை அறவே மறந்து, அவன் ஆற்றிய நன்மையை நினைந்து இன்புறும் சால்பு ஏற்றமுடையதன்றோ? ஆகவே, ஏற்றமும் தோற்றமும் இன்றி, எளியராய் இவ்வுலகில் வாழும் மக்களுள், நாயின் நற்குணம் வாய்ந்தோர் உண்டென்றும், அன்னார் ''ஒரு நன்றி செய்தாரை உள்ளத்தில் வைத்து'' அவரிழைக்கும் தீமையெல்லாம் பொறுத்து நலமே புரிவரென்றும், அத்தகைய எளியார் கேண்மையே கொள்ளத்தக்க தென்றும் ஆன்றோர் அருளிய உண்மையை அறிந்து ஒழுகுவோர் நலமார்ந்த நட்பின் சுவையுணர்ந்து இன்புற்று வாழ்வர்.

அருஞ்சொற்பொருள்

ஓச்சிய - செலுத்திய, வளவன் - சோழன், ஆந்தையார் - ஆதன் தந்தையார், சான்ற - நிறைந்த, உணர்ச்சி - எண்ணம், தலையாய முதன்மையான, அடியுறை - அடிக்கண் வாழ்பவர், பேடை - பெண் நாரை, சூழல் - இடம், அல்லல் காலம் - துன்பக்காலம், அடியுரை - அடியின்கண் உரைப்பாய், தூயர் அல்லர் - மனத்தூய்மை இல்லார், புல்லலர் - பொருந்தார், பொருந்துவர் - மனம் பொருந்தி நண்பராவர், ஞான்று - பொழுது, ஒல்லை - விரைவு, எல்லி - இரவு, எழு - தூண், அரிக்குலம் - குரங்கின் கூட்டம், புன்மை - இழிவு, அஞ்சனம் - கருமை, நேசம் - அன்பு, வேழம் - யானை, ஒரீஇ - நீக்கி, கெழீஇ - தழுவி, மெய்யதா - உடம்பின் கண்ணதாக, சிறுமை - குற்றங்கள், கவளம் - யானை உணவு, வெம்மை - கோபம், சிதைக்கும் - கொல்லும், இச்சகம் - உபசார மொழி, மிச்சில் - உண்ட மிகுதி, உகுத்தல் - சொரிதல்.

வினாக்கள்

1. கோப்பெருஞ் சோழனும் பிசிராந்தையும் உள்ளம் ஒன்றிய நண்பரானது எங்ஙனம்? அவர்கள் எவ்வெவ்வகையில் வேறுபட்டிருந்தனர்?

2. பிசிராந்தையார் தன் நண்பர்க்கு அன்னத்தின் மூலம் விடுத்த செய்தி யாது?

3. கோப்பெருஞ் சோழனுக்கும் பிசிராந்தையார்க்கும் உள்ள நட்பின் சிறப்பினை எங்ஙனம் அறியலாம்?

4. கோப்பெருஞ் சோழன் உயிர் துறக்கும்போது கூறியதென்ன?

5. கம்பர் கவியில் நட்பின் பான்மை விளங்குவது எவ்வாறு?

6. இறைவனுல் அருளப் பெற்ற நலங்களுள் நட்பும் ஒன்று என்று அறிஞரால் கருதப்படுவதற்குக் காரணம் என்ன?

7. நாயிடம் காணும் நற்குணம், யானையிடம் காணும் தீக்குணம் யாவை?

8. 'எல்லியும் பகலும் போலத் தழுவினன்' இடஞ்சுட்டி, உவமையின் பொருத்தத்தினை விளக்குக.

9. நல்ல நண்பர்களைப் பெறுவதால் விளையும் நன்மை யாது?

10. நட்புரிமைக்கு உணர்ச்சி ஒத்தல் போதும் என்ற கருத்தினை விளக்குக.

11. 'ஊரில் ஒருவனே தோழன்'—இப்பழமொழியால் அறியப் படுவன யாவை?

## இலக்கணப் பயிற்சி

1. வாழ்ந்தார்: வினைமுற்று, உரைத்த: பெயரெச்சம், கண்டு: வினையெச்சம். இவைகளைப்போல வினைமுற்று, பெயரெச்சம், வினையெச்சம் இவைகளுக்கு வேறு சில உதாரணங்கள் தருக.

2. கீழ்க் கண்ட சொற்களுக்குக் குறிப்புத் தருக: அருந்தி, உயர்ந்த, நோக்கி, சென்ருல், விளங்கும், சேர்ந்தான், கேள், பொருந்துவர்.

# 4. திருக்குறளைத் தெளிவு படுத்திய நெற்பயிர்

[வித்துவான், திரு. ரா. துரைசாமி]

புதுமையாகச் சிலருக்குச் செல்வம் முதலியன வந்து விட்டால் தலைகால் தெரியா; காதுகளும் செவிடாய் விடும்; கண்களும் தெரியா; நாக்கிலும் நரம்புகள் இரா; தெய்வமும் பேணுர்; தாங்களே இந்திரர்; தங்கள் வாக்கே வேதவாக்கு; தாங்கள் செய்வதே சரி என்று இறுமாந்திருப்பர்.

ஆனல், மேல் கூறியோர்க்குச் செல்வம் முதலியன போய்விட்டால் தகாதவர்களிடமும் சென்று கையை நீட்டுவர்; வயிற்றின் பொருட்டு யாவரிடமும் வணங்கி நிற்பர்; மிக இழிந்தவருடைய குற்றேவலையும் கூலி கொண்டு செய்வர்; ஒருசிறிது துன்பம் நேர்ந்தாலும் தாங்கிக்கொள்ளும் மனவுறுதியின்றித் தகாதவர்களிடம் தங்களையே விரைந்து விற்றுவிடுவர். இவை கீழ் மக்களின் இயற்கை. இவ்வியற்கை கீழ்மக்களுக் கிருப்பது நல்லதே. அப்பொழுதுதான் பெரியோர்களுடைய பெருமை நன்கு விளங்கும். இரவாற் பகலுக்கும், பதரால் நெல்லுக்கும் மேன்மை யுண்டாகின்றது.

உயர்குடியிற் பிறந்து அறியவேண்டியவற்றை யறிந்த பெரியோர்கள் தங்களுக்கு எவ்வளவுக்கெவ்வளவு செல்வம் முதலியன உயர்கின்றனவோ, அவ்வளவுக் கவ்வளவு பணிவாக நடப்பார்கள். அப்படி நடந் தாற்றுன், 'ஆ! இவர்கள் செல்வம் எவ்வளவு; அதிகாரம் எவ்வளவு; அவ்வாறிருந்தும் எவ்வளவு பணிவாக நடக் கின்றுர்கள்; என்ன மரியாதை; எவ்வளவு அன்பு! அற்பர்களுக்குச் செல்வம் வந்துவிட்டால் நள்ளிரவி லன்றே குடை பிடிக்கின்றுர்கள்; பெரியவர்கள் என்றும் பெரியவர்களே' என்று உலகம் புகழும். எனவே, ஒருவர் எவ்வளவு உயர்வை அடைய விரும்புகின்றுரோ அவ்வளவு தாழ்ந்து நடக்க வேண்டும் என்பது தோன்று கின்றது.

உயர்வு உயர்வைத் தராமல் தாழ்வு உயர்வைத் தருவ தாகிய உலகியற்கைக்கு மாறுபட்ட இச்செயலைக் கண்ட ஒரு புலவர்,

ஓதுந் திறத்தில் உயர்ந்தோரே தாழ்குவரைப்
போது முயர்வெய்தற் பொருட்டு

என்று வியப்புற்றுக் கூறினர்.

இத்தகைய உயர்ந்தோர்கள் எல்லா வகையாலும் வறுமையுற்ற காலத்திலும் தங்களைத் தாழ்த்துகின்ற அவ்வறுமையால் தாழ்வுருமல் ‘புலி பசித்தாலும் புல்லைத் தின்னுது’ என்பதுபோலத் தங்கள் பெருமையையே மேலும் மேலும் உயர்த்துவர். ஏனெனில், வறுமை முதலியன தங்களைத் தாழ்த்தும்பொழுது தாங்களும் தாழ்ந்தவர்களேயானல் உலகம் மிகவும் அவர்களை அவமதிக்கும். எரிகின்ற தீக்கொழுந்தை எவ்வளவு தலைகீழாகப் பிடித்தாலும் அது மேல்நோக்கியே நிற்பது போலப் பெரியோர்கள் எக்காலத்தும் உயர்வையே நோக்குவார்கள். எனவே மக்கள், செல்வம் முதலியன சுருங்கியுள்ள காலத்தில் பெருந்தன்மையாகவும், பெருகி யுள்ள காலத்தில் பணிவாகவும் நடப்பதே நலமாகும். மக்களுக்கு நீதியுணர்த்த வந்த வள்ளுவர் பெருமான்,

பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய
சுருக்கத்து வேண்டும் உயர்வு

எனச் சுருங்கச் சொல்லி விளங்க வைத்தார். இக்குறளைக் கற்ற ஒரு புலவர் இது நூற் பிரமாணமாயிற்று; ஆனல் இதை அனுபவத்தில் காணவேண்டும் என்று அவாக் கொண்டார்.

கொண்டவர், ஒருநாள் வயல்களின் வழியாகச் சென்றார். அங்கே இளைய நெற்பயிர்கள் தங்களிடம் மணியாகிய நெல் இல்லாமையால் தலைநிமிர்ந்து நிற் பதைக் கண்டார். ஆகா! ‘இந்நெற்பயிர்கள் இந்த வறிய நிலையில் தங்களை உலகம் அவமதிக்காவண்ணம் தலை நிமிர்ந்து பெருமிதத்துடன் நிற்பது எவ்வளவு வியப்

பைத் தருகின்றது! அவைகளன்றே 'சிறிய சுருக்கத்து வேண்டும் உயர்வு' என்ற அடியின் பொருளைத் தாமும் நன்குணர்ந்து பிறர்க்கும் உணர்த்துகின்றன என்று மகிழ்ந்தார். பின்னர்ச் சின்னாளில் அப் பயிர்கள் நெல் மணி முற்ற முற்ற மிகவும் வணங்கிக் கிடப்பதையும், அவைகள் வணங்க வணங்க உலகம் அவைகளை மிகவும் மதித்துப் புகழ்வதையும் கண்டார். 'பெருக்கத்துவேண்டும் பணிவு' என்ற அடியின் பொருளையும் நன்கு உணர்ந்தார்; துள்ளிக் குதித்தார்; அங்குமிங்கும் ஓடினார். உள்ளத்தின் மகிழ்ச்சி என்னும் ஆறு பெருக்கெடுத்தது. அவ்வாற்றை நாவாகிய அணையால் தடுத்தார். அறிவென்னும் வாய்க்காலிற் செலுத்தினார். அது தமிழென்னும் நிலத்திற் பாய்ந்தது. அந்நிலத்திலிருந்து பின்வரும் பாட்டென்னும் முளை முளைத்தது. அப் பாட்டு,

> உருத்திட்பம் உருக்காலைத் தலைநிறீஇ உற்றதற்பின்
> தருக்கற்று நனிவணங்கிப் பழுத்தகதிர்த் தடஞ்சாலி
> பெருக்கத்து வேண்டுமால் பெரும்பணிவு மிகச்சிறிய
> சுருக்கத்து வேண்டுமுயர் வெனுமொழியின் சுவைதேற்றும்

என்பது. தம் வடிவம் வலிமையுறாத காலத்தில் தலையை நிமிர்த்தி நின்று, வலிமையுற்ற காலத்தில் சிறிதும் செருக்கில்லாமல் மிகவும் வணங்கிப் பழுத்த கதிர்களையுடைய பெரிய நெற்பயிர்கள், எல்லா வகையினாலும் ஒருவர்க்குப் பெருக்கமுள்ள காலத்தில் பெரும் பணிவு வேண்டும்; மிகவும் அற்பமான வறுமை முதலியவற்றால் சுருக்கமுள்ள காலத்தில் உயர்வு வேண்டும் என்கிற குறளின் சுவையை நன்கு தெளியச் செய்கின்றன என்பது காஞ்சிப் புராணத்திலுள்ள இச்செய்யுளின் பொருள். இதன் ஆசிரியர் சிவஞான முனிவர்.

### அருஞ்சொற்பொருள்

இறுமாந்து - செருக்குற்று, குற்றேவல் - சிறுவேலைகள், நலம் - நன்மை தருவது, வறிய - ஒன்றுமில்லாத, உருத்திட்பம் - வடிவத்தின் வலிமை, நிறீஇ - நிமிர்ந்து, தருக்கு - செருக்கு, தடஞ்சாலி - பெரிய நெற்பயிற்கள், தேறும் - தெளிவு பெறச் செய்யும்.

### வினாக்கள்

1. புதுமையாகச் செல்வம் பெற்றவர் எவ்வாறு இருப்பர்?
2. கீழ் மக்களின் இயற்கை யாது?
3. உயர்வை அடைய விரும்புவோர் ஏன் தாழ்வுடன் நடந்து கொள்ள வேண்டும்?
4. 'பெரியோர்கள் எக்காலத்தும் உயர்வையே நோக்கு வார்கள்'—ஏன்?
5. 'பெருக்கத்து வேண்டும்'—இக்குறளின் பொருள் யாது?
6. காஞ்சிப் புராண ஆசிரியர் யார்?
7. சிவஞான முனிவர் நெல்வயலிற் கண்ட காட்சி யாது?
8. குறளின் பொருளை அனுபவத்தில் கண்ட புலவர் மகிழ்ச்சியால் பாடிய செய்யுளின் கருத்தை விளக்குக.

### இலக்கணப் பயிற்சி

'அவைகள் வணங்க வணங்க உலகம் அவைகளை மிகவும் மதித்துப் புகழ்கிறது'—இவ்வாக்கியத்தில் உலகம் என்பது உலக மக்களுக்கு ஆகி வந்தமையால் இடவாகு பெயர் ஆயிற்று.

ஆகுபெயர் என்றால் என்ன? இடவாகு பெயர், சினையாகு பெயர், தொழிலாகுபெயர் இவற்றை விளக்கி, வகைக்கு ஒவ்வோர் உதாரணம் தருக.

# 5. ஓவியக் கலை

[வித்துவான், திரு. கோ. சானகிராமன்]

" ஆய கலைகள் அறுபத்து நான்கினையும்
ஏய உணர்விக்கும் என்னம்மை "

என்று கம்பர் கலைமகளைக் கலைகளுக்குத் தாயகமாகவும், அவற்றை மக்கள் அறியும்படி செய்விக்கும் அருட் தெய்வமாகவும் கூறி வழிபடுகின்றார். இதனால் நம் நாட்டில் மிகப் பழங்காலந்தொட்டே கலைகள் பல நிலவி வந்தமை விளங்கும். இக்கலைகள் அறுபத்துநான்கு என வரையறை செய்யப்பட்டிருப்பினும் இவற்றையன்றி வேறு சில துணைக் கலைகளும் இந்நாட்டில் மிளிர்ந்தன என்பது வெளிப்படை.

பொதுவாகக் கலைகளால் மக்களின் வாழ்க்கை வசதிகள் நிறைவு பெறுகின்றன. எடுத்துக்காட்டாகக் கட்டடக் கலையை எடுத்துக்கொள்ளுங்கள். அக்கலை மக்கள் நல்ல முறையில் வீடுகளைக் கட்டிக்கொண்டு இனிதாக வாழ்வதற்கு உதவுகிறது. மருத்துவக் கலை மாந்தர் நோயின்றி வாழ்வதற்கும், நோய் வந்தபோது அதனைத் தக்க மருந்தால் போக்கிக் கொள்வதற்கும் பயன்படுகிறது. இவ்வாறே கலைகளுள் ஒவ்வொன்றும் மாந்தர் நமது வாழ்க்கையை நல்ல முறையில் இன்பமாக நடாத்துவதற்கு உறுதுணையாக உள்ளன.

இக்கலைகளில் ஓவியம், சிற்பம், இசை, நாட்டியம் முதலியன மாந்தரின் இன்பப் பொழுதுபோக்கிற்குப் பயன்படுகின்றன. ஆகவே, இவற்றை இன்பக் கலைகள் என்று அறிஞர் கூறுவர். அன்றியும், இக்கலைகள் நுண்ணிய அறிவுடையோரால் கையாளப்பட்டும், நுகரப் பட்டும் வருவதால் இவற்றை **நுண்கலைகள்** என்றும் வழங்குவர்.

ஆதியில் மக்கள் இயற்கையின் அழகைக் கண்டு அதில் தமது மனத்தைப் பறிகொடுத்தனர். அலைகள்

மடங்கி மடங்கி வரும் நீலநிறக் கடலின் காட்சியும், சரிவுகளில் வானத்தில் ஏறுவதற்குப் பசுமையான படிகள் அமைத்தாற்போலப் படிப்படியாகத் தோன்று கின்ற பசுமரச் செறிவுகளை உடைய மலையின் மாட்சியும், மாலை நேரத்தின் செவ்வானக் காட்சியும், இவை போன்ற பிற இயற்கைக் காட்சிகளும் எந்த மனிதருடைய உள்ளத்தைத்தான் கொள்ளைகொள்ள மாட்டா. இக் காட்சிகளைக் கண்ட பழைய மக்கள் இவற்றை இடை விடாது கண்டு இன்புற வேண்டுமென்று கருதியிருப் பார்கள் அல்லவா ? அவர்களுடைய இத்தகைய கருத்தே ஓவியக்கலை உருப்பெறுவதற்குக் காரணமாய் இருந்தது என்பதில் ஐயமில்லை.

இறைவன் படைப்பில் விளங்கும் காடு, வானம் மலை, அருவி, ஆறு இவற்றின் அழகுத் தோற்றங்கள் கலையாகமாட்டா. இவற்றையே கைத்திறம் வாய்ந்த ஓவியர் தமது முயற்சியால் சித்திரங்களாக வரைந்து காட்டுவராயின் அவை கலை எனப்படும். இதுவே இயற் கைக்கும் கலைக்கும் உள்ள வேறுபாடு.

முதன் முதல் மாந்தர் எளிய பொருள்களைத்தான் சித்திரமாக வரைந்திருப்பர். தம்மைச் சுற்றிக் காணப்படு கின்ற மரங்கள், பறவைகள், விலங்குகள் ஆகியவை களே அவர்களின் முதல் ஓவியங்களாக உருப்பெற் றிருக்கவேண்டும். காலப்போக்கில் அவர்கள் கைபுனை திறம் பெற்று மக்கள் உருவத்தையும் பிற கற்பனை வடிவங்களையும் தீட்ட முற்பட்டிருக்கலாம். தொடக்கத் தில் அவர்கள் தமக்குக் கிடைத்த கருவிகளைக் கொண்டு சுவர்களிலேயே ஓவியம் வரைந்தனர். இதனாற்றான் "சுவரை வைத்துத்தானே சித்திரம் வரையவேண்டும்" என்னும் பழமொழி உண்டாயிற்று. பின்பு சித்திரங்கள் திரைச்சீலையிலும், காகிதங்களிலும் வரையப்பட்டன.

மனிதன் பேசக் கற்றுக்கொண்ட பிறகு எழுத்துக்கள் தோன்றின. அவ்வெழுத்துக்கள் முதலில் சித்திர உருவி லேயே அமைந்திருந்தன வென்று ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர். 'ஒரு குளக்கரையில் ஒரு யானை

நிற்கிறது' என்பதை ஆதி மனிதன் பிறருக்கு எழுதிக் காட்ட விரும்பினுன் என்று வைத்துக் கொள்ளுங்கள். அவன் அதனைப் பிறருக்கு எவ்வாறு எழுதிக் காட்டியிருப் பான்? ஒரு குளத்தையும், அதன் கரையில் ஒரு யானையை யும் ஓவியமாக வரைந்தே காட்டியிருப்பான். இங்ஙனம் தான் கண்டவற்றையும், தெரிவிக்க விரும்பிய கருத்துக் களையும் ஓவியங்களாக வரைந்து வரைந்து காட்டிய பழங் கால மனிதன் காலப்போக்கில் அறிவு முதிர்ச்சியால் கருத்துக்களை அறிவிக்க எழுத்துக்களைப் படைத்துக் கொண்டான் என்பது ஒருதலை. இன்றும் சீனர்களின் எழுத்துக்கள் சித்திர எழுத்துக்களாக அமைந்திருப்பது நாம் இங்குக் கூறிய உண்மைக்குச் சிறந்த எடுத்துக் காட்டு என்பதிற் தடையில்லை அல்லவா?

நமது தமிழ் நாட்டில் இற்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே ஓவியக்கலை உயர்நிலையில் இருந்தது. வனப்புள்ள ஓவியங்களை வண்ணங்கள் கொடுத்துத் தீட்டும் சிறந்த ஓவியர்களும் வாழ்ந்திருந் தனர். அத்தகைய ஓவியர்கள் **கண்ணுள் வினைஞர், வித்தகர்** என்ற பெயர்களால் அழைக்கப் பெற்றனர். ஓவியக் கலையினை விளக்கும் **ஓவியச் செந்நூல்** என்ற ஒரு நூலும் இருந்ததாக மணிமேகலையால் அறியப்படு கிறது.

பண்டைத் தமிழர்கள் ஓவியங்களின் அருமை பெருமைகளையும் அழகையும் அறிந்து இன்புறும் மன உணர்ச்சி பெற்றிருந்தனர். அவர்களுடைய இத்தகைய அழகுணர்ச்சியால் மாட மாளிகைகளின் சுவர்கள் எல்லாம் ஓவியங்களால் அழகு செய்யப்பட்டுப் பொலிவன ஆயின. கடைச்சங்க காலத்துச் சோழர்களின் தலை நகரங்களுள் காவிரிப்பூம்பட்டினம் சிறந்து விளங்கியது. அந்நகரத்தில் நீண்ட நிலையினை உடைய மாடங்கள் பல திகழ்ந்தன. அவற்றின் முன்புறத்தில் பலவகையான சித்திரங்கள் வரையப் பெற்றிருந்தன. தேவர்கள் முதலாக எல்லா வகையான உயிர்களுக்கும் உவமை யாகப் பல சித்திரங்கள் அவ்விடங்களில் காணப்பட்டன.

அவற்றைக் கண்டோர், அவற்றின் அழகிலே ஈடுபட்டுத் தம் செயல்களை மறந்து நின்றனராம். இவ்வாறு மணி மேகலை என்னும் நூல் கூறுகிறது.

அன்றியும், அக்காலத் தமிழர் அழகிய சித்திரங்கள் வரையப் பெற்ற ஆடைகளை உடுத்து வந்தனர் என்பது அவர்கள் ஆடைக்குப் படம், படாம் எனப் பெயர் தந் திருப்பதினின்றும் அறியப்படுகிறது.

நமது இந்திய நாட்டில் ஓவியக்கலை இந்நாட்டு மக்க ளின் மதத்தோடு தொடர்புடையதாகச் செய்யப்பட்டது. பௌத்தர்கள் புத்தர் பெருமானின் திருவுருவங்களைச் சித்திரங்களாக வரைந்து வழிபட்டனர். குகைகளில் தவம் செய்து வந்த பௌத்தத் துறவிகள் தம் மதத் தொடர்புள்ள பல சித்திரங்களைக் குகைச் சுவர்களில் வரைந்து வந்தனர். அவர்களால் அவ்வாறு வரைந்து வைக்கப் பெற்ற குகைச் சித்திரங்களுள் சிறந்தவை அசந்தா, எல்லோராச் சித்திரங்களே யாகும். இச்சித்தி ரங்கள் பல நூற்றுண்டுகளுக்கு முன்னமேயே வரையப் பெற்றனவாயினும், அவை இன்றுதான் வரையப் பட்டனவோ என்று ஐயுறும் வண்ணம் அழகு குறை யாமல் திகழ்கின்றன. நம் நாட்டிற்கு வரும் பிறநாட்டார் இக்குகைச் சித்திரங்களைக் கண்டு களிக்கத் தவறுவ தில்லை.

நமது தென்னுட்டிலும் சைவ, வைணவ மதங்க ளோடு ஓவியக்கலை தொடர்பு கொண்டு வளர்ந்து வரலா யிற்று. இந்நாட்டில் சித்திரம் வரையப் பெற்றிராத கோவில்களைக் காண்பதரிது. முதல் இராசராச சோழன் கட்டிய தஞ்சைப் பெருவுடையார் கோவில் கலைக் கோவி லாக விளங்குவதை அறியாதார் யார்? இக்கோவிலின் சுவர்களில் சுந்தரரது வாழ்க்கைச் சரிதத்தைக் குறிக்கும் ஓவியங்களும், சுந்தரரும் சேரமானும் தேவகணங்கள் பூமாரி சொரியக் கயிலாயம் செல்வதைக் குறிக்கும் ஓவியங்களும், சிவபெருமான் திரிபுரமெரித்த புராண வரலாற்றை விளக்கும் ஓவியங்களும், இன்னமும் இவை போன்ற வேறுபல ஓவியங்களும் காண்போர் கண்ணை

யும் கருத்தையும் கவர்வனவாக உள்ளன. அவ்வோவியங்கள் தீட்டப் பெற்றுப் பல நூற்றுண்டுகள் கழிந்திருப்பினும், அவை இன்று தீட்டப் பெற்றனபோல் வண்ணங் குலேயாமல் காட்சி தருவது கண்டு இன்புறத் தக்கதாகும்.

திருச்சிராப்பள்ளிக்குத் தெற்கில் இருபது கல் தொலேவில் **சிற்றன்னவாசல்** என்னும் சிற்றூரொன்று உள்ளது. அங்குள்ள குகைக் கோவிலில் பல ஓவியங்கள் தீட்டப் பெற்றுச் சிறந்த காட்சி அளிக்கின்றன. அந்த ஓவியங்கள் அசந்தா, எல்லோரா ஓவியங்களேவிட உயர்ந்தன என்று ஆராய்ச்சியாளர் கூறுவர்.

நம் நாட்டினரின் ஓவியக்கலேத் தேர்ச்சிக்குச் சான்ருகப் பல இடங்களில் பழங்கால ஓவியங்கள் இடம் பெற்றுத் திகழ்வதைப்போல் எகிப்து, கிரீசு, பாபிலோனியா, சீன முதலிய நாடுகளிலும் பழங்காலச் சித்திரங்கள் அந்நாட்டாரின் பழமைக்கும் பெருமைக்கும் சான்ருக நின்று காட்சி யின்பம் பயந்து வருகின்றன.

பதினும் நூற்ருண்டில், இத்தாலியில், லியனர் **டோடா வின்சி** என்ற கலேஞர் சித்திரத்திலும் ஏனய கலேகளிலும் புகழ் பெற்றிருந்தார். அவர் அக்காலத்தில் வரைந்த சித்திரங்கள் பல இன்று உலக மக்களால் புகழப் படுகின்றன. அவரைப் போல நமது தென்னுட்டிலும் சமீப காலத்தில் சிறந்த ஓவிய நிபுணராக விளங்கியவர் மலேயாள நாட்டினராகிய **இராசா இரவி வர்மா** ஆவர். இவர் கண் கவரும் ஓவியங்களேத் தீட்டி மக்களின் மதிப்பைப் பெற்றவராகையால், இவரை இந்நாட்டு மக்கள் "**ஓவியர் மணி**" என்று அழைத்து வந்தனர்.

சித்திரம் எழுதுவதும், காண்பதும் ஒரு சிறந்த இன்பப் பொழுதுபோக்காகும். குழந்தைகள்கூட அழகிய ஓவியங்களேக் கண்டு மகிழ்வதை நாம் காண்கிருேம். ஓவியப் புலவரும், காவியப் புலவரும் ஒரு வகையில் சமமானவர்களே யாவர். ஓவியப் புலவர் தாம் கண்ட காட்சியைச் சித்திரமாகத் தீட்டுகின்றனர். காவியப் புலவர் தாம் கண்ட காட்சியைச் சொற்சித்திரமாக

அமைக்கின்றுர். எனவே, இலக்கியத்திற்கும், சித்திரத் திற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு என்பதை நீங்கள் உணரலாம்.

சித்திரக் கலையின் உயர்வு, ஒரு நாட்டின் சிறந்த நாகரிக நிலைக்கு ஓரறிகுறியாகும். ஆகவே, நம் நாடு மிகப் பழங்காலத்திலேயே உயர்ந்த நாகரிகத்தைப் பெற் றிருந்தது என்பது விளங்குகிறதன்றே! நம் நாட்டிற்கு ஏற்றத்தை அளித்த சித்திரக் கலையைப் போற்றி வளர்ப் பது தற்காலச் சிறுவர் கடமை என்பதைச் சொல்லவும் வேண்டுமோ ?

### அருஞ்சொற்பொருள்

எடுத்துக் காட்டு - உதாரணம், நுண்ணிய - நுட்பமான, நுகரப் பட்டும் - அனுபவிக்கப்பட்டும், மாட்சி - பெருமை, கைத்திறம் - கையால் இயற்றும் திறமை, ஒருதலை - உறுதி, வனப்பு - அழகு, வண்ணம் - நிறம், பொலிவன - விளங்குவன, ஐயுறும் வண்ணம் - சந்தேகப்படும்படி.

### வினுக்கள்

1. நம் நாட்டில் பண்டு தொட்டுக் கலைகள் பல நிலவி வந்தமை எதனுல் அறியப்படுகிறது ?

2. கலைகள் மாந்தர்க்குச் செய்யும் உதவி யாது ?

3. இன்பக் கலைகள் எவை? அவற்றிற்கு அப்பெயர் வரக் காரணம் யாது ?

4. மாந்தரின் உள்ளங் கவரும் இயற்கைக் காட்சிகள் யாவை ?

5. இயற்கைக்கும் கலைக்கும் உள்ள வேறுபாடு யாது ?

6. சுவரை வைத்துத்தானே சித்திரம் வரையவேண்டும்—இப் பழமொழியால் அறியப்படுவது யாது ?

7. மனிதன் பேசக் கற்றுக் கொண்ட பிறகு எழுத்துக்கள் சித்திர வடிவில்தான் அமைந்திருக்க வேண்டும்.—இதனை விளக்குக.

8. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் நம் தமிழ் நாட்டில் சித்திரக்கலை உயர்நிலையில் இருந்தது—இதனைச் சான்றுகளுடன் விளக்குக.

9. சித்திரக்கலை மதத்தோடு தொடர்புற்றமையால் அடைந்த உயர்வைப் பதினைந்து வரிகளில் விளக்கி வரைக.

10. அசந்தா, எல்லோராக் குகைச் சித்திரங்களைப் பற்றித் தெரிந்ததை எழுதுக.

11. தஞ்சைப் பெருவுடையார் கோவிலில் காணப்படும் ஓவியங்களைப் பற்றி நீவிர் அறிவது யாது?

12. லியனுர் டோடா வின்சி, ஓவியர் மணி—குறிப்பு வரைக.

13. ஓவியப் புலவருக்கும், காவியப் புலவருக்கும் உள்ள வேறுபாடு யாது?

**இலக்கணப் பயிற்சி**

1. **பகுபத உறுப்பிலக்கணம் கூறுக:** மிளிர்ந்தன, தோன்றுகின்ற, கொண்டான், கற்று, வென்று, வரைந்து, பெற்றனர்.

2. வரைந்து வரைந்து, பார்த்துப் பார்த்து—இவைகள் அடுக்குத் தொடர்கள்.

3. அடுக்குத் தொடர் என்பது யாது? விளக்கம் தந்து உதாரணமும் காட்டுக.



## 6. கனலில் மூழ்கிய கனங்குழை

[வித்துவான், பி. என். சுப்பராம சர்மா]

சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் பாண்டிய நாட்டைப் பூதப்பாண்டியன் என்னும் மன்னன் ஆண்டு வந்தான். அவன் நல்லோர் விரும்பும் இனிய குணங்களைப் பெற்றிருந்ததோடு வீரத்திலும் சிறந்து விளங்கினன். போர் என்றால் தோள் பூரிப்பான்; வலிமையில் நிகரற்றவன். அவன் தான் ஆட்சிக்கு வந்ததும், தன் முன்னோர் காலத்திலிருந்து பகைவர் வசமாயிருந்த தன்னாட்டைச் சேர்ந்த ஒல்லையூரைப் பகைவரை வென்று மீட்டான். அதிலிருந்து அவனது அவ்வீரச் செயல் தோன்ற மக்கள் அவனை **ஒல்லையூர் தந்த பூதப் பாண்டியன்** என அழைப்பாராயினர்.

இப்பாண்டியன் வீரத்தில் எவ்வாறு சிறந்து விளங்கினனோ, அவ்வாறே புலமையிலும் சிறந்து விளங்கினன். கோல் பிடித்த கையால் அவன் நூல் பிடித்தான். நேர்மையை ஆய்ந்த மனத்தால் அவன் நூல்களின் தெள்ளிய நயத்தை ஆய்ந்தான். செந்தமிழ் நூல்களில் அவன் மனம் செல்லாத நூலில்லை என்று ஆன்றோர்கள் சொல்லுமாறு தமிழ் நூல்கள் பலவற்றையும், அவன் சிக்கறக் கற்றான். தேனுயும் வண்டுகள் போல நூலாயும் மாண்புடையோரைத் தன் இனமாகக் கொண்டான். தமிழ்ப் புலவர்கள் என்றால் அவனுக்கு உயிர்! பொன்னையும் பொருளையும் பொருளாக மதியாது அவர்கட்கு அள்ளி வழங்கி அவர்களைப் போற்றினன். அவர்களைக் கவி பாடுவித்தும், தான் பாடியும் பொழுதுபோக்குவான். அவனை அக்காலத்தவர் ஒரு புறம் நாடாளும் வேந்தனாகவும், மற்றொரு புறம் கவிதையாளும் கல்விச் செல்வனாகவும் கருதினர் என்றால், அது அவனுக்குப் பெரிதும் பொருந்தும்.

இவ்வாறு இலங்கிய அவனுக்கு உற்றுழியுதவும் தோழர்கள் பலர் இருந்தனர். அவர்கள் மாவன், ஆந்தை,

அந்துவஞ் சாத்தன், ஆதனழிசி, இயக்கன் முதலியோ ராவர். அவர்கள் அறிவிலும் வீரத்திலும் சிறந்திருந் தார்கள் என்பதும் அவர்களைத் தன் கண்போன்ற துணை வர்களாக அவன் மதித்து ஒழுகினன் என்பதும் அவன் பாடிய புறப்பாட்டிலிருந்து விளங்குகின்றன. அவர்களைத் தவிரப் பண்பிற் சிறந்த வேறொரு நண்பனும் அவனுக்குத் துணைவனாக இருந்தமை அவன் பாடிய அகப்பாட்டால் அறியப்படுகிறது. "அந் நண்பன் பெயர் திதியன்; பொதிய மலையைச் சார்ந்த நாட்டிற்கு அவன் தலைவன்; பகைவர் பலரைப் பன்முறை விற்போரில் வென்று புகழ் பெற்றவன்; இனிய வாச்சியக் கருவியை இன்பமாக வாசிப்பதில் அவன் வல்லவன்." இவ்வாறு அத் திதியன் இயல்புகளை அவ்வகப் பாட்டு இயம்புகிறது. அறிவிற் சிறந்த அப்பாண்டியன் தன் நண்பர்களை இங்ஙனம் பாராட்டியதிலிருந்து அவர்களால் அவன் பல உதவி களும் பெற்று இன்புற்றிருந்தமையும், அவன் பாராட்டு தலுக்கு உரியவர்களான அவர்களும் ஆன்றோர் விரும்பும் சீரிய குணஞ் செயல்களைப் பெற்றிருந்தமையும் பெறப் படுகின்றன அன்றோ! இது நிற்க,

அப்பாண்டியனுக்கு வாழ்க்கைத் துணையாக அமைந்த தேவியாரே இங்குப் பெருமையாகப் பேசுதற் குரியவர். பெருங்குணங்கட் கெல்லாம் உறைவிடமாக விளங்கிய அவர் கற்பில் சிறந்து விளங்கினர். கோவ லனைக் கொல்வித்த நெடுஞ்செழியன் மனைவியாகிய கோப்பெருந்தேவியையும் கண்ணகியையும் ஒத்த கற் புடையார் அவர். பொற்பில் இலக்குமியை நிகர்த்தவர். மனையறத்திற்குரிய மாட்சி யெல்லாம் வாய்க்கப் பெற்ற அவர் கொண்டவனைத் தெய்வமாகக் கொண்டு ஒழுகியதில் வியப்பென்ன? இத்தகைய பெண்ணரசியைத் தன் தேவியாராகப் பெற்ற பூதப் பாண்டியனுக்கு வாழ்க்கையில் குறைவேது? அவன் தன் தேவியாரின் இனிய குணங்களைக் கண்டு இன்புற்றான். அக்குணங்களுக்கு மேலாக அவர் புலமை விளங்கியது. ஆன்றோரும் அறிந்து வியந்து பாராட்டத்தக்க அவர் புலமையில்

புலவனாகிய அவன் ஈடுபட்டுப் பேரின்பம் துய்த்தான். வாழ்க்கைத் துணைவர் இருவரும் ஒத்த குண நலங் கல்விகளைப் பெற்றிருந்தமையால் அன்னார் வாழ்க்கை இன்ப வாழ்க்கையாகவே நடந்து வந்தது.

உலகில் புதிதாகத் தோன்றிய பொருளுக்குள்ள கவர்ச்சி அப்பொருள் நாட் சென்று பழையதான பிறகு இருப்பதில்லை. ஒரு மலருக்கு அது மலர்ந்த தருணத்தில் இருந்த கவர்ச்சி அது பழம் பூவான பிறகு காணப்படுகிறதா? இல்லை அல்லவா? இப் புது மலரைப் போலவே இல்வாழ்க்கையும் தொடக்கத்தில் கவர்ச்சியாயிருந்து பின் கவர்ச்சியற்றதாக ஆகும் என்று ஆன்றோர் கூறுவர். இவர் கூற்று நம் போன்ற சாதாரண மக்களின் இல் வாழ்க்கையைப் பற்றிய தாகும். குறைவற்ற செல்வமும் கூரிய பேரறிவும் வாய்ந்த பேரன்புடையோர் கணவனும் மனைவியுமாக அமைந்து எத்துணை நாட்கள் வாழ்க்கையை நடத்தினாலும் அவர்கள் வாழ்க்கையில் பழைமைப் புளிப்புத் தட்டுவதேது? வாட்டந்தானேது?

இவ்வாறு அவர்கள் இணைபிரியாது ஒற்றுமையுடனும் அன்புடனும் வாழ்ந்து வருவது விதிக்குப் பிடிக்கவில்லை போலும்! அவர்களைத் தனித் தனியே பிரித்து அவர்களது அன்பு நிலையை, அது உலகினருக்குக் காட்ட விரும்பியது போலும்! எதிர் பாராத நிலையில் பாண்டிய நாட்டில் படையெடுப்பை உண்டாக்கி விட்டது அது. மக்கள், பாண்டியர் மேல் பகைகொண்ட சேர சோழர்கள் அப்பாண்டியர் நாட்டைத் தாக்கப் போகிறார்களாமென்று எங்கும் பேசத் தொடங்கி விட்டனர். பாண்டியனும் இச்செய்தியை ஒற்றர் மூலம் அறிந்தான். அரியேறு அன்ன அவனுக்கு அடங்காச் சினம் பொங்கியது. அச்சினத்தால் அவன் தன்னை மறந்து பின் வருமாறு கூறினான்:

"சிங்கம் போலச் சினமுடைய வேந்தர்கள் ஒன்று கூடி என்னோடு போர் செய்வோம் என்கின்றனர்; என்னோடு அவர்கள் நடத்த இருக்கும் போர் அவர்கள் கருதுமளவுக்கு எளிதான தன்று. நான் அவர்களைப் போரில்

முறியடித்துப் புறமுதுகு காணேனாயின் என் அன்பிற் குரிய இல்லாளைப் பிரிந்தவன் ஆகுக; அறம் நிலைபெறக் காரணமான அன்புடைய அறங் கூறவையில் அறத் திறம் உணராத ஒருவனை அமர்த்தி முறை கலங்கச் செய்த கொடுங்கோலனாகுக; என் கண்போன்ற நண்பர் களோடு கூடி மகிழ்வதை நான் இழந்தவன் ஆகுக; பல் லுயிரையும் காத்துப் பெருமை பெற்ற அரசர் குடியிற் சிறந்ததான பாண்டியர் குடியின் நீங்கி வேறு குடியில் பிறப்பேன் ஆகுக'' என்பது.

இது அவனது வீர உணர்ச்சியை வெளிப்படுத்தும் சூளுரையாகும். இதனை புறப்பொருள் இலக்கணம் வஞ்சினக் காஞ்சி என்னும் துறையாகக் கூறும். இவ் வஞ்சினத்தில் அவன், தான் தன் மனையாள் பால் கொண்டிருந்த நீங்கா அன்பையும், செங்கோலாட்சி யில் செலுத்திய கருத்தையும், நட்பினர் கூட்டுறவில் அடைந்த இன்பத்தையும் எவ்வளவு தெளிவாக விளக்கி யுள்ளான். இதிலிருந்து நாம் அவன் இயல்புகளையும் இலட்சியத்தையும் ஒருவாறு உணர்ந்து கொள்ளலாம் அல்லவா?

முற்காலத்தில் பகைவர் படையெடுப்பைக் கேட்ட தும் படையெடுப்பவர் இப் பூதப் பாண்டியனைப் போலக் கடுஞ் சபதம் செய்வதுண்டு. இச்சபதம் படையெடுப் பவர் காதில் விழுந்தால், அவர் ஒருவேளை படையெடுப் பதைத் தவிர்த்து விடலாம். ஆனால் பூதப் பாண்டியன் செய்த வஞ்சினம் அவன் பகைவர்க்கு எட்டியும், அவர்கள் அதைக் கருத்துட் கொள்ளாமல் அவனுடன் போருக்கு வந்தனர். பாண்டியனும் தான் திரட்டி வைத் திருந்த பெரும் படையுடன் சென்று அவர்களைத் தாக் கினான். போர் கடுமையாக நடந்தது. பூதப் பாண்டி யனின் அஞ்சா நெஞ்சையும் ஆண்மையும் கண்டு பகை வர் பதைபதைத்தனர். கண்ணிலியாகிய காலன் அதே சமயத்தில் அவன் உயிர் குடித்து இன்பமுறக் கருதி னான். காலன் கருத்துக் கிலக்கானவர் தப்புவரோ? பகைவர் வாளுக்குப் பாண்டியன் இரையானான் என்ப

தைச் சாக்காகக் கொண்டு அக்காலன் அவர் உயிரைக் குடித்து விட்டான். அந்தோ! புலவரைப் புரக்கும் புரவலன் மறைந்தான். ஆன்றோர் புகழும் அறிவுச் சுடர் விண்ணேறியது. பாண்டிய நாடு முழுவதும் பெருங் கலக்கமுற்றது. மக்கள் ஆற்றொணுத் துன்பத் தில் மூழ்கினர்.

மாட மொடுங்கிய மதுரையில் மன்னன் மாளிகை அடைந்த அலங்கோலத்தைச் சொல்லி முடியாது. அரச குடும்பத்தினரின் அவலத்துக்கு எல்லையேது? அவர் களிலும் பூதப் பாண்டியன் தேவியார் பருவரலை யாரே அறைய வல்லார்? தம் கணவர் இறந்ததைக் கேள்விப் பட்டதும் அவர் நெருப்பில் விழுந்த புழுப்போல் துடித் தார். தரையில் கிடந்து புரண்டு அழுதார். தம் கணவர் குணங்களைப் பன்னிப் பன்னிப் புலம்பினுர்; விழுந்தார்; எழுந்தார்; விம்மினுர்; வெய்துயிர்த்தார். ஆயினும் இறந்தவர் என்றுவது வருதல் உண்டா? கற்றறிந்த மன முடைய அவர் தம் மனத்தைத் தாமே தேற்றிக் கொண் டார். மக்கள், மனையாள் இவர்கள் இறப்பதால் உண் டாகும் துன்பத்தைக் காட்டிலும் கணவரை இழந்த பெண்டிரின் துன்பநிலை மிகக் கொடிது எனத் தேர்ந் தார்; "அந்தோ! கணவனை இழந்தோர்க்கு முறை காட்டிப் பிறர் தேற்றுதற்கும் வழியில்லையே" என்று எண்ணிப் பெருமூச்செறிந்தார். இவ்வாறு பலப்பல வெண்ணி ஏங்கி நிற்கும் அவருக்கு உலகம் சுத்த சூனிய மாகத் தோன்றியது. வாழ்க்கையில் வெறுப்புத் தட்டி யது. ஊசல் போல் ஆடிய அவர் உள்ளம் உறுதி பூண்டது. கணவருடன் தீப்பாய்வதே கடன். அது கற் பின் சின்னமல்லவோ என்று அவர் மனச் சாட்சி அவ ரைச் சமாதானப் படுத்தியது.

இறந்தவரைக் குறித்து எண்ணிக் காலம் எல்லாம் ஏங்குவதால் என்ன பயன் என்று பூதப் பாண்டியன் இறந்ததால் வருந்திய ஒவ்வொருவரும் முடிவுக்கு வந்து விட்டனர். பின் அவர்கள் ஒன்று கூடிப் பாண்டியன் உடலை அரசர்க்குரிய மரியாதையோடு சுடுகாட்டிற்கு

எடுத்துச் சென்று, அங்கு அவன் உடலைச் சிதையில் ஏற்றித் தீ வைத்தனர். அவ்வளவுதான். தம் கணவர் உடல் தீயினால் பற்றப்படுதலைச் சகியாத அவர் பொம் மெனத் துள்ளித் தீயில் பாய முன் வந்தார். அப்போது அவரைச் சூழ்ந்து நின்ற மதுரைப் பேராலவாயார் முதலிய புலவர்கள் அவ்வம்மையாரைத் தடைசெய்தனர். இதனால் அவருக்குச் சொல்லொணாத் துயரம் கடல் போலப் பொங்கத் தலைப்பட்டது. அறிவிற் சிறந்த அவர்கள், 'பசைந்தாரைத் தீர்தலின் தீப்புகுதல் நன்று' என்பதை உணர்ந்தவர்களா யிருந்தும், திடீரெனத் தம் முயற்சிக்கு இடையூறு செய்கின்றனரே என்று மனங் கொதித்தார். அவரது துயரும், மனக் கொதிப்பும் அவர் உள்ளத்தில் தேங்கி இருந்த கருத்தைச் செய்யுள் வடிவாக வெளியில் கொணர்ந்து தள்ளின. நாம் அச் செய்யுளின் கருத்தில் கருத்தைச் செலுத்தலா மல்லவா?

"பலராகச் சூழ்ந்து நிற்கின்ற சான்றோர்களே, நீங்கள் கற்புடைப் பெண்களின் நிலையை அறியாதவர் களா என்ன? அத்தகைய நீங்கள் என்னைக் கணவ னுடன் செல்க வென்று சொல்வதே தகும். அவ்வா றின்றி, நீங்கள் என்னை விலக்குவதால் பொல்லாச் சூழ்ச்சியாளரே யாவீர். இதற்குத் தடையில்லை. நெய் விழுது சேராமல் வெந்த வேளைக் கீரையை உண்டும், பாயின்றிப் பருக்கைக் கற்களில் இரவில் படுத்துத் துயின்றும் பொழுதினைக் கழிக்கும் கைம்பெண்களைச் சேர்ந்தவள் நான் அல்லள். நான் கைம்மை நோன்பைக் கனவிலும் கருதேன். கெட்டது அது! என் கணவரோ மாய்ந்தார். எனக்கு இதுபோது தாமரைப் பொய்கை யும் சுடுதீயும் ஒன்றே" என்பது அவர் பாடிய செய்யு ளின் கருத்து.

இதில் "தாமரைப் பொய்கையும் சுடுதீயும் ஒன்றே" என்னும் தொடரின் பொருள் ஆழ்ந்து சிந்தித்தற்குரியது. தம் கணவர் இறந்தமையால் தமக்கு உலக வாழ்க்கை சுடு தீப்போலத் துன்பம் தருவதாய் உள்ளது என்பதும், அந்த ஈமத்தீ தாமரைப் பொய்கைபோல் இன்பம் தரு

வதாய் உள்ளது என்பதும் அவ்வம்மையார் கருதியன வாகும். பூதப் பாண்டியன் தேவியார் தம் கணவர் பால் கொண்ட அன்பையும், அவர் அரிய கற்பையும், தெளிந்த புலமையையும் விளக்க அவர் பாடிய இக்கருத் துடைச் செய்யுளொன்றே போதுமானதல்லவா? ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறுதானே பதம்!

பிறகு அவரைத் தீப்பாய்தலினின்றும் விலக்கிய புலவர்கள் தம் தவற்றினை உணர்ந்தார்கள். ஆனால் அவர்கள் தம் தவற்றுக்காகக் கவலை கொள்ளவில்லை. அறிந்து செய்த தவறுதானே இது! பாண்டியன் தேவி யார் தம்மோடொத்த புலவராயிற்றே! அத்தகைய புல வரைத் தமிழ் நாடு இழக்கக் கூடாதே! அவர் மறைந் தால் அவரால் எய்த வேண்டிய நலன்களை எய்தாமல் இந்நாடு நலன்கெடுமே! ஆகையால், நாட்டின் நலங் கருதி அவரை அவர் முயற்சியிலிருந்து தடை செய்வது தீங்காகாது. ஒருகால் முயற்சி பலித்தால் பலிக்கட்டும், இல்லையானால் குற்றமில்லை என்று தீர ஆலோசித்தே அவர்கள் அவ்வாறு செய்தாராதலின், அவ்வம்மையார் கூறிய சுடு சொல் அவர்களை வருத்தவில்லை. அதற்கு எதிராக அவர் பால் பேரன்பும் பெரு மதிப்பும் காட்டச் செய்தது. உடனே யாவரும் தலைகுனிந்து மரியாதையாக விலகி நிற்க, அவ்வம்மையார் தாவும் தழலில் பாய்ந்து மறைந்தார்.

பூதப் பாண்டியன் பெருந்தேவியார் தம் கணவர் பால் எத்தகைய அன்பு கொண்டிருந்தார் என்பதை எண்ணிப் பாருங்கள். அவர் தீப்பாய்தலைக் கண்ட மதுரைப் பேராலவாயார் என்னும் பெரும் புலவர் அவர் அன்பின் திறத்தையும் அருஞ்செயலையும் மிக உருக்க மாகப் பாடியுள்ளார். அவ்வம்மையாரல்லவோ உண்மைப் பெண்டிர்!

பெண்களுக்குக் கற்பும் புலமையும் இரு கண்கள். கற்பு அவர்களை அழகு செய்வது; புலமை அவர்களுக் குப் புகழைச் செய்வது. இவ்விரண்டும் சேரப்பெற்ற

பெண்களாலேயே குடியும் நாடும் நலம் பெற இடம் உண்டு.

அருஞ்சொற்பொருள்

சிக்கு-ஐயம்திரிபு ஆகிய குற்றம், உற்ற+உழி - உற்றுழி ; துன்பம் வந்த காலத்து, புறப்பாட்டு - புறநானூறு, அகப்பாட்டு - அகநானூறு, விதி - ஊழ்வினை, அரியேறு - ஆண்சிங்கம், முறை - நீதி, சூளுரை - சபதம், கண்ணிலி - இரக்கம் அற்றவன், அலங்கோலம் - சீர்கேடு, பருவரல் - துன்பம், பொம்மென - விரைவைக் குறிக்கும் இடைச்சொல், பசைந்தார் - அன்புடையோர், பருக்கைக்கல் - சிறுகல்.

வினாக்கள்

1. ஒல்லையூர் தந்த பூதப் பாண்டியன் என அவனுக்குப் பெயர் வந்த காரணத்தை விளக்குக.

2. பூதப் பாண்டியனின் நற்பண்புகளைக் கூறுக.

3. பூதப் பாண்டியனும் அவன் மனைவியாரும் ஒற்றுமையாக வாழக் காரணம் என்ன ?

4. பூதப் பாண்டியன் நண்பர்களிடத்துக் கொண்டுள்ள அன்பு எதனால் விளங்குகிறது ?

5. வஞ்சினக் காஞ்சி என்பது யாது ? பூதப் பாண்டியன் கூறிய வஞ்சினத்தை விளக்குக. அதனால் அறியப்படுவது யாது ?

6. தம்மைத் தீப்பாய்தலினின்றும் விலக்கிய சான்றோரை நோக்கிப் பூத பாண்டியன் தேவியார் கூறியது யாது ?

இலக்கணப் பயிற்சி

1. **பிரித்து எழுதுக :** தன்னுட்டை, மனையறம், உற்றுழி, குறைவேது, அவ்வகப்பாட்டு, பேரறிவு.

2. இனிய குணங்கள் - இதில், 'இனிய' என்பது குறிப்புப் பெயரெச்சம், ஆய்ந்த மனம் - இதில் 'ஆய்ந்த' என்பது பெயரெச்சம். நீங்கா அன்பு - இதில் 'நீங்கா' என்பது ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

குறிப்புப் பெயரெச்சம், தெரிநிலைப் பெயரெச்சம், ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.—இவற்றுள் ஒவ்வொன்றையும் விளக்கி உதாரணம் தருக.

# 7. கலிங்கப் போர்

[திரு. க. பழநிக்குமார பிள்ளை]

தமிழில் வீரத்தை வகைப்படுத்தி விளக்கும் நூல்கள் பல உள்ளன. அவைகள் **புறப் பொருள் நூல்கள்** என வழங்கப்படும். அவற்றுள் **பரணி** என்பது சங்க காலத்திற்குப் பிறகு தோன்றிய ஒரு பிரபந்தம் ஆகும். போர்க்களத்தில் ஆயிரம் யானைகளைக்கொன்று பகைவரை வென்று மீண்ட ஒரு சிறந்த வீரனைத் தலைவனாக அமைத்துப் பாடப் பெறுவது அப்பரணி நூலாகும்.

செந்தமிழில் உள்ள பரணிகளில் பழமையானது **கலிங்கத்துப் பரணி** யாகும். அது ஒட்டக்கூத்தர் என்னும் பெருமானால் "**தென்றமிழ் தெய்வப் பரணி**" என்று பாராட்டப் பெற்ற பெருமையுடையது. அதனைப் பாடிய புலவர் **சயங் கொண்டார்** என்பவர். முதற் குலோத்துங்கனது அவைப் புலவராக இருந்த அவர், தம் அரசன் தனது தானைத் தலைவனாகிய கருணாகரத் தொண்டைமானைக் கலிங்கத்தின்மீது ஏவி, அதனை வென்ற செய்தியை விளக்கி அந்நூலை இயற்றினார். இனி அந்நூல் அறிவிக்கும் வரலாற்றைக் காண்போம்.

சோழப் பேரரசை உயிர்நிலைப் படுத்திய மன்னர் பலருள், **முதற் குலோத்துங்கன்** எனப்பட்ட **அபயன்** ஒருவனாவான். இவன் கி. பி. 1070 முதல் 1118 வரை நாற்பத்தெட்டு ஆண்டுகள் ஆட்சி புரிந்தவன். இவனது வெற்றிக்கும், புகழுக்கும் காரணமானவன் இவனது படைத் தலைவனாக விருந்த **கருணாகரன்** என்னும் ஒரு சிற்றரசனே யாவன். இவன் மகா சாமந்தன் கருணாகரன் எனவும், கருணாகரத் தொண்டைமான் எனவும் அழைக்கப்பட்டான். இக் கருணாகரன், கும்பகோணத்திற் கருகிலுள்ள **வண்டாழஞ் சேரி** என்னும் ஊரைத் தலைநகரமாகக் கொண்டு, சோழ மண்டலத்தின் ஒரு சிறு பகுதியை ஆண்டு வந்தான். இவ்வூர் இப்பொழுது

வண்டுவாஞ் சேரி என மருவி வழங்குகிறது. இவன் பல்லவ மரபிலே தோன்றியவன்; பல்லவர் குலமேயாயினும், தொண்டை நாட்டின் ஒரு பகுதிக்குச் சிற்றரசனுக விளங்கினு ஞதலின் தொண்டைமான் என்றழைக்கப் பெற்ருன்.

இடைக் காலத்துச் சோழரது ஆட்சியில், பல்லவர் தம் வலியிழந்து சோழர்களுக்கு அடங்கிச் சிறு சிறு பகுதிகளே யாண்டு வந்தனர். அவர்களில் கருணுகரனும் ஒருவன். இவன் தன் வீரத்தால் அபயனுக்குச் சேனைத் தலைவனுகவும், மந்திரத் தலைவனுகவும் ஆயினுன். இவனது மனைவி அழகிய மணவாளனி என்பாள். இவள் அவ்வண்டாழஞ் சேரிக்கு அருகேயுள்ள திருநறையூர் என வழங்கும் நாய்ச்சியார் கோவிலில் திருநந்தா விளக்கு ஒன்றை அமைத்தனள் எனச் சாசனங்களினின்றும் தெரிகிறது. அன்றியும், இதைப் போன்ற விளக்கொன்றைக் காஞ்சிபுரத்துத் திருமாலுக்கும் அவள் அமைத்தனள் எனத் தெரிய வருகிறது.

ஒரு நாள் அபயன் காஞ்சிமா நகரில் விளங்கிய தனது அழகிய அரண்மனையின் தென்புறத்தே யிருந்ததோர் அத்தாணி மண்டபத்தின்கண், முழுமதியென வெண்குடையின்கீழ் அரசர்க்குரிய, சிறப்புகளோடு பெருமிதமாக வீற்றிருந்தனன். சந்திரவட்டக்குடையின் இருபுறமும், அழகில் அரம்பை யன்ன மாதர் இருவர் நின்று சாமரை வீசினர். அது அச்சந்திரன் தோன்றிய பாற்கடலினின்றும் இரு பெரும் அலைகள் வந்து, அச்சந்திரனை உபசரிப்பது போன்றிருந்தது. ஆடல் பாடல்களில் சிறந்த கணிகை மாதர், பூவுலக அரம்பையரென வந்து, இரு மருங்கும் நின்று மங்கலம் பாடி மன்னனை வாழ்த்தி, அபயனைத் தமது ஆடல் பாடல்களால் மகிழ்விக்கச் சமயம் பார்த்தவாறிருந்தனர். யாழ், குழல் முதலிய இசைக் கருவிகளில் வல்ல இசைக் கலைஞர்கள், அபயனை இன்புறுத்த வேளை நோக்கி யிருந்தனர்.

அபயனது கழல் பணிந்து தம் திறைப் பொருளைச் செலுத்த, எண்ணிறந்த சிற்றரசர்கள் தலைவாயிலிலேயே

காத்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் தமது வரு கையை அரசனுக்குத் தெரிவித்துப் பின்னர், ஒருவர் பின் ஒருவராக மண்டபத்தே நுழைந்து, அபயனை வணங்கித் தமது திறைப் பொருளைச் செலுத்தித் தமக் கென்றிடப்பெற்றிருந்த ஆதனங்களில் அமர்ந்தனர். அபயன், புன்முறுவல் பூத்த முகத்துடன் அவர்களைக் கடைக் கணித்தான். அப்பால் அவன் தனது அமைச் சரை நோக்கி, "நமக்கு இன்னும் திறை செலுத்தாதார் எவரேனும் உளரோ?" வென வினவினுன். உடனே தலைமையமைச்ச னெழுந்து, "மன்னர் பிரானே! வட கலிங்க நாட்டு அதிபதியான அநந்த பதுமன் இரண்டு தடவையாகத் திறைப்பொருள் செலுத்தவில்லை" என விண்ணப்பித்தான்.

அபயனுக்குக் கோபம் அடர்ந்தெழுந்து, தனது தானைத் தலைவனுன கருணகரத் தொண்டமானை நோக் கினுன். அரசனது குறிப்பறிந்த அண்ணல் கருணகரன் எழுந்து உருவிய வாளுடன் நின்ருன். அபயன் அவனைப் பார்த்து, "வீர, அநந்த பதுமன் எளியன் என்ருலும் வலிய குன்றரணம் உடையான். அது இடியப் படை யோடு விரைந்து சென்று வென்று, அவனையும் சிறைப் பிடித்துக் கொணர்க" எனப் பணித்தான்.

கருணகரன் "அரசர் ஏறே! யானே படையெடுத்துச் சென்று ஏழு கலிங்கங்களையும் அழித்து வருவேன்" என வீராவேசத்துடன் புகன்ருன். 'கண்ணிற் சொலிச் செவி யின் நோக்கும்' இறைமாட்சி யுடையவனுன அபயன் தன் சிரத்தை யசைத்துத் தனது தானைத் தலைவனுக்கு விடை கொடுத்தான். அவ்வளவில், அவ்வத்தாணி மண்ட பத்தினின்று நீங்கிய கருணகரன், தனது துணைத் தானைத் தலைவர்களான **பல்லவர்க் கரசு, வாணகோ வரையன், முடிகொண்ட சோழன்** என்பாரைப் போருக்காயத்தமாகுமாறு கூறித் தன் மனை யேகினன்.

மறுநாள், அதிகாலையில் நால்வகைச் சேனைகளும் போர்க்கோலத்தோடு அணி வகுத்து நிறுத்தப்பட்டன. கருணகரன் காஞ்சியின்கண் திருக்கோயில் கொண்

டெழுந்தருளியுள்ள பேரருளாளப் பெருமானை வணங்கித் தனது துணைத் தலைவர்களோடு வடதிசை நோக்கிப் புறப்பட்டான். படை எழுந்த பான்மையைக் கண்டாரனைவரும், "இப்போரினிமித்தம் உலகிலுள்ள மலைகளனைத்தும் இன்று களிறுகளாயினவோ? மாருதங்களே வாம்பரிகளாயினவோ? முகில்களனைத்தும் தேர்களாகளாக மாறினவோ? என்று கூறி வியப்படைந்தார்கள். இரைதேடப் புறப்பட்ட வேங்கைப் புலிபோலக் கருணாகரன் போர் விரும்பிச் சென்றனன்; பாலாறு, குசத்தலை, சுவர்ணமுகி, கொல்லியாறு, பெண்ணையாறு, கிருட்டிணை, கோதாவரி, பம்பை, கோதமை முதலிய நதிகளைக் கடந்து தனது படைகளோடு வடகலிங்கத்தே புக்கனன்.

உலக முடிவுக் காலத்தில், நிலைபெயர்ந்து பொங்கி உலகை யழித்தற் பொருட்டு வருங்கடலைப் போலச் சென்ற படை அரசனுங் குடிகளும் அலங்கோலப்பட்டு கலக்க மெய்துமாறு, ஊர்களில் நெருப்பிட்டுக் கொளுத்திப் பொருளைச் சூறையாடத் தொடங்கியது. ஐயோ! ஐயோ! என்ற ஓலமே எங்கும் எழுந்தது. பொருளைப் பறிகொடுத்த குடிகள் அலறிய வண்ணம் அமைச்சர் சூழக் கொலுவீற்றிருந்த அநந்த பதுமன் முன்னர் ஓடி, "அந்தோ! அரசே! மதில்களிடிந்து விழுகின்றன. ஊரெங்கும் தீ மூண்டெரிகின்றது. புகை யடர்ந்தெழுந்து வானத்தை யளாவுகின்றது. பொழில்கள் எல்லாம் அழிக்கப்பட்டன. பகைவரது படைகள் ஊர்களை வளைத்துக் கொண்டு சூறையாடுகின்றன. காவல! குடிகெட்டோம்" என முறையிட்டனர்.

அது கேட்ட அநந்த பதுமன் திடுக்கிட்டுக் கோபத்தோடு தன் மந்திரத் தலைவனை நோக்கினன். அப்பொழுது அமைச்சருள் ஒருவன் எழுந்து, "கொற்றவ! இரண்டு ஆண்டுகளாக நாம் திறைப்பொருள் செலுத்தவில்லை யாதலின் அபயனது சேனை போர் மேற்கொண்டு வந்துளது" என்ருன். முன்னெச்சரிக்கை இல்லாத இச் செய்தியைக்கேட்ட அநந்த பதுமன் விம்மிதமடைந்தனன்; குடிகள் மிக அல்லலுற்ருேராய்க் குய்யோமுறையோ

என்று வாய்விட்டு அலறிக்கொண்டு தன்னிடம் வந்ததைக் கண்டு அவன் மனம் இரங்கிற்று. பகைவர் படை மேற் கொண்டு வந்தனர் என்ற செய்தியால் அவன் சீற்ற மடைந்து எழுந்தான். கண்களினின்றும் தீப்பொறிகள் பறந்தன. "அவனுக்கு யான் இளைத்தவனா?" என்றான் அநந்த பதுமன்.

அப்பொழுது, "அரசர் சீறுவரேனும் அடியவர் உரை செயா தொழியார்க ளுறுதியே" ஆதலின், மந் திரத் தலைவரான எங்கராயர் என்பார் எழுந்து, மன்ன னுக்கு உறுதி மொழி கூறுவாராயினர். அவர் அபய னது சேனையால் அழிவுற்றார் பலரென்று விரல் மடக்கி விரித்துரைத்துத், திறைப் பொருளைக் கொடுத்தனுப்பு வதே சிறந்த செய்கை யெனவும், அப்படையை எதிர்த்து வீணே அழிதலில் யாதொரு பயனு மின்றெனவும் எடுத் துரைத்தார். அவரது இன்மொழிகளை அநந்த பதுமன் ஏற்றிலனாய், "அமைச்ச! என்னுடைய வாள் வலியும், பிறவும் அறியாது அயலார் போற் பிழைக்க உரை செய்த நின்மதி தான் என்னே! இனி இவ்வாறு கூறுத லொழி!" எனக் கடுமொழி புகன்று, தனது தானைத் தலைவனை நோக்கித் தனது படையைப் போர் முகத்தே செலுத்து மாறு ஏவினன். எங்கராயர் ஏது செய்வார்?

"இன்று சீறினும் நாளையச் சேனைமுன்
நின்ற போதினில் என்னை நினைத்தியால்"

என்று கூறித் தம்மில்லம் ஏகினர். கலிங்க நாட்டைக் கலியே சூழ்வான் போலிருந்தது. எங்கராயரின் நீதி யுரை விழுந்தமையின், நகரெங்கும் அவலவுரையே எழுவ தாயிற்று.

அநந்த பதுமனது ஆணையால் அவனது நால்வகைச் சேனைகளும் போர் முனை நோக்கிப் புறப்பட்டன. முர சங்கள் 'மொகு மொகு' என முழங்கின. போரும் வீரா வேசத்தோடு தொடக்க மாயிற்று. பரியொடு பரி பொரு வது, திரையொடு திரை திரைவது போலிருந்தது. களி றொடு களிறு மோதியது, மலையொடு மலை மலைவதொத் திருந்தது. முகிலொடு முகில் மோதுவது போலத்

தேரொடு தேர் இடித்தன. புலியொடு புலி பொருவது போல, வீரரை வீரர் எதிர்த்தனர். சிங்கத்தோடு சிங்கம் சீறுவது போல், அரசரொடு அரசர் அடர்த்தனர். வீரரது கண்களினின்றும் சினத்தீ வெளிப்பட்டு, மின்னொளி வீசிற்று. அன்னோர் கரத்திலிருந்த சிலைகள் வளைக்கப் பட்டபோது இடியோசை போன்ற ஒலி யெழுந்தது. அவற்றினின்றும் கணைகள் மாரி போற் பெய்தன. இரத்த ஆறு பெருகிற்று. அவ்வாறுகளில் அரசரது சந்திர வட்டக் குடைகள் நுரை போல் மிதந்தன. வெட்டுண்ட களிறுகளின் உடற் கூறுகள் அக்குருதி யாற்றின் இரு புறமும் கரை கட்டியது போலக் குவிந்து கிடந்தன.

வீரரிற் சிலர், தம் உடைவாளாற் களிறுகளின் துதிக்கைகளைவெட்டித் தோளிலிட்டுக்கொண்டு செல்வர். அங்ஙனம் செல்லும்போது அத்துதிக்கைகளினின்றும் இரத்தம் சொரிந்து கொண்டிருக்கும்; அது பார்வைக்குத் துருத்தியாளர் தோற்பையில் தண்ணீர் நிரப்பிக்கொண்டு தெளிப்பது போல விருக்கும். வீர சுவர்க்கத்திற் புகக் கோட்டை வாயிலின் உள்ளே நுழையப் போட்டி போடு பவரைப்போல வீரர்கள் பொருதனர். இங்ஙனம், காலை முதல் நண்பகல் வரைக் கடும்போர் நிகழ்ந்தது. கருணா கரனது சேனைமுன், அநந்த பதுமனது படை கொதுகு களுக்கு ஒப்பாய் அழியலாயிற்று. தொண்டைமானோ சண்டையில் வல்லவன்; அவன்முன் பதுமனது சேனை நிற்க வாற்ருது பதைத்தது. கலிங்கர் படையின் பெரும் பகுதி அழிந்தது. கருணாகரனின் படை வீரர்கள் கலிங்க வீரரைத் துரத்தி அடித்தனர். அநந்த பதுமனுடைய தேர்கள், ஒட்டகங்கள், குதிரைகள், யானைகள், நிதிக்குவை கள் ஆகிய அனைத்தையும் கைப்பற்றுவாராயினர். அநந்த பதுமனும் கருணாகரனால் சிறைப்பிடிக்கப்பட்டான். எஞ்சிய கலிங்க வீரர் உயிர் தப்பி ஓடத் தலைப்பட்டனர். அவ்வாறு ஓடியவரின் செயலை ஒரு சிறிது கூறுவோம்.

கலிங்க வீரரில் சிலர், தம்மொடு தொடரும் தம் நிழலைக் கண்டு பகைவரே துரத்திக்கொண்டு வருவதாக

எண்ணி, அபயம் அபயம் என்று ஓலமிட்டுக் கொண்டே ஓடினர். பகைவர் தம்மை வளைத்துக்கொள்ள உயிர் தப்ப வழி தேடிய கலிங்க வீரரில் சிலர், தமது வில் நாண் கயிற்றை அறுத்துப் பூணூலாகத் தரித்துக்கொண்டு, "ஐய! யாங்கள் வேதியர்; காசிக்கு யாத்திரை வந்தோம் இங்குத் தங்கி இவ்வாறு அகப்பட்டுக் கொண்டோம். எங்களைக் காப்பாற்ற வேண்டும்" என்று கூறிப் பிழைத்தனர். வேறு சிலர், இரத்தத்தில் தோய்ந்து செந்நிறமுடையதாயிருக்கும் ஆடையை இரண்டாக்கி, ஒன்றை உடுத்தி மற்றொன்றைப் போர்த்திக் கொண்டவராய்த் தலையை முண்டித்துக்கொண்டு, "ஐயோ யாங்கள் கலிங்கர் அல்லேம்; சாக்கியரைப் பார்த்தால் இவ்வாறிருப்பரென நீங்கள் அறியீரோ? எனக் கூறித் தப்பினர். மற்றும் சிலர், "கலிங்கரது படை மடியும் காட்சியைக் கண்டு யாங்கள் மலைத்துப் போய்விட்டோம்; நாங்கள் தெலுங்கர்; யாத்திரையாக வந்தவர்கள்; நன்கு பாட வல்லோம். இதோ பாருங்கள், எங்கள் தாளத்தை" என்று இறந்து கிடந்த யானைகளின் மணிகளைக் கையிற் பிடித்துத் தாளம் போட்டவாறு தப்பினர். இங்ஙனம் கலிங்கப்போர் முடிவடைந்தது.

வண்டையர் கோமான் தொண்டைமான், வெற்றித் தூண் நாட்டிக் கடகரியும், வயமாவும், பெருந்தனமும் கொண்டு மீண்டான். அபயனும் கருணாகரனை வியந்து வரிசைகள் பல வழங்கினன்.

### அருஞ்சொற்பொருள்

சாசனம் - கல்வெட்டு, அத்தாணி மண்டபம் - கொலு மண்டபம், வைபவம் - சிறப்புக்கள், அரம்பை - தேவருலகப் பெண்களில் ஒருத்தி, கழல் - திருவடி, திறை - கப்பம், வரி; கடைக் கணித்தான் - கடைக்கண்ணால் பார்த்தான், பூத்த - தோன்றிய, அரும்பிய; தானை - சேனை, மந்திரத் தலைவன் - அமைச்சர் தலைவன், குன்றரண் - மலையரண், ஏறே - ஆண் சிங்கம் போன்றவனே! பான்மை - தன்மை, மாருதம் - காற்று, வாம்பரி - தாவும் குதிரை, அலங்கோலம் - சீர்கேடு, விம்மிதம் - வியப்பு, பரிதாபகரம் - இரங்கத்தகும் நிலைமை, பிழைக்க - தவறாக, அவலம் - துன்பம், திரை - அலை, சிலை - வில், கணை - அம்பு, குருதி -

இரத்தம், நிதிக் குவை - செல்வக் குவியல், ஓலம் - ஒலி, கட கரி - மதயானை, வயமா - வலிய குதிரை.

### வினாக்கள்

1. அபயன் கொலுவீற்றிருந்த சிறப்பை விளக்குக.

2. அபயன் கருணாகரத் தொண்டைமானுக்கு இட்ட கட்டளை யாது?

3. கருணாகரன் படைகள் போருக்கு எழுந்த பான்மையை விளக்குக.

4. அபயனது படையால் கேடுற்ற கலிங்கர் தம் மன்னனை அணுகிக் கூறிய அவல மொழிகள் யாவை?

5. எங்கராயர் அநந்த பதுமனுக்குக் கூறிய உறுதிமொழிகள் யாவை?

6. போர்க்களத்தில் இருதிறப் படைகளும் மாறுபட்டுப் போர் செய்த திறத்தை விளக்கி வரைக.

7. உயிர் பிழைத்த சில கலிங்க வீரர்கள் தொண்டைமான் படை வீரர்களுக்குத் தப்பி ஓடிய வகையைத் தெரிவிக்க.

8. பரணியின் இலக்கணம் யாது?

9. கலிங்கத்துப் பரணி யாரால் பாடப் பெற்றது? அதனைப் பாராட்டிப் பாடிய புலவர் யார்?

### இலக்கணப் பயிற்சி

1. **பிரித்து எழுதுக:** இன்மொழி, தானைத்தலைவன், கடும் போர், மூண்டெரிகின்றது. தீப்பொறி, மின்னொளி, கடுமொழி, உடற்கூறு.

2. சயங்கொண்டார் கலிங்கத்துப் பரணியை இயற்றினார்: சயங் கொண்டாரால் கலிங்கத்துப் பரணி இயற்றப்பட்டது. முதல் வாக்கி யத்தில் இயற்றினார் என்பது செய்வினை. இரண்டாவது வாக்கியத்தில் அது செயப்பாட்டு வினையாக மாற்றப்பட்டு உள்ளது. அவ் வினைக் கேற்பப் பெயர்ச் சொற்களும் மாறி வந்துள்ளன.

i. கருணாகரன் கலிங்கத்தை வென்றான்.

ii. ஒட்டக்கூத்தர் கலிங்கத்துப் பரணியைப் பாராட்டினார்.—இவ் வாக்கியங்களைச் செயப்பாட்டுவினை வாக்கியங்களாக மாற்றி அமைக்க.

## 8. தமிழன் கண்ட மலேயா (கடிதம்)

[வித்துவான், அ. மு. பரமசிவானந்தம், எம். ஏ., எம். லிட்.,]

கடல்மேல் கலத்தகம்,
21—5—48.

அன்பின் செல்வி மங்கையர்க்கரசிக்கு,

நலன் விழைவு. புதன்கிழமை அம்மாவும், தம்பியும், மாமாவும், தாத்தாவும் மற்றுமுள்ள நண்பர்கள் பலரும் என்னை வாழ்த்திக் கப்பலேற்றி அனுப்பினுர்கள். கலம் ஏறி வெளியூர் செல்வது நமக்குப் புதிதாகையால் அம்மா, சற்று வருத்தமுற்ருர்கள் என்பதை முகக் குறிப்பால் அறிந்தேன். அனைவரும் கப்பலுள் வந்து சிறிது நேரம் தங்கிப் பிறகு தரைக்கு இறங்கிச் சென்ருர்கள். மாலை 4 மணிக்குக் கப்பல் புறப்பட்டது. கண்ணுக்குத் தெரியும் வரை அனைவரும் நின்று கொண்டிருந்ததைப் பார்த்தேன். பிறகு கடல் நடுவில் கலம் சென்றது. என் அறைக்குள் நான் சென்றேன். தனிமையை என் மனம் உணரத் தொடங்கியது.

குழந்தாய்,

எனது அறையில் மற்றெருருவரும் உடனிருந்தார். அவர் மலேயாவில் அரசாங்க மருத்துவராக இருக்கின்ருர் என்பதை அறிந்தேன். அவர் மிக நல்லவராக இருந்தார். அவருடன் நன்கு பழகினேன். மாலை இருட்டும் வரையில் நான் என் அறையில் இருந்தபடியே சென்னைக் கடற்கரையை—அரிய தமிழகத்தின் எல்லையை—உயரிய கோபுரங்களைக் கண்ணுற்றுக் கொண்டே சென்றேன். இருட்டவும், கரை மறையவும் சரியாக இருந்தது. பிறகு உணவு கொண்டு படுத்துக் கொண்டோம். நல்ல உறக்கம் என்னை அணைத்துக் கொண்டது.

**கடற் காட்சியும் கடற் பிணியும் :**

மறுநாள் (20-5-48) காலை எழுந்து நாற்புறமும் நோக்கினேன். பார்க்குமிடமெங்கும் பரந்த கடல். எப் பக்கத்தும் கருங்கடல் காட்சி யளித்தது. எழுந்து என் காலைக் கடன்களை யெல்லாம் முடித்துக் கொண்டேன். அங்கங்கே வேண்டிய வசதிகளைச் செய்யப் பல அலுவ லாளர்கள் இருந்தார்கள். தூய வெந்நீரில் மூழ்கினேன். வெந்நீர் எனக்குப் பழக்கமில்லை என்பது உனக்குத் தெரியும் என்றாலும், அந்தக் கடல் நிலை என்னை வெந் நீரை வேண்டுமாறு தூண்டிற்று. பிறகு பூரி, கிழங்கு பலகாரம் கொண்டு வந்தார்கள். அதற்குள் கடற் பிணி என்னைப் பற்றிக் கொண்டது. சிறிது உட்கொண்டேன். உடனே அனைத்தையும் வாயிலெடுத்தேன். •மயக்கமாகிப் படுத்துக்கொண்டேன். பிறகு பத்துமணிக்குக் கொஞ்சம் கஞ்சி உண்டேன். அன்று முழுவதும் மயக்கமாகவே இருந்தது. மாலை மறுபடியும் உப்புமா அருந்த வற் புறுத்தினார்கள். பயன் மறுமுறை வாயிலெடுத்ததுதான். இரவு ஒன்றும் உட்கொள்ளாது அப்படியே படுக்கையில் புரண்டேன். என்னை மறந்து தூங்கினேன். இப்படி ஒரு நாள் கழிந்தது.

இன்று (21—5—48) சற்றுத் தெளிவடைந்தேன். காலைக் கடன்களை முடித்துக் கொண்டேன். சற்று உலா வினேன். காலையில் எலுமிச்சஞ்சாறு அருந்தினேன். இன்று என்னை ‘வாந்தி’, ‘மயக்கம்’ ஒன்றும் பற்றவில்லை எனினும், என் அறையிலிருந்த மருத்துவர் ஒரே மயக்க மாக வாயிலெடுத்துக் கொண்டிருந்தார். என் பக்கத்து அறையில் ஒரு மணமான புதுக் குடும்பம் தங்கியிருந்தது. அந்த அம்மையார் கடற் பிணியால் பெரிதும் வருத்த முற்றார்கள். அவர் சற்று என்னைப் போலத் தெளி வடைந்தவராய் எங்களறைக்கு வந்து போனார். எங்களது அறைக்கு மூன்றாவது அறையில் ஓர் இளம் பெண் தனி யாகப் பிரயாணம் செய்து கொண்டிருந்தார். மலேயா வில் வாழும் தன் கணவரிடம் அவர் சென்று கொண்டிருந் தார். அவரைக் கடற்பிணி நலிவுறுத்தவில்லை.

**கடலின் தொன்மையும் வளமும்**

சற்றுத் தெளிவடைந்தமையால் கப்பல் மேல்தளத்தில் ஏறி நாற்புறமும் நோக்கினேன். எங்கும் கருங்கடல் என்று எண்ணும்போது உளத்துக்கு எவ்வளவு மகிழ்ச்சி உண்டாகிறது, தெரியுமா? இன்று நாம் வாழ்கின்ற மண்ணும், காண்கின்ற மலையும், எத்தனை கோடி ஆண்டுகள் இந்தக் கடலுள் மூழ்கிக் கிடந்தன! 'கல் தோன்றி மண் தோன்றாக்' கால முதற் கொண்டு—அதற்கு முதற்கொண்டு—இந்தக் கடல் இதே மாதிரி அலைகளை வீசிக்கொண்டு ஓய்வு ஒழிவு இல்லாமல் இருக்கின்றது. குழந்தாய்! இந்த உலகத்தில் முதலில் கடல் தான் உண்டாயிற்று. பிறகு பல கோடி ஆண்டுகள் கழித்துத்தான் நாம் வாழும் நிலம் உண்டாயிற்று. நம் நாட்டு வட எல்லையாகிய இமயம் கடலுக்குள் இருந்த காலம் ஒன்று உண்டு. ஆனால், அதை எண்ணும்போது மற்றொன்றும் என் உள்ளத்தே தோன்றி வருத்துகிறது.

இமயம் கடலுள் இருந்த காலத்தே தெற்கே தமிழ் நாடு எவ்வளவு விரிந்து இருந்தது, தெரியுமா? இதோ நான் செல்லுகின்ற கடலெல்லாம் நிலமாயிருந்ததே. இன்றைய குமரிமுனைக்குத் தெற்கே நாற்பத்தொன்பது தமிழ் நாடுகள் இருந்தனவே. மேற்கே மடகாசுகர் தொடங்கிக் கிழக்கே நான் போகும் மலேயாவும் தாண்டி ஆத்திரேலியா வரையில் தமிழ்நாடு இருந்ததே. இதோ கலம் செல்லும் இந்த இடத்தில் எத்தனைத் தமிழர் வாழ்ந்தார்களோ! அந்த அரும்பெரும் நாட்டைக் கடல் கொண்டதைக் குறித்து எண்ணுங்கால் உளம் நைகின்றது. செய்வது என்? இயற்கை விளையாட்டு அது! கடலுக்கும் தமிழ்மீது காதல் உண்டுபோலும்!

**மக்கள் தோற்றம்**

கடிதம் எழுதிக் கொண்டே கடலை எட்டிப் பார்த்தேன். பெரிய மீன் ஒன்று துள்ளிக் குதித்தது. மனிதனுக்குப் பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் உண்டான உயிரினம் அல்லவா மீன்! மண்ணுக்கு முன் கடல்

தோன்றிற்றல்லவா? அப்போது முதன் முதலாகக் கடற் பாசியைப் போன்ற குறை உள்ள உயிரினம் உலவி, பிறகு முழு உயிர் உள்ளதாக மீன்தான் தோன்றிற்று. எனவே, முதல் உயிரினமாகிய மீன் இனம் என் கண்ணுக்குப் பெருவிருந்தாயிற்று. மீன் பல வகையில் பெருகிற்று. மீனிலே யிருந்து பலப்பல உயிரினம் தோன்றின. ஏன், இன்றைய மனிதன்கூட மீனிலிருந்து தோன்றினவன் தான் என்று பல அறிஞர்கள் முடிவு கட்டியுள்ளார்கள். மனிதன் குரங்கிலிருந்து தோன்றினன் என்றல் உனக்குப் புரியும். ஆனல், குரங்கு எங்கிருந்து தோன் றிற்று? எச். சி. வெல்சு போன்ற பேரறிஞர் ஆய்வுக் கண் கொண்டு கண்டிருக்கிறர்கள். அனைத்துயிர்களுக்கும் முதலிடம் மீனும், கடற்பாசி போன்ற முதல் உயிரினமும் என்பது அவர்கள் முடிவு. அவற்றின் தோற்றத்திலிருந்து இற்றைக்கு நாற்பதாயிரம் ஆண்டுகட்கு முன் மனிதன் தோன்றியிருக்க வேண்டுமென்று எண்ணுகின்றர்கள். இவற்றை யெல்லாம் ஆராய்வது உனக்கு விருப்பமாகவும் வேடிக்கையாகவும் இல்லையா? நீ இன்னும் அறிவு நிரம்பப் பெற்ற பிறகு அவற்றைப் பற்றி எழுதிய நூல்களோடு பேசுவாய். அவை பலவற்றை உனக்கு விளக்கும்.

### கப்பல் 'வாசனு'

நாங்கள் செல்லுகின்ற கப்பல் தனிப்பட்டது. இத் துணைப் பெரிய கப்பலில் நாங்கள் பன்னிரண்டு பேர் தான் செல்லுகின்றேம். கப்பற் பொறி ஏதோ பழுதுற்ற தென்றும், ஆகவே, அதிகச் சுமை கூடாதென்றும், முதல் வகுப்புக்கென்று பன்னிருவரை ஏற்றிக்கொண் டாள் 'வாசனு'. கப்பலைப் பெண்பால் இனத்தில் சேர்த் துள்ளார்கள் என்பதை நீ அறிவாயா? தன்னைச் சார்ந்த மக்களைத் தாயெனப் பரிந்து காத்து விரும்பிய கரைக்குப் பாதுகாவலாகக் கொண்டு செல்லும் அவளைத் தாயெனல் பொருந்தும். அவள் நடை, மிக மென்மையாக—அசை

வாக—பெண் நடையாகத்தான் அமைகிறது. அவள் மிக மெதுவாகத்தான் செல்லுகிருள். பொறுமைக்கு எல்லே காணவேண்டில் இவள் மடியில் அமர்ந்து செல்ல வேண்டும். கப்பலோட்டிகள் பொறிக்கேட்டால் மெள்ளச் செல்வதாகச் சொன்னுர்கள். நான் அவள் பெண்மைத் தன்மையால் ஒல்கி ஒசிந்து மெல்லச் செல்கிருள் என எண்ணுகின்றேன். அந்த மென்மையில் தமிழ்மக்கள் வீரமும் காண்கிறது. திரண்டு வரும் அலேகடலேச் செல்க என்று தள்ளித் தன் மடியிடைத் துயிலும் மக்களே யேந்தி, அஞ்சா ஆண்மையோடு அலேகடலேத் தாண்டு வதைக் காணுங்கால் அவள் வீரம் தோன்றும்.

**மலேயாளமும், மலேயாவும் :**

குழந்தாய், என்னேடு பன்னிருவர் பயணம் செய் கின்றனர் என்று எழுதினேன்! அவர்கள் யாவரென்று அறிய நீ ஆசைப்படுகின்ருயல்லவா? ஆம், நான் ஒருவன் தான் தமிழன், ஒருவர் பஞ்சாபி. மற்றவர் அனேவரும் மலேயாளிகள். இதற்குமுன் கப்பலிலும்கூட இவ்வாறு மலேயாளிகள்தாம் அதிகமாகச்சென்ருர்களாம். மலேயாளி கள் எல்லோரும் ஒருகால் தமிழராய் இருந்தவர்கள் என்பது உனக்குப் புதிதாக இருக்கலாம். சேர, சோழ, பாண்டியரைப் பற்றியும் அந்த மூன்று தமிழரசர்களும் தமிழ் நாட்டை ஆண்டது பற்றியும் படித்திருக்கிரு யல்லவா? அவருள் சேரன் ஆண்ட நாடுதான் இன்று மலேயாள நாடாக மாறியுள்ளது. ‘சிலப்பதிகாரம்’ உண்டாகிய நாடுதான் தற்கால மலேயாள நாடு. அது பற்றி இங்கு நினேப்பவர் இலர். தமிழிலே இருந்து சிதைந்த மொழியானது வடமொழிச் செயற்கையைப் பெருவாரியாகப் பெற்றுத் தமிழிலிருந்து மாறிவிட்டது. எனினும் பல சொற்கள் தமிழாகவே உள்ளன.

மலேயாளிகளுள் பலர் மலேயாவில் உள்ளனராம். கப்பல் தலேவர் ஒருவர் வேடிக்கையாகச் சொன்னுர். “மலேயாளிகளாகிய நீங்கள் மலேயா சென்று, மலேயாளி

களின் எண்ணிக்கையைப் பெருக்கி, மலேயாவும் மலையாளமும் ஒன்றுக்கொன்று தொடர்புடையனவே என்று பேசி விடுவீர்களோ?'' என்றார் அவர். அனைவரும் சிரித்தோம். மலையாளிகள் எங்கெங்குப் பொருள் வருவாய் உண்டோ, அங்கங்கெல்லாம் செல்வதைப் பற்றிப் பேசிக்கொண்டோம். 'கால்டுவெல்' பல ஆண்டுகட்கு முன் தமிழரை அவ்வாறு சொல்லி விட்டுச் சென்றார். எங்கே பொருளதிகம் வருவாய் உண்டோ, அங்கே தமிழரைக் காணலாம் என்று அவர் தமிழரைக் கூறியுள்ளார். ஆனால் அஃது இன்று மலையாளிகட்குப் பொருந்தும். நீ உன் விடுதியிலே வேலை பார்ப்பவரும் மேற்பார்வையாளரும் மலையாளப் பெண்கள் என்று கூறியிருக்கிறாய். சென்னையில் மலையாளிகளை எந்த இடத்திலும் காணலாமே. ஒரு வேளை மலேயாவிலும் அப்படித்தானோ என்று கேட்டேன். இல்லை என்றார்கள். ஒரு சில ஆண்டுகளாகத்தான் அவர்கள் கூட்டம் கூட்டமாக மலேயா செல்லுகிறார்களாம். அவர்கள் பெரும்பாலும் தோட்டங்களில் வேலை பார்க்கிறார்களாம்.

கடல்மேல் கலம் அசைந்து கொண்டிருக்கிறது. இன்னும் நான் நிறைந்த தெளிவை அடையவில்லை. ஆகவே இன்று, இதோடு என் எழுத்து முடிகின்றது. நாளை நிகழ்ச்சிகளை விபரமாக எழுதுகிறேன்.

அன்புள்ள தந்தை,
**அ. மு. பரமசிவானந்தம்.**

**அருஞ்சொற்பொருள்**

கலம் - மரக்கலம், கப்பல்; மேற்பார்வையாளர் - கண்காணிப்பவர்.

**வினாக்கள்**

1. கப்பலில் செல்வோர்க்கு அங்கு அமைந்துள்ள வசதிகள் யாவை?
2. கடற்பிணி எனப்பட்டது யாது?
3. கடலின் தொன்மைபற்றி நீங்கள் அறிந்தது யாது?

4. இயற்கையின் விளையாட்டு என்று கட்டுரை ஆசிரியர் எதனைக் குறிக்கின்றார் ?

5. மக்கள் தோற்றம் பற்றி ஆராய்ச்சியாளர் கருத்து யாது ?

6. மனிதனது தோற்றம் எவ்வளவு பழமையானது ?

7. 'கப்பல் வாசனுவைத் தாயெனல் பொருந்தும்'—எவ்வாறு ?

8. கப்பல் வாசனுவிடம் காணப்பட்ட வீரத்தை விளக்குக.

9. 'மலையாளிகள் ஒரு காலத்தில் தமிழராய் இருந்தவர்கள்'—இது எவ்வாறு பொருந்தும் ?

10. தமிழரைப் பற்றிக் கால்டுவெல் யாது கூறியுள்ளார் ?

11. மலேயாவில் மலையாளிகள் பார்க்கும் அலுவல்கள் யாவை ?

## இலக்கணப் பயிற்சி

1. பகுபத உறுப்பிலக்கணம் கூறுக: கண்ணுற்று, புரண்டேன், கொண்டது, நைகின்றது, எண்ணுகின்றார்கள்.

2. அரிய தமிழகம், தூய உணவு—இவற்றில் அரிய, தூய என்பன குறிப்புப் பெயரெச்சங்கள் அல்லவா ? இவைபோல்வரும் சில குறிப்புப் பெயரெச்சங்களை எடுத்துக் காட்டாகத் தருக.

# 9. செந்தமிழ் இன்பம்

[வித்துவான், திரு. எஸ். வி. வரதராச ஐயங்கார், எம். ஏ., எம். ஓ. எல்.]

## கரந்தைத் தமிழ்ச்சங்க ஆண்டுவிழா

தஞ்சையில் தமிழ்த் தொண்டாற்றிவரும் இச் சங்கத்தின் ஆண்டுவிழா ஒவ்வோராண்டிலும் மிகவும் சிறப்பாக நடைபெறுவது வழக்கம். அத்தமிழ் விழாவில் அறிஞர் பலர் சொற்பொழிவு நிகழ்த்துவார்கள். 1935இல் ஆண்டு விழா **மகாவித்துவான் இராகவையங்கார்** அவர்கள் தலைமையில் நிகழ்ந்தது. சொற்பொழிவாற்றுவதில் புகழ் பெற்ற தமிழ் அறிஞர் சிலர் பேசினர்கள். மாலை ஐந்து மணியளவில் விழா நிகழ்ச்சி ஆரம்பமாயிற்று. தஞ்சை வாசிகளான பேரறிஞர், பெரும் பதவியாளர் முதலாக அன்று அங்கே கூடியிருந்தோர் பல்லாயிரவர். யாவரும் அறிஞர்களின் பேச்சில் ஈடுபட்டிருந்ததால் அமைதி குடி கொண்டிருந்தது. எட்டரைமணி யளவில் சொற்பொழிவுகள் முடிந்தன. தாம் சொல்ல விரும்பியவைகளைப் பின்னுரையில் கூறலாம் என்று தலைவர் கருதியிருந்தமையால், அவரது முன்னுரை மிகவும் சுருக்கமாகவே இருந்த தென்பதை அவருடன் பழகியவர்கள் தெரிந்திருந்தார்கள். முடிவுரையில் அவரது பேச்சைக் கேட்க யாவரும் ஆவலுடன் இருந்ததால், இடையில் எவரும் எழுந்து செல்லவில்லை. ஆயினும், மணி எட்டுக்கு மேலாகிவிட்டதால், மேடையில் முன் வரிசையில் அமர்ந்திருந்த அறிஞரும், பதவியாளருமான சிலர் எழுந்து போக முயன்றனர். அதே சமயத்தில் தலைவரவர்கள் முடிவுரையைத் தொடங்கும் பொருட்டு எழுந்து நின்றார். வெளியேற எண்ணியவர்கள் எழுந்ததும், தலைவரவர்கள் தம் கட்டுரையைத் தொடங்குகையில் அவ்வமயத்திற்கு ஏற்ப, "தஞ்சை வாசிகளுக்குத் தமிழறிவு கிடையாது என்று ஓர் அபவாதம் உண்டு!" என்றார். என்றதும், எழுந்து ஏக நினைத்தவர்கள் திடுக்கிட்டு அமர்ந்து விட்டனர். பேச ஆரம்பித்த தலைவர் அப்பொழுது கூறிய கவி,

"பிரம்பைக் கரம்பற்றிப் பின்னியந் தக்கூடை
நிரம்பக் கவியை நிரப்பிச்—சிரம்பற்றிக்
கற்ருர்கள் தஞ்சைக் கடைத்தெருவெ லாங்கூவி
விற்ருலுங் கொள்ளார் விலேக்கு !"

என்பது. முதலில் அவர் கூறியதும், அதற்கு மேற்கோளாக எடுத்துரைத்த பாடலும் ஒருநிமிட நேரம் அங்கிருந்தோரைத் திகைக்கச் செய்துவிட்டன. பின்பு அவர் பேசலானுர் :

"அன்பர்களே ! பாடலே உற்று நோக்குங்கள். மேல் நோக்கில் பார்க்கும்போது, தஞ்சை வாசிகள் தமிழறிவு இல்லாதவர்கள் ; தமிழின்பம் அறியாதவர்கள் என்று தான் சொற்போக்கினுல் பொருள் தோன்றும். ஊன்றிப் பார்த்தால் கவியைக் கற்றவர்கள் நிறைந்து வாழும் தஞ்சையின் கடைத் தெருவெல்லாம் கூவி விற்ருலும், அங்குள்ளோர் கல்விமான்களாக இருப்பதாலும், தெருவில் விலேகூவி விற்கும் பொருட்டு வரும் பாடல் பொருட் சிறப்பற்றதாக இருப்பதாலும், அவற்றினும் சிறந்த கவிகளேத் தாமே பாடியும் கேட்டும் இன்புற்றவர்களாயிருப்பதாலும், அன்னுர் விலேக்குக் கொள்ளார் என்பதே இச்செய்யுளின் முடிந்த பொருள். இப்பாட்டுத் தஞ்சை வாசிகளின் மேம்பட்ட தமிழறிவை விளக்குவதேயன்றி வேறன்று. தஞ்சை வாசிகள் தமிழறிவு இல்லாதவர்கள் என்ற அபவாதத்தை வெளியிடுவதாக இச் செய்யுளுக்குப் பொருள் கொள்வது தவறு. என்னிடம் இப் பாடலேச் சொல்லி, அங்ஙனம் பொருளுரைத்த ஒருவரை யான் மறுத்துரைத்தேன்" என்று அவர் தமது முடிவரைக்கு ஓர் முன்னுரை அமைத்துக்கொண்டு பேசினுர். அந்தப் பேச்சு அன்று அங்கிருந்த அறிஞர் உள்ளத்தில் தமிழின்பத்தைப் பெருக்கெடுத்து ஓடச்செய்தது. இனி, மற்றெரு நிகழ்ச்சிக்குச் செல்வேன்.

**பிள்ளேயார் பூசனே**

ஐயங்காரவர்கள் ஆழ்ந்த வைணவப் பற்று உள்ளவர் ; ஆழ்வார்களின் அருளிச் செயலில் ஈடுபட்டு உருகுவார் ; உணர்ச்சி பொங்கப் பாடிக் கண்ணீர்

பெருக்குவார். உடனிருப்பவர்களுக்குப் பாசுரங்களின் பொருள் நயத்தை விளக்கி, "இவர் நம்பிள்ளையின் புன ரவதாரமோ!" என்று வியக்கும்படி செய்வார். அவர் உள்ளத்தினின்றும் பீறிட்டெழும் சுவை பொதிந்த உரை களைக் கேட்டு இன்புற விரும்பியே புலவர் **கந்தசாமியார வர்களும் சர்க்கரைப் புலவரவர்களும்** அடிக்கடி அவர் இல்லத்திற்கு வருவார்கள். இவருள் கந்தசாமியார் ஐயங்காரவர்களின் பழைய மாணவருள் ஒருவர். அவர் சற்று வினயங்கொண்டவராகவே பழகுவார். சர்க்கரைப் புலவரவர்கள் வேடிக்கையாகப் பேசிப்பேசி ஐயங்காரவர் களை உவப்பித்து, அதற்கு ஈடாக அவரைப் பேசுவித்துத் தாமும் இன்புறுவார். இவர்கள் பேச்சில் தமிழின்பம் ததும்பி நிற்கும்.

ஒருகால், விநாயக சதுர்த்தி நாளன்று காலையில் யான் ஐயங்காரவர்களைக் காணும் பொருட்டு அவரில்லத் துக்குப் போய்ச்சேர்ந்தேன். வேலையாள் ஒருவன் அச்சில் அடித்தமைத்த மண்பிள்ளையார் ஒன்றும், வில்வம், அறுகு, அரளி, கொன்றை போன்ற பத்திர புட்பங்களும் வாங்கி யெடுத்துக்கொண்டு உள்ளே நுழைந்தான். அச் சமயம் சர்க்கரைப் புலவர் நீராடித் திருநீறும் குங்குமப் பொட்டும் அணிந்தவராய்க் கச்சமாக ஆடையணிந்து கம்பீரமான தோற்றத்துடன் "சுவாமிகளே!" என்று அழைத்த வண் ணம் உள்ளே வந்தார். "புலவரே, வாருங்கள்" என்று ஐயங்காரவர்கள் அவரை வரவேற்றுத் தாம் பிள்ளையார் பூசனைக்கு ஏற்பாடு செய்து கொண்டிருப்பதாகச் சொன்னார். புலவர், "சுவாமி, தாங்கள் பரம வைணவ ராயிற்றே! பிள்ளையார் பூசை செய்வதுண்டா?" என்றார். இப் பேச்சில் ஈடுபட்டிருந்த யான் ஐயங்காரவர்களின் விடையை ஆவலுடன் எதிர்பார்த்தேன்.

"புலவரே! நான் பரம வைணவன் என்று தாங்கள் சொன்னது முற்றும் உண்மை தான். திருமாலே பரம் பொருள் என்பதுதான் எங்கள் முடிவு. பிள்ளையார் எங்கள் பெருமாளைக் காட்டிலும் தாழ்ந்தவர் என்பது தான் எமது கொள்கை. ஆனால், அவர் என்னைக்காட்டி

லும் பெரியவர்தானே! அதில் எனக்கு ஐயமில்லை. அதனால் அவரைப் பூசிப்பதில் என்ன தடை?'' என்றார் ஐயங்காரவர்கள். இந்த விடையைக் கேட்ட எங்கள் இருவர் உள்ளமும் பூரித்துவிட்டன.

## திருவையாறு

ஒருநாள் சர்க்கரைப் புலவரும் கந்தசாமியாரும் ஐயங்காரவர்கள் முன்னிலையில் திருவையாற்றின் தல மகிமையைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தார்கள். "திருநாவுக்கரசர் மிகவும் ஈடுபாடு கொண்டிருந்த பதி, திருவையாறு. ஆயினும், அவர் அங்கே மடம் கட்டாமல், திருநல்லூரிற் கட்டியதற்குக் காரணம் இன்னதென்று விளங்கவில்லை. என்று திரு. க. சுப்பிரமணியப் பிள்ளையவர்கள் தமது 'பெரியபுராண ஆராய்ச்சி' என்ற நூலில் எழுதியுள்ளார். அந்தப் புத்தகத்தை எடுத்துத் திறந்த போது இந்த வரிகள் என் கண்ணிற்பட்டன'' என்று புலவர் கூறினர்.

உடனே ஐயங்காரவர்கள், "புலவரே! திருவையாறு மிகவும் புனிதமான திருப்பதி. அங்கே வரும் அடியார்கள் சிவதரிசனம் செய்தபின், அங்கு இராத்தங்காமல் அயலூர்க்குச் சென்றுவிடுவதால், அபசாரப்படாமல் இருப்பார்கள் என்று திருநாவுக்கரசர் கருதியதே அங்கு அவர் மடம் கட்டாததற்கு உரிய காரணமாயிருக்கலாம். என் அனுபவத்திலிருந்து ஒரு காரணம் தோன்றுகிறது. யான் ஒருமுறை திருவையாற்றுக்குச் சென்றிருந்தேன். அன்றிரவு அங்கே தங்க நேர்ந்தது. அன்றிராப்பொழுது எனக்குச் சிவராத்திரியாகவே கழிந்தது! யான் கண் கொட்டவில்லை! வண்டுருவம் போன்றிருந்த கொதுகுகள் இசைத்த வண்ணம் மொய்த்துக் கடிக்கத் தொடங்கி விட்டன! கடித்தவற்றுடன் ஓரளவு போராட முடிந்த போதிலும், முதுகுப்புறம் வந்து தாக்கத் தொடங்கியவற்றை என்னால் ஓட்ட முடியவில்லை! அதுமுதல் புதிய ஊர்களுக்குச் செல்லும்போது இராத்தங்க நேர்ந்துவிட்டால், திருவையாற்று நினைவு எனக்கு வந்துவிடும்!

"சிவதரிசனத்தின் பொருட்டுத் திருவையாற்றுக்கு வரும் அடியார்கள் இரவில் தங்க நேரிட்டால் கொதுகுக் கடிக்கு ஆளாகி வருந்த நேருமே என்று எண்ணி, அவர்கள் அங்கே தங்கலாகாது என்ற குறிப்பினுல்தான் நாவுக்கரசர் அங்கே மடம் கட்டாமல் விடுத்திருக்கலாம் என்று எனக்குத் தோன்றுகிறது" என்று வேடிக்கையாகக் கூறினுர்கள். புலவர் "நன்று! நன்று" என்று சொல்லிக் கொண்டே கலகலவென்று சிரித்தார். கந்தசாமியார் அமைதியான நகைப்பால் தமது வியப்பைப் புலப்படுத்தினுர்.

## காப்புக்குத் தங்கம்

இனி, மற்ருெரு சுவையார்ந்த நிகழ்ச்சியைக் கூறுவேன் : சென்ற நூற்ருண்டின் பிற்பகுதியில் சென்னை இராசதானிக் கல்லூரியில் ஆங்கிலக் கலைகளில் பல துறைகளில் வல்லவராகப் பெரும்புகழ்பெற்று விளங்கிய **பூண்டி அரங்கநாத முதலியார்** அவர்களைப் பற்றி அறியாதார் யார்? மகா வித்துவான் இராகவையங்காரவர்கள் தமது இளம் பருவத்தில் முதலியாரவர்களைக் கண்டு அளவளாவினர். அவ் விருவரும் தாம்தாம் சமயோசிதமாகப் பாடிய செய்யுட்களை ஒருவருக்கொருவர் சொல்லிச் சல்லாபம் செய்து வந்தபோது, முதலியாரவர்கள் தாம் இயற்றிய கச்சிக் கலம்பகத்தின் காப்புச் செய்யுளாகிய,

"தங்கச் சிலையேடுந் தந்தவெழுத் தாணியுங்கொள்
துங்கக் கரிமுகத்துத் தூயவனென்—சங்கையொழித்து
ஏடெழுத் தாணியெடுத் தறியேன் இந்நூலைப்
பாடவளிப் பான் நற்பதம்"

என்னும் செய்யுளை இயம்ப, ஐயங்காரவர்கள் அதன் நயத்தைப் பாராட்டலாயினர். அப்பொழுது முதலியார், "நூற்கு யான் அமைத்த மங்கலச் சொல் பொருத்தமானதா?" என்று உசாவ, உடனே ஐயங்காரவர்கள் "காப்புக்குத் தங்கம் அழகு தருவதும், இன்றியமையாததும் ஆகுமல்லவா?" என்ருர். இந்த வார்த்தைகளைக் கேட்டதும் முதலியாரவர்கள் வியந்து மலர்ந்த

முகத்துடன், "இந்த வார்த்தைகளை யான் ஒருபோதும் மறவேன்" என்று சொல்லிக் கொண்டாடினாராம். ஐயங்காரவர்கள் புலமைத் திறத்தில் ஈடுபட்ட முதலியாரவர்கள் பின்னொரு சமயத்தில் சேதுபதிக்கு எழுதிய கடிதமொன்றே ஐயங்காரவர்களது பிற்கால வாழ்வைப் பெரிதும் உயர்த்தியது.

### அருஞ்சொற்பொருள்

அபவாதம் - பழி, கரம் - கை, சிரம்பற்றி - தலையில் வைத்துக் கொண்டு, மேற்கோள் - எடுத்துக்காட்டு, அருளிச்செயல் - பாசுரங்கள், செய்யுட்கள், பொதிந்த - அடங்கிய, வினயம் - வணக்கம், ஈடு - இணை, அறுகு - அறுகம்புல், பத்திர புட்பம் - இலைகள், மலர்கள், பரம - மேலான, தலமகிமை - தலப்பெருமை, புனிதம் - தூய, திருப்பதி - தலம், அபசாரப்படாமல் - குற்றத்திற்காளாகாமல், இசைத்த - பாடிய, சல்லாபம் - உரையாடல், காப்புச் செய்யுள் - கடவுள் வாழ்த்துச் செய்யுள், தங்கச்சிலை - மேருமலை, துங்க - தூய, சங்கை - ஐயம், நற்பதம் - நல்ல நிலைமையை, நல்ல சொற்களை, அளிப்பான் - அருள் செய்வான், உசாவ - கேட்க.

### வினாக்கள்

1. கரந்தைத் தமிழ்ச்சங்க ஆண்டுவிழாவில் மகாவித்துவான் இராகவையங்காரவர்கள் முன்னுரையாகப் பேசிய பேச்சின் நலத்தைப் புலப்படுத்துக.

2. கந்தசாமியாரவர்களும், சர்க்கரைப் புலவர்களும் ஐயங்காரவர்கள் இல்லத்திற்கு அடிக்கடி வரக் காரணம் யாது?

3. பிள்ளையார் பூசனையைப் பற்றி ஐயங்காரவர்கள் கருத்து யாது?

4. திருநாவுக்கரசர் திருவையாற்றில் தம் மடத்தைக் கட்டாதிருந்தமைக்கு ஐயங்காரவர்கள் நயமாகக் கூறிய காரணம் யாது?

5. பூண்டி அரங்கநாத முதலியார் யார்? அவர் பாடிய நூல் எது?

6. 'காப்புக்குத் தங்கம் அழகு தருவதும், இன்றியமையாததும் ஆகுமல்லவா?'—இதில் அமைந்துள்ள பொருள் நயம் யாது? விளக்குக.

7. கச்சிக்கலம்பகத்தின் காப்புச் செய்யுளில் அமைந்துள்ள கரிமுகத்தோனைப் பற்றிய கதைக் குறிப்பை வரைக.

### இலக்கணப் பயிற்சி

1. அவர், அமைதி, இச் சங்கம், அத் தமிழ், இவர், அங்ஙனம் இப் பாடல், இது, அன்பு - இச் சொற்களில் சுட்டெழுத்து வந்துள்ள சொற்கள் யாவை? அச் சொற்களில் உள்ள சுட்டெழுத்து அகச் சுட்டா, அல்லது புறச் சுட்டா என்பதைத் தெரிவிக்க.

2. பூசை செய்வதுண்டா? அறியாதார் யார்?—இவற்றில் உள்ள வினாவெழுத்தை எடுத்துக் கூறு. வினாவெழுத்து என்பது யாது? அது எத்தனை வகைப்படும்? அவை எவை?

# 10. இயற்கைப் பாட்டு

[திரு. டாக்டர் மு. வரதராசனுர் அவர்கள்,
எம். ஏ., எம். ஓ. எல்., பி. எச். டி.]

1. புலவர்கள் இயற்கைக் காட்சிகளேக் கண்டு கண்டு களிக்கும் இயல்புடையவர்கள். இயற்கையின் திருக்கோயிலாக 'மண்ணெழுந்து விண் காட்டும்' மலேகள் அவர்கள் உள்ளங் கவரும் ஆற்றல் உடையவை. ஆதலால், கபிலர் போன்ற பெரும் புலவர்கள் குறிஞ்சி நிலத்தில் பெரிதும் வாழ்ந்து, குறிஞ்சி வளத்தை மிகுதியாய்ப் பாடியுள்ளனர்.

2. புலவர் பெருமக்கள் நேரில் கண்டறிந்த காட்சிகளே உள்ளத்தே பதித்தும் பாடுதலும் உண்டு; ஒரு நிகழ்ச்சியின் முடிவாகக் கண்ட சிறுபகுதியைக் கொண்டு நிகழ்ச்சி முழுமையும் உய்த்துணர்ந்து பாடுதலும் உண்டு. அவ்வாறு **பெருங்குன்றூர் கிழார்** பாடிய பாட்டொன்று **அகநானூற்றில்** உள்ளது.

3. விடியற் காலேயில் ஒரு புற்று உள்ள வழியாகப் புலவர் சென்ருர். அவ்வழி இதற்கு முன் சிலமுறை சென்று பழகியதுதான். ஆனுலும், அன்று காலேயில் புலவர் அந்தப் புற்று வேறுபட்டிருத்தலே உணர்ந்தார்; சிறிது சிதைவு கண்டார்; மண் குறைபட்டுத் தோன்றுவதை அறிந்தார்; அதன் அருகே ஒரு பாம்பு உடல் கிழிந்து செத்துக் கிடப்பதைக் கண்டார். மலேயில் பழகினவர்களுக்கு இவற்றின் காரண மெல்லாம் தடையின்றி விளங்கும். ஆதலால், புலவர் எளிதில் காரணம் உணர்ந்தார்; இரவு நடந்த காட்சியைக் கற்பனையுலகில் காண முயன்ருர். காட்சி அமைந்தது:

4. அப்புற்றினுள் ஈசல்கள் வளர்ந்திருந்தன. அவற்றின் புற்ருஞ் சோறும் உடன் கிடைத்தது. புற்றின் உட்புறத்தை ஆராய்ந்தவர் யார்? அங்கே சிதல்கள் அமைந்த அமைப்பு எத்தகையதோ? அவற்றின் அரிய

முயற்சியால் எழுந்த கோபுரம் போன்ற செந்நிறப் புற்றைக் கண்ட பாம்பு அதனிடம் ஒதுங்க வந்தது; ஒதுங்குமிடமாகப் பெற்ற புற்றையே வாழ்மனையாகக் கொள்ளத் தொடங்கிற்று. சிதல்களின் பெருமுயற்சி யான புற்று, ஒரு முயற்சியும் இல்லாத பாம்பிற்கு உயர்ந்த வீடாயிற்று. ஆனல் அது கொடுமை அல்லவா? முயற்சி ஒருவரது! பயன் மற்றொருவரது! உயர்திணை யாகிய மக்களிடத்துத்தான் இத்தகைய கொடுமை இயல்பாகக் காணப்படுகிறது; பொருளால் வலியாரும் அறிவால் வலியாருமாக இருதிறத்தாரும் கூடி இயற் றும் சட்டங்கள் முயற்சிக்கும் பயனுக்கும் தொடர்பு நேராதவாறு காக்கின்றன. ஆனல், அஃறிணை உயிர்க ளிடத்தும் இத்தகைய அநாகரிக முறை காணப்படல் வேண்டுமோ? வலியார் வலிமையால் மெலியார் அடங்கு தல் போல, பாம்பின் வீற்றிருக்கையால் புற்றினுள் கிடந்த உயிர்கள் எப்பாடு பட்டனவோ? மெலியார் என்று இரங்கத்தக்காரிடையேதான் புரட்சி செய்யும் பெரியோர் தோன்றுகின்றனர். இத்தகைய நிகழ்ச்சி உலகில் அஃறிணை உயிர்களிடத்தும் நிகழ்கின்றது. புற்றின் புரட்சி ஒருநாள் நள்ளிரவில் நிகழ்ந்தது. புரட்சி நடத்தியவர் கரடியார். கரடியின் பெரிய கைகளில் அமைந்த கூரிய நகங்களே புரட்சிப் படைகள். புற்றி னுள்ளே பாம்பு இருந்தது. அதற்கஞ்சிய உயிர்கள் இன்னும் உட்பகுதியில் அடங்கிக் கிடந்தன. கரடி வந்தது; படை கொண்டு வந்தது. அதற்கு விருப்பமான உணவாகிய புற்றுஞ்சோறு புற்றினுள் கிடைக்கும் என்று தான் கரடி நாடி வந்தது. அது நாடியது ஒன்று; அதற் காகச் செய்த செயலே புரட்சியாக முடிந்தது; கூரிய நகங்களையுடைய கையைப் புற்றினுள் விட்டது; அங்கே கிடைத்தவற்றை நகங்களால் கிளறியது. இருந்த பாம்பு நகங்களுக்கிடையே அகப்பட்டது. பாம்பின் மெல்லிய உடல் கூரிய வலிய நகங்களை எதிர்த்து என்ன செய்ய முடியும்? பாம்பு சிதைந்து செத்தது. நகங்கள் பாய்ந்த இடங்களில் குருதி வடிந்து கறைபடிய, தன் கையோடு

பாம்பின் உடலும் வெளிவர, அதனை உதறிவிட்டுத் தன் உணவைப் பெற்றுத் தின்று சென்று விட்டது கரடி.

5. கிளறிக் கிடந்த புற்றும், செத்துக் கிடந்த பாம்பும் விடியற் காலையில் புலவர் கண்ணில் பட்டன. புலவர் எண்ணினார்; அறிந்தார்; இரவு நடந்ததை அவ் வாறே கற்பனை யுலகில் காணவைத்தார்.

6. மற்றொரு நாள் அண்மையிலுள்ள மலைமீதேறிச் செல்லும்போது புலவர் வேறு சில கண்டார். மலையடுக் கத்தில் பலாமரங்கள் நெருங்கி வளர்ந்திருந்தன; மூங் கில்கள் ஓங்கி வளர்ந்திருந்தன; காற்றால் ஒன்றோ டொன்று தாக்கி ஒலித்தன. புலவர் வழி யெல்லாம் இரத்தக் கறை படிந்திருத்தலைக் கண்டார்; ஆங்காங்குச் சில தசைத் துண்டங்களுடன் கூடிய எலும்புகளும் கண் டார்; சிதைந்த தலையும் கண்டார்; அதனை உற்று நோக்கிக் காட்டுப் பன்றியின் தலையென்று அறிந்தார்; முந்திய இரவு புலி ஒன்று பன்றியைக் கொன்று பலா மரச் செறிவின் வழியே இழுத்துச் சென்றிருக்க வேண்டும் எனத் தெளிந்தார்.

7. அந்தக் காட்சியை மறவாதவராய்ப் புலவர் அப்பால் சென்றார்; அங்கே வாழை மரங்களும், சுர புன்னை மரங்களும் செழித்து வளர்ந்திருந்த காட்சியைக் கண்டு மகிழ்ந்தார். அழகிய காட்சிகளைக் கலைஞர் மறப் பதும் உண்டோ?

8. அழகு மிக்க அந்தக் காட்சிகளை நினைந்து நினைந்து இன்புற்றவராய்ப் புலவர் மலைமீது ஏறிச் சென்றார்; உச்சியை நோக்கி மேற்சென்றார்; அங்கே ஒரு குகையின் அருகே பரப்பினாற்போற் கிடந்த பாறை யின்மேல் இருந்தார்; சுற்றிலும் உள்ள காட்சிகளையும், வானத்தே தோன்றும் முகில்களையும், எல்லையற்றுப் பெருமை பெற்று விளங்கும் வெட்ட வெளியினையும், நோக்கி நோக்கி அமைதிக் கடலுள் ஆழ்ந்தார். திடீரென ஓர் ஓசை கேட்டது. 'தட ததத் தயம் தம்' என்ற எதிரொலி அவருடைய அமைதியைக் கலைத்தது.

9. ஓசை கீழே இருந்து வருதலை உணர்ந்து புலவர் கீழ்நோக்கிப் பார்த்தார். அவர் கண்ணிற்கு ஒன்றும் புலப்படவில்லை; மலைக் காட்சி போதும் என்று எண்ணி இறங்கத் தொடங்கினர்; வரும்போது சிறிது தொலைவில் களிறும் பிடியுமாக இரண்டு யானைகள் செருக்குடன் செல்வதைக் கண்ணுற்றார்; அவை சென்ற பிறகு தொடர்ந்து இறங்கிச் சென்றார்; செல்லும்போது ஓர் எண்ணம் எழுந்தது. அந்த உச்சியிற்கேட்ட எதிரொலிக்குக் காரணமான ஓசை இந்த யானைகளின் செயலால் எழுந்ததோ என்று எண்ணினர்; எண்ணிக்கொண்டே புன்னை மரங்களும் வாழை மரங்களும் செறிந்த சாரலில் வந்துற்றார்; ஏறும்போது தம் உள்ளத்தைக் கவர்ந்த மரச் செறிவை இறங்கும்போது உற்றுநோக்க விழைந்தார்; மரச் செறிவினிடையே சிதைவு கண்டார்; சில வேறுபாடுகளும் கண்டார்; நன்றாக அமைந்திருந்த நிலம் புழுதியாய்க் கொண்டிருத்தலைக் கண்டார்; அங்கே யானைகளின் அடிச்சுவட்டையும் நோக்கினர்; அந்த யானைகளே இந்த மரங்களை ஒடித்துப்போட்டிருக்க வேண்டும் என்று கருதினர்; மரச் செறிவினிடையே புகுந்தார்; அங்கே உயர்ந்தோங்கிய தேக்கு மரங்களும் சந்தன மரங்களும் குறிஞ்சி மரங்களும் கிளைகிளையாய் ஒடிந்து சாய்ந்து இருக்கக் கண்டார்; அருகில் உள்ள ஒரு பள்ளத்தில் மண்சரிந்து வீழ்ந்திருப்பதையும், அப் பள்ளத்தினுள்ளே மரக் கிளைகள் பல அடுக்கிக் கிடப்பதையும் கண்டார்; கண்டதும் அங்கே திகைத்து நின்றார்; மரங்களை ஒடித்து இப் பள்ளத்தில் இட்ட காரணம் என்னவோ என்று ஆராய்ந்தார்; பள்ளத்துச் சரிவில் களிற்றின் பெரிய அடிச் சுவடுகளைக் கண்டு ஒருவாறு தெளிந்தார்.

10. "வாழை மரங்களின் வழியாக வரக்கண்ட அந்தக் களிறு இச் சரிவில் அகப்பட்டுப் பள்ளத்தே வீழ்ந்தது; மேல் வரமுடியாமல் வருந்தியது; உடன் வந்த பிடி அதற்காக வருந்தியது; பெருமரங்களின் கிளைகளையெல்லாம் ஒடித்துப் பள்ளத்தினுள்ளே இட்டு

அடுக்கியது. அடுக்கிய மரத்துண்டுகளையே படியாகக் கொண்டு கால் வைத்து வைத்து மெல்லமெல்லக் களிறு மேலே ஏறிவிட்டது; பிடி மகிழ்ந்தது. இவ்வாறு வெற்றி பெற்றதே அவற்றின் செருக்கிற்குக் காரணம் போலும். இம் மரங்களை ஒடித்த ஓசையே உச்சியில் எதிரொலித்தது. 'தட ததத் தயம் தம்' என்ற எதிரொலிக்குக் காரணம் இதுவே. ஆ! எங்கிருந்து எழுந்த ஓசை எங்கே எதிரொலித்தது! யானைகளின் ஆற்றலே ஆற்றல்! இடுக்கண் உற்றபோது உதவும் அவற்றின் அறிவே அறிவு! அவற்றின் காதல் வாழ்வு எத்தகையது!'' என்று இவ்வாறு புலவர் வியந்தார்; அந்த எதிரொலி அவர் செவியினுள்ளே விடாது ஒலிக்கக் கேட்டார்; கேட்கும் போதெல்லாம் இந் நிகழ்ச்சியைக் கற்பனையாக அமைத்துக்கொண்டார்.

11. இவ்வளவும் இயற்கைப் பொருள்கள்; இயற்கை நிகழ்ச்சிகள். சுற்றிலும் உள்ள மலை முதலிய நிலங்களை யும், அவற்றில் வாழும் உயிர்களையும் பாடுதல் நல்லதே. அஃது இயற்கைப் பாட்டு எனப்படும்.

### அருஞ்சொற்பொருள்

கபிலர் - ஏறத்தாழ இற்றைக்கு 1800 ஆண்டுகட்குமுன் வாழ்ந்த புலவர், குறிஞ்சி - மலையும் மலை சார்ந்த இடமும், உய்த்துணர்ந்து - ஊகித்தறிந்து, அகநானூறு - இல்லற வாழ்க்கையைப் பற்றிய 400 பாக்களைக்கொண்ட பழைய நூல்; 1800 ஆண்டுகட்கு முற்பட்டது சிதல் - கறையான், முயற்சி - உழைப்பு, பயன் - (உழைப்புக்கேற்ற) வருவாய், அண்மை - பக்கம், சேய்மை - தூரம், செறிவு - நெருங்கி யிருத்தல், களிறு - ஆண் யானை, பிடி - பெண் யானை, இடுக்கண் - துன்பம்.

### வினாக்கள்

1. புலவர்கள் எவ்வெவ்வாறு பாடுவது வழக்கம்?
2. புலவர் புற்றினருகே எவற்றைக் கண்டார்?
3. "முயற்சி ஒருவரது, பயன் மற்றொருவரது"—இடம் சுட்டி விளக்குக.
4. கரடியார் நள்ளிரவில் செய்த புரட்சி யாது?
5. புலவர் மலைமீதேறும் பொழுது கண்ட காட்சி யாது?

6. மலையுச்சியில் புலவரது அமைதியைக் கலைத்தது எது?

7. மலையுச்சியிலிருந்து இறங்கி வருகையில் புலவர் கண்ட காட்சி யாது? அதுகொண்டு அவர் உய்த்துணர்ந்தது என்ன?

8. 'இயற்கைப் பாட்டு' என்பது யாது?

### இலக்கணப் பயிற்சி

1. i. 'மலையில் பழகினவர்களுக்கு... தடையின்றி விளங்கும்.'

ii. புற்றின் உட்புறத்தை ஆராய்ந்தவர் யார்?—இங்குத் தடித்த எழுத்துள்ள சொற்கள் வினையாலணையும் பெயர்கள்.

வினையாலணையும் பெயர் என்பது யாது என்று விளக்கிச், சில எடுத்துக் காட்டுகள் இப் பாடத்திலிருந்து தருக.

2. கீழே தடித்த எழுத்திலுள்ள சொற்களுக்கு இலக்கணக் குறிப்புத் தருக.

செத்துக் கிடப்பதைக் கண்டார், காணமுயன்றார், காட்சி அமைந்தது, புரட்சி நடத்தியவர் கரடியார், அது கொடுமை அல்லவா, அரிய முயற்சி.

# 11. குடும்பக் கலை

[திருமதி, டி. கமலா, பி. ஓ. எல்.]

குடும்பக் கலையாவது ஒரு குடும்பத்தை நடாத்தும் முறைமையாம். ஆய கலைகள் அறுபத்து நான்கினில் ஒன்று அடிசில் கலை. இவ் வடிசில் கலை குடும்பக் கலையின் ஒரு பகுதியே. குடும்பக் கலை என்பது கணவனுடன் வாழ்க்கை நடாத்துவதோடோ, அடிசில் அமைப்ப தோடோ நின்றுவிடவில்லை. உற்றார் உறவினர்பால் அன்புகாட்டி, சூழ்நிலைக் கேற்பத் தன்னை அமைத்துக் கொண்டு, குழந்தைகளைக் கலை பயிலச் செய்து, குடும்பத்தில் ஏற்படும் சிக்கல்களை ஏற்று அவற்றைத் தீர்க்கும் வகை தேடி, வருவாய்க்குத் தக்க செலவுசெய்து சேமித்து வைக்கும் சீரிய முறைகளை நமக்கு உணர்த்தும் கலையே குடும்பக் கலையாம்.

இக் குடும்பக்கலை நாடுதோறும் காலந்தொறும் மாறுபடும். நம் நாட்டுக்குத் தற்போது தேவையான குடும்பக் கலையைச் சற்றுக் காண்போம்.

குடும்பப் பொறுப்பை ஏற்றுக்கொண்ட பெண் தன் கணவன் உள்ளக் குறிப்பை அறிந்து நடந்துகொண்டால் இல்வாழ்க்கை இனிது நடைபெறும். 'நீரளவே யாகுமாம் நீராம்பல்' என்பதுபோல் மனைவியின் தன்மையில்தான் குடும்பப் பெருமையே நிற்கின்றது. குடும்ப நிர்வாகம் பெரும் பொறுப்பு வாய்ந்தது. 'குடித்தனமோ துரைத் தனமோ' என்ற பழமொழிகூட இதனை விளக்கத்தான் வந்தது. அரசியல் நிர்வாகத்திற்கு எத்துணைத் திறமை வேண்டுமோ, அத்துணைத் திறமை குடும்ப நிர்வாகத் திற்கும் இன்றியமையாதது. இப்பெரும் பொறுப்பு இல்வாழ்க்கைக்குக் காரணமாய மனைவி கையில்தானிருக் கிறது. கணவன் ஆற்றும் பணிகளிலெல்லாம் இவள் தன்னாலியன்றவரை கைகொடுத்து உதவலாம். பெண்ணும் படித்தவளாக இருந்தால் தன் அறிவு நுட்பத்தைக் கணவனுடன் வீண் வாதம் செய்வதற்கு மட்டுமே பயன்

படுத்திஞல் இல்வாழ்க்கை சிதைந்து போகும். தன் அறிவு நுட்பத்தால் அவன் தவறு செய்யுழி இன்சொல் கூறி, அவன் திருந்துமாறு எடுத்துரைக்கும் அமைச்சனே நல்ல வாழ்க்கைத் துணையாம். ஆசிரியப் பணி, வைத்தியப் பணி போன்ற தொழில்களில் ஈடுபட்டிருக்கும் பெண்கள் குடும்பத்தை அறவே மறந்துவிடாது, இரண்டையும் ஒருசேரச் செம்மையாகச் செய்யும் திறம்படைத்தவர்களாக அமைந்தால் குடும்பங்கள் வளம்பெறுவதோடு நாடும் நலமுறும்.

உற்ருர் உறவினர்களிடமும் பெண்கள் அவர்களுக்கேற்ப நடந்துகொள்வதும் ஒரு பெருங்கலைதான். "என் மருமகள் வீட்டிற்குத் திருமகள் போன்றவள். அவளால் தான் எங்கள் குடும்பம் பெருமை அடைகின்றது'' என்று மாமியார் சொல்லத்தக்க முறையில் கிராமத்துப் பெண்களின் செயல் அமைந்தால் குடும்பத்தில் சிக்கலுக்கே இடமிராது. "படித்த பெண், பணக்கார வீட்டுப் பெண் என்பதஞல் பெருமை ஏற்பட்டுவிடாது. "கணவன், மாமியார் எல்லோரிடமும் அன்பாய் நடந்து கொள்கிருள். தான்கற்ற கல்வித் துணைகொண்டு குடும்பத்தைப் பல்லாற்ருனும் செம்மையுற நிர்வகிக்கின்ருள்,'' என்று உற்ருர், உறவினர், ஊரார் பாராட்டிப் புகழும்படி படித்த பெண்ணின் பண்பு மாண்புற்றிருந்தால், படித்த பெண் எங்கள் குடும்பத்திற்கு வேண்டாம் என்ற பேச்சே மறைந்துபோகு மல்லவா !

இப் பெண்கள் சூழ்நிலைக்குத் தக்கவாறு தங்களை எவ்வாறு அமைத்துக்கொள்ள வேண்டுமென்பதை இனிக் காண்போம். நகர் வாழ் மக்களில் உயர்தர வகுப்பார், கீழ்த்தர வகுப்பார், நடுத்தர வகுப்பார் என்ற முத்திறத்தினர் உளர். இவர்களில் உயர்தர வகுப்பார் விரிந்த மனப்பான்மையாளர் மன்றம் (Cosmopolitan club) போன்ற இடங்கட்குச் செல்கின்றனர். ஆண்களோடு சரிசமமாகப் பழகுவதாக நினைத்துச் சீட்டாட்டம், பூப்பந்தாட்டாம் போன்ற விளையாட்டுகளிலெல்லாம் பங்கெடுத்துக் கொள்கின்றனர். சூழ்நிலைக் கேற்பத் தங்களை

அமைத்துக்கொள்வதாக நினைத்து, இத்தகைய உரிமை களை அளவுக்குமீறிக் கையாளுவதால் தங்கள் உயிரனைய கற்புநெறியைக்கூட மறந்து விடுகின்றனர், இச் செல்வப் பெண்மணிகள். இந்த உரிமைகள் இத்தகைய இழி நிலைக் குக் கொண்டு செல்லுமானால் அவை வேண்டற்பாலன வல்ல.

இற்றைய நாளில் கீழ்த்தர வகுப்பாரைப் படக்காட்சி மோகம் நன்கு பிடித்து ஆட்டிவைக்கிறது. வயிற்றுச் சோற்றுக்கே வழியில்லாவிட்டாலும் நாள்தோறும் இவர் கள் படக்காட்சிக்குச் செல்வதில் தவறுவதில்லை. திரைப் பட நடிகைபோன்று உடை உடுக்கத் தொடங்கி விடுகின் றனர். இவர்கள் உடையணிந்திருக்கும் தோற்றமே கண்டார்க்குக் கெட்ட எண்ணத்தை விளைவித்து விடு கின்றது. ஆகவே, இவர்களும் தங்கள் செம்மை நெறியி னின்றும் வழுவத் தாங்களே வாய்ப்புத் தேடிக்கொள்கின் றனர். பகலெல்லாம் கடும் வெய்யிலில் நெற்றிவியர்வை நிலத்தில் சிந்த அரும்பாடுபட்டுத் தேடிய பணத்தை இரவில் படக்காட்சிக்குச் சென்று அழிப்பதென்றால் அறிவீனத்தை என்னென்பது! வறுமைப் பிணியில் வாடும் இவர்கட்குப் படக்காட்சி எற்றிற்கு? அங்குச் சென்று பொழுதுபோக்கும் நேரத்தில் பாய், தடுக்கு, கூடை பின்னுதல், கோழி வளர்த்தல், தேனீ வளர்த்தல், ஆடு மாடு வளர்த்தல், நூல் நூற்றல் போன்ற குடிசைத் தொழில்களில் ஈடுபட்டால் வருவாய்க்கும் வழியுண்டு; பொழுது போக்காகவும் இருக்கும். இங்ஙனம் பெண்கள் குடும்பக் குறைகளை நிறை செய்யும் நினைவு கொண்டால் குடும்பக் கலை அதில் நிறைந்து தோன்றும்.

நடுத்தர வகுப்பார் சூழ்நிலைக்கேற்பத் தங்களை அமைத்துக் கொண்டு வாழ்வு நடாத்துவதில் நன்கு விழிப்பாயிருக்க வேண்டும். இவர்களில் உயர்தர வகுப் பாரும் தாழ்ந்த வகுப்பாரும் உண்டு. உயர்தர வகுப்பார் முற்கூறிய உயர்தர வகுப்பார் போன்று நடக்க முயன் றால்தான் கேடு விளையும். அதேபோல் கீழ்த்தர வகுப் பாரும் முற்கூறிய கீழ்த்தர வகுப்பாரைப் பின்பற்றினால்

விளைவு நன்ருயிராது. உயர்ந்தும் போகாது தாழ்ந்தும் வராது நடுநிலையில் நின்ருல் இவர்கள் வாழ்வு செம்மை யுறும். நடுத்தர வகுப்பார் மாதர் மன்றம் போன்ற இடங்களுக்குச் செல்வதால் அறிவு வளர்ச்சியோடு அனுபவ வளர்ச்சியும் இவர்கட்கும் கிடைக்கின்றன. பல பெண்களோடு பழகும் வாய்ப்புக் கிடைப்பதால் உலக அனுபவம் இவர்கட்குத் தெரிய வருகின்றது. வீண் வம்புப் பேச்சுக்கு இடங்கொடாது இந்த வாய்ப்பை நன் முறையில் பயன்படுத்தும் எண்ணம் இவர்கட்கு இன்றி யமையாத தொன்று. இவர்கள் உரிமைகளை அளவோடு கையாளுவதால் மேற்கூறிய இருதரத்தார்க்கும் விளையும் கேடு இவர்களுக்கில்லை. பெண்கள் எல்லோரும் நடுத்தர வகுப்பாரின் வாழ்க்கையைக் கடைப்பிடித்தால் அவர்கள் குடும்பம் நின்று நிலவும்.

குடும்பத்தில் வருவாய்க் கேற்பச் செலவு செய்து வாழ்வைச் செப்பமுற அமைத்தலும் இப்பெண்களைச் சார்ந்ததே. ஆனமுதலில் அதிகம் செலவு செய்யாமல் வருவாய்க் கேற்பச் செலவு செய்வதில் கருத்துடைய வளாய் இருக்க வேண்டியவள் இப் பெண்ணே. ஏழ்மை நிலை குடும்பத்தில் நிலவினுல் அதைப் பிறர் அறியா வண்ணம் தாங்களும் எல்லோரையும் போலவே நன்கு உண்டு வாழ்வதாகக் காட்டுவதிலும் இவள் திறமை அமைதல் நன்று. குப்பைக் கீரையை உப்பின்றி வேக வைத்துத் தன் குழந்தைகட்கும் கணவனுக்கும் கொடுக் கிருள், வறுமைப் பிணியால் அல்லலுற்ற ஓர் பெண். இதைப் பிறர் காணு வகை மறைக்க வாயில் கதவைத் தாளிடுகின்ருள் என்ருல் அவள் திறமையை என்னென் பது ! இது போன்ற திறமையும் வேண்டற் பாலதே.

விருந்தோம்பலில் அக்கால முறைக்கும் இக்கால முறைக்கும் வேறுபாடுண்டு. இக்காலத்தில் தகுதிக் கேற் பச் சிற்சில முறைகளை இச்சமுதாயத்தில் கையாள வேண்டியிருக்கிறது. தகுதிக் கேற்ப நாம் மிகுந்த செல வில் விருந்தளிக்கத்தான் நேரிடும். இதற்கெல்லாம் முன் கூட்டியே ஒவ்வொரு செலவிற்கும் வரவிற் கேற்பத்

திட்டம் போட்டு வரையறுத்துச் செலவு செய்தால் ஆன முதலில் அதிகம் செலவாகி மானமழிந்து மதிகெட்டுப் போகும் நிலே வரவே வராது.

குழந்தைகளே வளர்ப்பதும் ஓர் கலேதான். நறு மணத்தால் மலர் பெருமை யடைவது போல, நல்ல குழந்தைகளால் குடும்பம் பெருமை யடைகிறது. குழந் தையே குடும்ப விளக்கு. இக் குழந்தைகளே நல்வழிப் படுத்தும் பொறுப்பும் பெண்ணிடமே பொதிந்துள்ளது. குழந்தைகள் உள்ளத்தில் எதுவும் எளிதில் படிந்துவிடும். உளநூல் தெரிந்து அக்குழந்தைகளின் மனத்தன்மைக் கேற்ப கலேகள் பயில்வித்தல் இன்றியமையாதது. படித்த தாயாக இருந்தால்தானே தன் குழந்தைக்கு அடிப் படைக் கல்வி கற்றுக்கொடுக்கலாம் ? எந்தத் தீய எண்ண மும் குழந்தை மனத்தில் தோன்ருத வண்ணம் தாய் கவனித்துக் கொள்ளவேண்டும். அறிவுரை ஊட்டக்கூடிய சிறு கதைகள் கூறல், அறிவு வளர்ச்சியைத் தூண்டி விடும் விளேயாட்டுக்கள் சொல்லிக் கொடுத்தல் இவை போன்ற செயல்களில் குழந்தைகளே ஈடுபடச் செய்தால் அவர்கள் எதிர்காலத்தில் அறிவுச் சுடர்களாகத் திகழ் வார்கள் என்பதில் ஐயமில்லே.

தன் குழந்தை ‘ சான்ருேன் ’ என்று கேட்டு, ஈன்ற பொழுதைக் காட்டிலும் மகிழ்ச்சி அடையும் தாயல்லவா அவள்! குழந்தைகளின் அகமும் புறமும் தூய்மைப்படுத்த வேண்டியவள் இவளே. நாள்தோறும் உடம்பைத் தூய் மைப்படுத்தித் தூய உடை அணிவித்தால் நோய் அணு காது. நோய் வந்தபின் அல்லலுறுவதைவிட வருமுன் காப்பது சிறந்ததல்லவா ? தாயின் சொல்லிலும் செய லிலும்தான் குழந்தை வாழ்வே அமைந்துள்ளது. ஆகவே, விஞ்ஞான முறைப்படியும், உளநூல் கூறுபாடு அறிந் தும் குழந்தைகளே வளர்த்து அறிவுடைச் சான்ருேனக்கு தல் தன் தலேயாய கடன் என்பதை ஒவ்வொரு பெண் ணும் தெரிந்து கொண்டால் நாடே அறிவுச் சுடராகத் திகழும்.

வீட்டையும் அணிசெய்து கண்கவர் காட்சியுடன்

அமைத்தால் அதில் வாழும் எல்லோருடைய உள்ளத்திலும் இன்பம் பிறக்கும். காலேயில் வாசலில் கோலம் போடுவதிலிருந்து குத்துவிளக்கேற்றிக் குடும்பத்தை வாழவைக்கும் இப்பெண்கள் செயல் ஒவ்வொன்றிலும் கலே காட்சியளித்துத் திகழ்கின்றது. நாமிருக்கும் இடத்தைத் தூய்மைப்படுத்துவதால் சுகாதார விதிப்படி நம் உடம்பு தூய்மையாவதோடு, அக்காட்சிகளேப் பார்க்கும் நம் உள்ளமும் தூய்மை யடைகிறது. பெண்களுக்கே உரியவையான மஞ்சள் குங்குமம் இரண்டும் மங்கலப் பொருள்களாக அமைவதோடு மருந்துப் பொருள்களாகவும் அமைகின்றன.

பழையன கழிதலும் புதியன புகுதலும் வேண்டுந்தான். ஆனல் புதியன புகுவதில் நன்மையில்லேயெனில் அது வேண்டியதில்லே. உதட்டிலும் கைவிரல்களிலும் சாயம் பூசிக்கொள்வதெல்லாம் இக்கால நாகரிகப் புதுமுறைகள். இவைகளால் யாதொரு பயனுமில்லே. இவற்றிற்குப் பதிலாக வெற்றிலேப் பாக்கு, மருதோன்றி முதலியவற்றைப் பயன்படுத்துவதால் உடல் நலம் பெற வாய்ப்புண்டு. இங்ஙனம் தானிருக்குமிடத்தையும் தன்னேயும் அணிசெய்து கொள்ளும்போது புதுமை மோகத்தில் மூழ்கிவிடாமல் தங்கள் தகுதிக்கும், வருவாய்க்கும் ஏற்ற முறையில் அமைத்துக் கொள்வதும் இவர்கட்கு வேண்டற்பாலதே. தங்களே அணிசெய்வதாக நினேத்து அலங்கோலப்படுத்தும் செயலிலும் போய்விடாது பார்த்துக் கோடல் நன்று.

இவ்வாறு சூழ்நிலேக்கேற்பத் தன்னே அமைத்துக் கொண்டு, குடும்பத்தில் எல்லோரிடமும் அன்பு காட்டி, இதுபோன்ற குடும்பக்கலே நுட்பம் எல்லாம் அறிந்து குடும்பத்தை நடாத்தும் பெண் ஒவ்வொரு இல்லிலும் அமைந்தால், “இல்லது என் இல்லவள் மாண்பானல்” என்ற வள்ளுவர் வாக்கும் மெய்யுறும்; எல்லாக் குடும்பங்களும் வளம் பெறும்.

### அருஞ்சொற்பொருள்

அடிசிற் கலை - சமையற் கலை, சேமித்து - சேர்த்து, சீரிய - சிறந்த, உள்ளக் குறிப்பு - மனக் கருத்து, பல்லாற்றானும் - பலவகையாலும், மோகம் - விருப்பம், வழுவ - தவற, மன்றம் - சபை, அகம் - உள்ளம், அல்லல் - துன்பம், அலங்கோலம் - சீர்கேடு, கோடல் - கொள்ளுதல், மருதோன்றி - ஒருவகைச் செடி.

### வினாக்கள்

1. குடும்பக் கலை என்பது யாது ?

2. 'நீரளவே யாகுமாம் நீராம்பல்', 'குடித்தனமோ துரைத் தனமோ'—இப் பழமொழிகள் விளக்குவன யாவை ?

3. இல்வாழ்க்கை எப்போது சிதைந்து போகும் ?

4. பெண்கள் எவ்வாறு இருந்தால் குடும்பம் வளம்பெறுவதோடு நாடும் நலம்பெறும் ?

5. "படித்த பெண் எங்கள் குடும்பத்திற்கு வேண்டாம்" என்ற பேச்சு எப்பொழுது மறையும் ?

6. உயர்தர வகுப்புப் பெண்களின் தற்கால நிலைமை யாது ?

7. கீழ்த்தர வகுப்புப் பெண்கள் இக் காலத்தில் எவ்வாறு நடந்து கொள்கின்றனர் ? அப் பெண்கள் குடும்பக் குறைகளை நிறை செய்யும் வழி யாது ?

8. நடுத்தர வகுப்புப் பெண்கள் எவ்வாறு நடத்துகொள்ள வேண்டும் ?

9. ஓர் ஏழைப் பெண்ணின் செயல் யாது ? அவளது செயலி லிருந்து பெண்கள் அறிந்துகொள்ள வேண்டுவது யாது ?

10. 'தாயின் சொல்லிலும் செயலிலும்தான் குழந்தை வாழ்வு அமைந்துள்ளது'—விளக்குக.

11. பெண்களின் தலையாய கடன் யாது ?

12. பெண்களின் செயல் கலைக் காட்சியாகத் திகழ்வதை விளக்குக.

13. இக் காலப் புது நாகரிக முறைகள் யாவை ?

14. 'பெண்ணும் சிக்கனமும்', 'பெண்ணும் குழந்தை வளர்ப்பும்'—இப் பொருள்கள் ஒவ்வொன்றைப் பற்றியும் இருபது இருபது வரிகளில் விளக்கி வரைக.

### இலக்கணப் பயிற்சி

i. 'இல்வாழ்க்கை சிதைந்து போகும்'—இதில் போகும் என்பது செய்யும் என்னும் வாய்பாட்டு வினைமுற்று.

ii. வறுமைப் பிணியில் வாடும் இவர்கட்கு - இத் தொடரில் வாடும் என்பது செய்யும் என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சம். செய்யும் என்னும் வாய்பாட்டு வினைமுற்று, செய்யும் என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சம் இவற்றை விளக்கி, வகைக்கு மும்மூன்று உதாரணங்கள் தருக.

## 12. நாட்டிற்கு நலம்புரிவோன் (சொற்போர்)

[திரு. வி. நடராசன், எம்.ஏ.]

[திருச்சிராப்பள்ளி சிறிய மலர் உயர்நிலைப்பள்ளிச் செந்தமிழ்க் கழகத்தின் சார்பில் 26–10–58 ஆம் நாளன்று மாலை புலவர்-சதாசிவம் அவர்கள் தலைமையில் "நாட்டிற்கு நலம் புரிவோன்" என்னும் தலைப்பில் நடந்த சொற்போரின் விளக்கம்.]

**தலைவர் முன்னுரை:** பள்ளித் தலைவர் அவர்களே! ஆசிரிய அன்பர்களே! பைந்தமிழ் மாணவர்களே! வணக்கம்!

என்னை மதித்து நம் செந்தமிழ்க் கழகக் கூட்டத்திற்குத் தலைமை தாங்குமாறு கூறிய உங்களனைவருக்கும் முதற் கண் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இன்றைய கூட்டத்திற்குத் தலைப்பு "நாட்டிற்கு நலம்புரிவோன்" என்பதாகும். இச்செய்தி குறித்து நான் எதுவும் இப்போது பேசப் போவதில்லை. சொற்போட்டியில் கலந்து கொள்ளும் மாணவர்கள் தங்கள் கருத்தைத் தெளிவாக, ஆனால் பிறர் மனம் புண்படா வகையில் அவைக்கேற்ற பண்புடன் பேசவேண்டும். என் கருத்துக்களென எவையேனும் இருப்பின் முடிவுரையில் கூறுகிறேன். முதலில் கந்தன் பேசுவார்.

**கந்தன்:** தலைவரவர்களே! வணக்கம்! நாட்டிற்கு நலம்புரிவோன் நல்லரசன் என்பதே என் கருத்து. பலராகப் பிரிந்து நிற்கும் மக்களிடையே ஒற்றுமையை ஓங்கச் செய்பவன் அரசன். எப்படிக் குடும்பத் தலைவனொருவன் ஒரு குடும்பத்தைப் பாதுகாக்கின்றானோ, அப்படியே ஓர் அரசன் நாட்டைப் பாதுகாக்கின்றான். முதலில் நாடு மாற்றானுக்கு அடிமையாகாதவாறு காப்பாற்றுகின்றான்; அடுத்து நாட்டினுள்ளும் கொலை, களவு முதலிய கொடிய செயல்கள் நிகழாதவாறு காக்

கின்றான். இவை மட்டுமா? மக்களிடையே நீதியை நிலை நாட்டி, அவர்களை நன்னெறியில் ஒழுகும்படி ஆக்குவோன் அரசனே. நாட்டின் வளம் வளர்ந்தோங்கச் செய்பவன் அரசனே. இனி, அவ்வளத்தைக் கைப்பற்றப் போட்டியும் பூசலும் மக்களிடையே தோன்றாதவாறு அமைதி காப்போனும் அரசனே. எனவேதான், நம் முன்னோர், நெல்லாலும் நீராலும் மட்டும் மக்கள் வாழ இயலாது; ஆனால் மன்னன் ஒருவன் முறை செய்து வாழ்வதாலேயே உலகம் இயங்க இயலுகின்றதென எண்ணினர். ஏன்? நல்லாட்சியில்லாத நாடொன்றை உங்கள் சிந்தனையிலாவது எண்ணிப் பாருங்களேன்! அங்கே அமைதி, ஒழுங்கு, நேர்மை, நாணயம் இவற்றைக் காண முடியுமென்று எண்ணுகின்றீர்கள்? அங்கே ஏற்றத் தாழ்வுடைய எவ்வகை மக்களும் வாழ இயலுமா? உண்மையில் வலியோர் வாழ்வர்; எளியோர் ஏங்குவர். அதன் பயனாய் அமைதி அழியும்; அறிவு வளர்ச்சி குன்றும். இறுதியில் அந்நாடே வீணர்களின் வேட்டைக் காடாகி, அங்கு வாழ்க்கை நடத்துவதே அரிதாகி விடும். எனவே, நினைவே நெஞ்சைக் கலக்கும் இந்நிலை விரும்பாத அனைவரும்—நல்லாட்சியின் நறுநிழலிலே வாழவிரும்பும் அனைவரும், நாட்டிற்கு நலம்புரிவோன், மன்னுயிரைத் தன்னுயிரெனப் போற்றி வாழும் மன்னவனே என்பதை மறுக்க மாட்டார்கள். ஆகவே, அரசனே நாட்டிற்கு நலம்புரிவோன் எனக் கூறி முடிக்கின்றேன். வணக்கம்.

தலைவர்: அன்பர்களே! அடுத்து வைத்தியநாதன் தன் வாதத்தைக் கூறுவார்.

வைத்தியநாதன்: தலைவரவர்களே! வணக்கம். நல்லதொரு மருத்துவனே நாட்டிற்கு நலம்புரிவோன் என நான் கருதுகின்றேன். நண்பர் கந்தனவர்கள், அரசனின் ஆற்றலையும், திறத்தையும், கடமையையும் முறையாகக் கூறினார். உண்மையே. ஆனால், எம் மன்னனும் ஆள்வதற்கு மக்கள் வாழும் நாடு தேவையல்லவா? மக்களில்லாத நாட்டிற்கு மன்னன் நான் எனக் கூறுவோனை மதிகெட்டோன் என்போம். இங்ஙனம் நாட்டிற்கின்றி

யமையா மக்களுக்கு வாழ்வளிப்போன் மருத்துவன் எனக் கூறுகின்றேன். மனிதனின் இன்ப வாழ்விற்குத் துணை செய்யும் நிலம், நீர், காற்று என்பனவெல்லாம், இன்று மனிதனுக்குத் துன்பத்தையே தரும் பகைப் பொருளாக மாறி வருகின்றன. இவற்றிலே கலந்துள்ள நச்சுப் பொருள்களும் நோய் அணுக்களும் எத்தனை? எத்தனை? இவற்றின் பயனாய் மனிதன் நிலத்திலே நடக்கவும், நீரை அருந்தவும், ஏன்—மூச்சுவிடக்கூட அஞ்சுகின்றான்! இனி, தொல்லைகள் பல தருகின்றன இவை; இவற்றின் எல்லையிலிருந்து விலகியே வாழ் வோம் எனக் கூற இயலுமா? எப்படியோ இவற் றிடையே வாழத்தான் செய்கிறோம். விளையும் நோய் களுக்காளாகின்றோம். அந் நேரத்திலெல்லாம் அரும் பாடுபட்டு நம்மைக் காப்பாற்றுவோர் யார்? மருத்துவர் அல்லவா? ஒரு நாடு முழுவதுமே இங்ஙனம் நோயால் நலிந்தால் அந்நாட்டிலே முன்னேற்றம் காண முடியுமா? கடந்த 1957ஆம் ஆண்டு நம் நாட்டில் பரவிய நச்சுக் காய்ச்சலை உங்கள் கவனத்திற்குக் கொண்டுவர விரும்பு கின்றேன். அக்காய்ச்சலின் கொடுமையால் நாடெங்கும் பள்ளிகளையும், பணிமனைகளையும் மூடி வைக்க வேண்டிய நிலை ஏற்பட்ட தல்லவா? அந்நிலை விரைவில் மாற அயராது உழைத்தோர் மருத்துவரல்லவா?

நோயுற்றோர்களும் கூட எதிர்பாராத விபத்துக் காளாகித் துன்புறுகின்றனர். நீரிலே குளிக்கச் சென் றவன் மூக்கிலே நீர் ஏறி மூச்சுத் திணரச் செய்கின்றது. அடுப்பிலே சமைக்கச் சென்றவள் உடுப்பிலே தீப்பற்றி உடலைப் புண்ணாக்குகின்றது. கட்டடம் கட்டச் சென்ற கலைஞன் மீதே கற்கள் சரிந்து வீழ்ந்து கை கால்களை நசுக்குகின்றன. இங்ஙனம் எண்ணித் தொலையா எதிர் பாரா நிகழ்ச்சிகளால் விளையும் தொல்லைகளிலிருந்து மனிதனைக் காப்பவர் யார்? மருத்துவர் தானே? உல கோரின் நலத்திற்காக ஓய்வின்றி உழைப்போரல்லவா அவர். அவரில்லை யெனில் நாடு நாடாக இருக்காது. நோய் நிறைந்த நாடாக இருக்கும். எனவே, தன்னலம்

கருதாத் தகைமையாளராகிய மருத்துவரே நாட்டிற்கு நலம்புரிவோர் எனக் கூறி முடிக்கின்றேன்.

**தலைவர் :** அன்பர்களே! அடுத்து அறிவானந்தம் பேசுவார்.

**அறிவானந்தம் :** தலைவரவர்களே! வணக்கம். நாட்டிற்கு நலம்புரிவோன் தொழிலாளியே என்பது என் பேச்சாக இருக்கும். மனித இனம் தோன்றிய நாள் தொட்டு இன்று வரை, உலகில் உருவாகிய பொருள்கள் எண்ணில் அடங்கா. பொருளுச்குச் சிந்தனையில் உருக் கொடுத்த பேரறிஞர் யாராயிருப்பனும், இன்று நடை முறையில் நமக்குப் பயன்படுமாறு படைத்துத் தந்தோர் யார்? உழைத்து உழைத்து உடல் தேயும் தொழிலாளி அல்லவா? காட்டைத் திருத்திக் கழனியாக்கி, மேட்டைத் திருத்தி நகராக்கி நாம் வாழ வழி செய்த உழைப் பெல்லாம் யாருடைய உழைப்பு? நாம் உண்ணும் உணவு, உடுக்கும் உடை இவையெல்லாம், தொழிலாளி நெற்றி வியர்வை நிலத்தில் சிந்தச் சிந்தச் செயலாற்றியதால் கிடைத்தன அல்லவா? நாம் வாழும் வீடு, படிக்கும் பள்ளி, நடக்கும் சாலை இவையெல்லாம் திறம்பட அமைத்து நமக்குதவித் தோள்கள் துவண்டவர் யார்? மலையை வீழ்த்தி, கல்லைப் பிளந்து, கனிகள் வெட்டிச் செல்வங்கள் சேர்த்துத் தந்து கைகள் சோர்ந்தது யார்? முத்தெடுக்கப் பவளமெடுக்க மூச்சு அடக்கியது யார்? இவரெல்லாம் தொழிலாளிகளல்லவா? தொழிலாளியின் கைகள் வேலை செய்யாது ஓய்ந்து விட்டால் உலகமே நடுங்கி ஒடுங்கிவிடும். இன்று பாரில் சிறந்தோங்கும் நாடு களின் செல்வமும் சிறப்பும் பாட்டாளிகளின் உழைப்பால் உண்டானவையே. எனவே, எழில் மிக வளர்த்து எந் நாட்டையும் நலம் பெறச் செய்பவன் எமது தொழி லாளியே எனக் கூறி அமைகின்றேன். வணக்கம்.

**தலைவர் :** இப்பொழுது கலைமணி பேசுவார்.

**கலைமணி :** தலைவரவர்களே! வணக்கம். எனக்கு முன் பேசிய அன்பர்கள் அனைவரும் நாட்டின் நலம் நல்ல அரசியலிலும், மக்களின் உடல்வளத்திலும், தொழில்

வளத்திலும் சேர்ந்திருப்பதாகக் கருதி, மன்னனையும், மருத்துவனையும், தொழிலாளியையும் துணைக்கழைத்தனர். நான் கூறுகின்றேன், கலைஞனே நாட்டின் நலத்தை வளர்ப்பவன் என்று. கலைக்குத் தனி ஆற்றலுண்டு. ஆம், அதற்குச் சோர்ந்த உள்ளங்களைச் சுண்டியெழச் செய்யும் ஆற்றலுண்டு! தாழ்ந்த உள்ளங்களை உயர்ந்தோங்கச் செய்யும் திறமையுண்டு! கலைஞரின் கருத்திற்கேற்ப எழுதும் ஓவியமாகவோ, செதுக்கும் சிலையாகவோ, இசைக்கும் பண்ணாகவோ, ஆடும் கூத்தாகவோ, கலை எவ்வுருவில் வந்தாலும், வளர்ந்தாலும் அதன் அடிப்படை நோக்கம் தாழ்ந்த செயல்களில் சிதறிக்கிடக்கும் மனிதனின் சிந்தையை ஒன்று சேர்த்து மிக உயர்ந்த நிலைக்கு அழைத்துச் செல்ல வேண்டும் என்பதே யாகும். ஒரு நாட்டு மக்களின் உள்ளத்திலே செல்வத்தை வளர்க்கும் வெறியும், போட்டியால் பகையை வளர்க்கும் வெறியும் வளர்ந்தால், அங்கே கலை வேரூன்றி வளர இயலாது. அதே நேரத்தில் கலை வளர்ந்தோங்கும் நாடுகளில் இவ்வெறிகள் குறைந்துள்ளன. முட்ட வரும் பசுவையும், கொல்ல வரும் யானையையும் யாழாலும் குழலாலும் இசை மீட்டி வெறியடக்கிய செயல்களை இலக்கியங்களிலே நாம் படிக்கின்றோமே. உலக நாடுகளிடையே ஒரு நாட்டின் மதிப்பு, வெறும் செல்வத்தாலும், போர்க்கருவிகளாலும் மட்டுமே மதிக்கப்படுவதில்லை. அந்நாட்டின் கலைத் திறமையே அதற்குத் தனிச் சிறப்பைத் தரும். நல்ல கலைக்கு என்றும் எங்கும் மதிப்புண்டு. எனவே, கலைஞனே நாட்டிற்கு நலம்புரிவோன் என நான் கூறி முடிக்கின்றேன்.

தலைவர்: இறுதியாக, இளங்கோ தம் கருத்துக்களைக் கூறுவார்.

இளங்கோ: தலைவரவர்களே! வணக்கம். நாட்டிற்கு நலம்புரியும் ஒருவர் ஒரே ஒருவர், நல்லாசிரியரே என்பது என் கருத்து. உண்மை மனிதன் யார்? உள்ளப் பண்பாட்டை நெஞ்சத்திலே உரமிட்டு வளர்க்கும் ஆற்றலுடையோர் யார்? ஆசிரியப் பெருமக்களல்லவா?

மேலை நாட்டறிஞர் ஒருவர் கூறினர் ‘மனிதன் பிறப்பதில்லை, ஆக்கப் படுகின்றுன்’ என்று. உண்மைதானே! பிறக்கும்போது மனிதனுக்கும் விலங்கிற்கும் வேறுபாடேது? அவனை மனிதனுக மாற்றும் ஆக்கத் தொழிலில் ஈடுபட்டோரே ஆசிரியர். அரசியல், தன் மானத்தையும் வீரத்தையும், நாட்டுப் பற்றையும் தவருன வழியில் பரப்பி நாட்டிற்குள்ளேயும், வெளியேயும் பகையையும் குழப்பத்தையும் விளைவிக்கின்றது. மக்களின் பிணிபோக்க வரும் மருத்துவன் செல்வத்திற்கு அடிமையாகி ஏழைகளை ஏங்கச் செய்கிருன். ஊருக்கு உழைக்கும் தொழிலாளியும், தன்னை நம்பியிருக்கும் மக்களை மறந்து தொழில் நிறுத்தம் செய்ய முற்படுகிருன். மக்களின் உள்ளத்தை உயர்நிலைக்கு அழைத்துச் செல்லக் கலையைப் பயன்படுத்தும் கலைஞர்களோ, கடமை மறந்து தங்களுக்குள்ளேயே போட்டியையும் பூசலையும் வளர்த்துக் கொள்கின்றனர். ஏன் இந்த அவலநிலை? மக்களின் உள்ளம் பண்படாமையும், விட்டுக் கொடுக்கும் மனப்பான்மை இல்லாமையும், தன்னலத்தின் பெருக்கமுமே இந்நிலைக்கு அடிப்படைக் காரணங்களாகும்.

மனித இனத்தை ஆட்டிவைக்கும் இத்தகைய அழிவு ஆற்றல்களிலிருந்து அமைதி அளிக்கும் அறநெறி காட்டுவோரே ஆசிரியப் பெருமக்கள். கண்ணற்ற மக்களுக்குக் கண் கொடுக்கும் எழுத்தை யறிவிக்கும் இறையாய், “யாதும் ஊரே யாவருங் கேளிர்” என்ற பண்பாட்டின் வித்தினை மக்களின் உள்ளத்திலே விதைக்கும் உயர்குடி மக்களாய், ஆசிரியப் பெருமக்கள் விளங்குகின்றனர். நல்லாசிரியரை மறந்த நாடு, வானத்தை மறந்த பயிர் போல், மணத்தை மறந்த மலர்போல், உயிரை மறந்த உடல்போல் பயனற்றுச் சிதைந்து அழியும். ஆண்டி, அரசன், தொழிலாளி, முதலாளி, நோயாளி, மருத்துவன், கலைஞன் ஆகிய அனைவருமே ஆசிரியர் அடிபணிந்து அறிவு பெருதவழி அமைதியான வாழ்க்கையை வாழ இயலாது. அதுமட்டமன்று. தம்மினும் தம் மாணவர் அறிவுடையோராதலைக் கண்டு உவக்கும் ஒருவரே ஆசிரியர்.

அவர், அறியாமைக் கடலைக் கடக்க உதவும் தோணி; இன்பக் கோட்டையை எட்டிப் பிடிக்க உதவும் ஏணி. உண்மையில் தோணியும், ஏணியும் இருந்த இடத்தி லேயே இருக்கும். ஆனால், அவற்றிலே ஏறிச் சென்றோர் பெறும் பயன்களோ எண்ணிறந்தன. எனவே, தமக்கென எத்தகைய புகழோ பெருமையோ விரும்பாது ஓய்தலின்றி உழைத்திடும் ஆசிரியர்களே நாட்டிற்கு நலம்புரிவோர் எனக் கூறி அமைகின்றேன். வணக்கம்.

தலைவர்: அன்பர்களே! இதுவரை ஐவர் நின்று "நாட்டிற்கு நலம் புரிவோர் யார்?" என நல்ல முறையில் ஆய்வு நடத்தினர். ஒவ்வொருவர் பேச்சிலும் இருந்த அழகையும், உண்மையையும், பிறரைத் தாக்காது தங்கள் கருத்தைத் தெளிவாகக் கூறும் திறத்தையும் கண்டு மகிழ்ந்தோம். இவ்வாறு சிறந்த முறையில் அவர்களைப் பேசப் பழக்கிய ஆசிரியப் பெருமக்களுக்கு என் நன்றி யைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அடுத்து, காலங்கருதியும், விரிவஞ்சியும் தலைப்பைக் குறித்து நான் எதுவும் பேசப்போவதில்லை. ஆனால் இறுதியில் பேசிய இளங்கோவின் கருத்தே என் கருத்து மாகும் எனக் கூறுகின்றேன். உங்கள் ஆசிரியர்கள் எளியோராய் இருக்கக்கூடும். ஆனால் 'உடையார் முன் இல்லார் போல்' ஆசிரியர் முன் அடிபணிந்து அறிவைப் பெற்றுக் கொள்ளுங்கள்.

இத்தகைய நல்ல கூட்டத்திற்கு என்னைத் தலைவராய் அமர்த்திய உங்களனைவருக்கும் மீண்டும் என் நன்றி யைத் தெரிவித்துக் கொள்கிறேன். வணக்கம்.

**அருஞ்சொற்பொருள்**

மன்னுயிர் - நிலைபெற்ற உயிர், அரிது ஆகி - முடியாதது ஆகி, நஞ்சு + பொருள் - நச்சுப் பொருள், நலிந்தால் - வருந்தினால், கழனி - நன்செய், எழில் - அழகு, பண் - இராகம், ஆக்கத் தொழில் - முன்னேற் றத்திற்குக் காரணமான தொழில், இறை - இறைவன், உடையார் - செல்வம் உடையார், இல்லார் - வறியர், ஏழைகள்.

## வினுக்கள்

1. கந்தன், 'அரசனே நாட்டிற்கு நலம்புரிவோன்' என்பதற்குக் கூறிய காரணங்கள் யாவை?

2. வைத்தியநாதன், 'மருத்துவர் நாட்டிற்கு இன்றியமையாதவர்' என்பதை எவ்வெக் காரணங்களால் உறுதிப்படுத்திஞர்?

3. தொழில்களைப் பற்றி அறிவானந்தம் பேசியவற்றைத் தொகுத்து எழுதுக.

4. கலைமணி, கலைஞரால் நாடு எய்தும் நன்மை குறித்து யாது கூறிஞர்?

5. நல்லாசிரியரே நாட்டிற்கு நலம்புரிவோர் என்பது எவ்வாறு பொருந்தும்?

6. தலைவர், சொற்போரின் முடிவுரையாகக் கூறியது என்ன?

## இலக்கணப் பயிற்சி

1. ஒரு தொடரில் வேற்றுமை உருபு வெளிப்பட்டிருந்தால் வேற்றுமை விரி எனவும், வேற்றுமை உருபு மறைந்திருந்தால் வேற்றுமைத் தொகை எனவும் கூறப்படும்.

i. நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன் - வேற்றுமை விரி.

ii. வாழ்வளிப்போன் - (வாழ்வை அளிப்போன்.) - வேற்றுமைத் தொகை.

2. பின்வருவன வேற்றுமைத் தொகையா, விரியா என்பதை விளக்கிக் கூறுக.

நலம்புரிவோன், வாழ்விற்குத் துணை ஆகும், இவற்றிடையே வாழ்கிறோம், மூச்சு அடக்கி, பண்பாடு படைத்தவன், கலைத் திறமை.

# 13. நோபெல் பரிசு

[திரு. பண்டித, ஞா. தேவநேயப் பாவாணர், எம்.ஏ.]

ஔவையார், 'தாதா கோடிக்கொருவர்' என்று ஆய்ந்து கூறியபடி, உலகில் எந்நாட்டிலும் வள்ளல்கள் சிலராகவே இருந்து வருகின்றனர். அச்சிலருடைய வண்மையும் கேளாமற் கொடுப்பது, கேட்டுக் கொடுப்பது, பலமுறை கேட்டுக் கொடுப்பது என முறையே தலை இடை கடையாக மூவகைப்படும்.

> " தண்டாமல் ஈவது தாளாண்மை தண்டி
> அடுத்தக்கால் ஈவது வண்மை—அடுத்தடுத்துப்
> பின்சென்றால் ஈவது காற்கூலி."
>
> —ஔவையார்

இந்து தேசத்தில் சிறப்பாகத் தமிழ் நாட்டில், கேளாமற் கொடுத்தவராகச் சொல்லப்படும் தலைவள்ளலாரும் ஓரிடத்தார்க்கு ஒரு காலத்தில் உதவினரேயன்றி எந்நாட்டார்க்கும் எக்காலத்தும் பயன்படத்தக்க நிலையான அறநிதியங்களை நிறுவிச் சென்றவரல்லர்.

உலக நலத்தைக் குறிக்கொண்டதும், நிலைபேறுள்ளதும், தேச குல மத வேறுபாடின்றி எல்லார்க்கும் பொதுவானதும், பெருந்தொகையானதுமான பரிசு உலக முண்டானது முதல் இதுவரையும் நோபெல் பரிசு ஒன்றே ஆகும். இதை ஏற்படுத்திய ஆல்பிரட் பெர்ன்கார்ட் நோபெல் (Alfred Bernhard Nobel) என்பவர் 1833ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 21ந் தேதி சுவீடன் நாட்டுத் தலைநகராகிய ச்டாக்கோமில் எம்மானுவேல் நோபெல் என்னும் இயந்திர வினைஞரின் மூன்றாம் மகனாகப் பிறந்தார். இவர் இளமையிலேயே தம் குடும்பத்துடன் ருசியாவிலுள்ள பிட்டர்சு பர்க் என்னுமிடத்திற்குச் சென்றார். அங்கு இவருடைய தந்தையார் போர்க்கலங்களை உடைக்கும் வெடி குண்டு (Torpedo)த் தொழிலைத் தொடங்கி, 1859ஆம் ஆண்டுவரை நடத்திப் பின்பு அதைத் தம்

இரண்டாம் மகனிடம் ஒப்புவித்துவிட்டு, சுவீடனுக்குத் திரும்பும்போது இவரும் உடன் திரும்பினர். பிறகு அங்குச் சென்று இவர் பல அரிய ஆராய்ச்சிகள் புரிந்து **டைனமைட்** என்னும் வெடி மருந்தைக் கண்டுபிடித்தார். அதற்கு ஓர் உரிமைக் காப்பைப் பெற்றுத் தொழிலை விருத்தி செய்துகொண்டு, காலத்தைக் கழித்து வந்தார். நாளடைவில் இவருக்குப் பெருநிதி திரண்டது. இவர் ஒரு புது நிருமாணிகராயும் வள்ளலாயும் விளங்கினர்; கடைசியில் தம் இறுதிக் காலம் அடுத்ததை அறிந்து, 1895ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 27ந் தேதி, தாம் தேடிய பொருளில் பெரும் பகுதியை (2,000,000 பவுனை) உலக நலத்திற்கென்று ஆருயிரத்து ஐந்நூறு பவுன் முதல் எண்ணுயிரம் பவுன் வரை பெறுமானமுள்ள ஐந்து பரிசுகளைத் தேச, மத வேறுபாடின்றித் தக்கார்க்கு ஆண்டுதோறும் அளிக்கும்படி '**இறுதி முறி**' (Will) எழுதிவைத்து 1896ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 10ந் தேதி இவ்வுலக வாழ்வை நீத்தார். இவரது இறுதி முறியில் குறிக்கப்பட்டுள்ள பரிசுகள் பௌதிக நூல் (Physics) பரிசு, இரசாயன நூல் (Chemistry) பரிசு, மருத்துவ (Medical Science) அல்லது உடல்நூல் (Physiology) பரிசு, இலக்கியப் (Literature) பரிசு, உலக அமைதி (Peace) ஆக்கப் பரிசு என்பன. இவை ஆண்டுதோறும் அவ்வத் துறையில் புதுமையான தேர்ச்சி காட்டும் அறிஞருள் தலைசிறந்தவருக்கு அளிக்கப்படும். இதற்கென்று **நோபெல் கழகம்** (Noble Institute) என ஒன்று ஏற்பட்டிருக்கின்றது. பௌதிக, இரசாயன நூற் பரிசிலரைத் தேர்ந்தெடுத்தற்கு சுவீடன் **அரச அறிவியற் கழகமும்** (Royal Academy of Science), **மருத்துவ** அல்லது **உடல்நூல்** பரிசிலரைத் தேர்ந்தெடுத்தற்கு ச்டாக்கோமிலுள்ள **அரசாங்க மருத்துவக் கழகமும்** (Faculty of Medicine), இலக்கியப் பரிசிலரைத் தேர்ந்தெடுத்தற்கு சுவீடன் **அரசு இலக்கியக் கழகமும்** (Royal Academy of Literature), உலக அமைதியாக்கப் பரிசிலரைத் தேர்ந்தெடுத்தற்கு **நார்வே நாட்டுப் பாராளுமன்**

றத்தால் அமைக்கப்படும் ஒரு கழகமும் நியமிக்கப்பட்டுள்ளன. இக்கழகங்களைச் சேராது சுவீடனிலும் பிற நாடுகளிலும் சிறந்த அறிஞர்களின் மதிப்புரைகள் பரிசுத் தீர்மானத்திற்கு மிகப் பயன்படுவனவாகும். பரிசுகள் தீர்மானிக்கப்பட்டபின், அவற்றின் அறிக்கை நார்வே நாட்டுப் பாராளுமன்றத்தால் வெளியிடப்படும்.

ஒவ்வொரு பரிசும் இருவருக்குப் பகுத்துக் கொடுக்கப்படலாம். ஆனால், இருவர்க்குமேல் பகுத்துக் கொடுக்கப்படாது. ஒரு வினையைப் பலர் சேர்ந்து செய்திருப்பின், அவர் எத்துணைப் பேரானாலும் அத்துணைப் பேர்க்கும் பகிர்ந்து அளிக்கப்படும். இம்முறையில் ஓர் ஆராய்ச்சி நிலையத்திற்கு அல்லது கழகத்திற்கு அளிக்கப்படுவதுமுண்டு. ஓராண்டில் ஒரு பரிசிற்கு உரியவர் இன்றேல், அடுத்த ஆண்டிலும் இல்லையேல் அது மூல நிதியோடு சேர்த்துக் கொள்ளப்படும்; அல்லது வேறாக வைத்து அதன் வருவாய் மேற்குறித்த வகைகளில் ஒன்றுக்கு வழங்கப்படும்.

நோபெல் பரிசுக் கழக விதிகளில் அடிப்படையானவற்றை 1900ஆம் ஆண்டில் சுவீடன் அரசியலார் அங்கீகரித்தனர். அதன்பின் 1901 முதல் ஆண்டு தோறும் டிசம்பர் மாதம் பத்தாம் நாளாகிய நோபெல் இறந்த நாளில் நோபெல் பரிசுகள் விழாக் கொண்டாட்டத்துடன் வழங்கப்படும். அன்று **ச்டாக்கோம் இசைக் கழக மண்டபத்தில்** சொற்பொழிவுகளும் இன்னிசைகளும் நடைபெறும். சுவீடன் மன்னர் பரிசளிப்பார். ஒவ்வொரு பரிசிலர்க்கும் பரிசுடன் ஒரு தகுதித்தாளும், நோபெல் வள்ளலின் உருவம் பொறித்த தங்கப் பதக்கமும் அளிக்கப்படும்.

இதுவரையில் பலதுறைகளிலும் பரிசு பெற்றவர்கள் பலராவார். நம் இந்தியாவில் பரிசு பெற்றவர் பௌதிக நூற்கு **சர் சி. வி. ராமனும்**, இலக்கிய நூற்கு **இரவீந்திர நாத தாகூரும்** ஆவர். இப்பெரும் பரிசு வைத்த வள்ளலை எவர்தாம் மறத்தல் கூடும்?

கலை வளர்ச்சிக்கும் உலக அமைதி யாக்கத்திற்கும்

இதுவரை ஏற்பட்டுள்ள ஏதுக்களில் நோபெல் பரிசு தலை சிறந்ததாகும். ஒரு வள்ளல் தன் வாழ்நாளில் எத்துணைப் பொருளை வழங்கினுன் ; அதைத் தானே வெளிப்படையாய் வழங்கின், அதற்குக் கைம்மாருன புகழைத் தன் காலத் திலேயே அனுபவிக்கின்ருனுதலின், அவனிறந்தபின் நிற்கும் புகழுடம்பு நிறைவற்றதாகும். ஆனுல், தன் பொருளைத் தன் காலத்துக்குப்பின் வழங்குமாறு செய்து விட்டுச் செல்லும் வள்ளலோ, மக்கள் நடுவிற் பூதவுடம்பி லிருந்து கொண்டு அனுபவியாமையின், முழு நிறை வான புகழுடம்பை நிறுத்தி விட்டுச் செல்கிருன். அங்ஙனம் சென்ற வள்ளல்களுள் ஆல்பிரட் நோபெல் தலைசிறந்தவர் அன்ருே ?

### அருஞ்சொற்பொருள்

தாதா - வள்ளல், தண்டாமல் - அடுத்தடுத்துக் கேளாமல், தாளாண்மை - ஊக்கத்துடன் கொடுக்குந் தன்மை, தண்டி - அடுத் தடுத்துக்கேட்டு, அடுத்தக்கால் - தம்மை யடைந்தபோது, அடுத் தடுத்து - திரும்பத்திரும்பச் சென்று, நிலைபேறு - நிலைநிற்றல், நிருமாணிகர் - உண்டாக்குபவர், இறுதி முறி - சாகுந்தறுவாயில் எழுதிவைக்கும் சாசனம், பாராளுமன்றம் - அரசியல் சன அவை, (Parliament), ஏது - காரணம், அறநிதி - தருமத்திற்காக ஏற்படுத்தப் பட்ட பொருள்.

### விஞக்கள்

1. **பொருள் கூறுக :** தாளாண்மை, வன்மை, இறுதி முறி, பாராளுமன்றம், வண்மை.

2. விஞைர், வள்ளல், அறிஞர், பரிசிலர், ஆராய்ச்சி—இவை என்ன பெயர் ? இவற்றிற்குப் பகுதி கூறுக.

3. அடிப்படை, அங்கீகாரம், ஆண்டுதோறும், உலக அமைதி யாக்கம்—இவைகளை நும் சொந்த வாக்கியங்களில் அமைத்தெழுதுக.

4. வண்மையாவது யாது ? அது எத்தனை வகைப்படும் ?

5. தமிழ்நாட்டுத் தலைவள்ளல்களுக்கும், மேனுட்டு வள்ளலான நோபெல் என்பவருக்கும் உள்ள வேறுபாடு என்ன ?

6. நோபெல் பிரபு தம் ஆராய்ச்சியால் கண்டுபிடித்தது என்ன ?

7. நோபெல் பிரபுவின் இறுதி முறி யாது ?

8. இப் பரிசு எந்தெந்தத் துறையில் தேர்ச்சி பெற்றவர்க்கு அளித்தற்குரியது ?

9. இப் பரிசு அளிப்பதில் தக்காரைத் தேர்ந்து கொள்ளும் முறை யாது ?

10. இப் பரிசளிக்கும் விழா எவ்வாறு நிகழும் ?

11. நோபெல் பரிசு பெற்ற இந்திய அறிஞர் யாவர் ?

## இலக்கணப் பயிற்சி

1. பகுபத உறுப்புக்களைப் பிரித்துக் காட்டுக : வருகின்றனர், சென்றூர், ஒப்புவித்து, அறிந்து, தேர்ச்சி, இறந்த, பெற்றவர், நடத்தி.

2. உலக நலத்தை, ஓரிடத்தார்க்கு, தம் குடும்பத்துடன் சென்றூர், இறுதி முறியில் குறிக்கப்பட்டுள்ளன, பாராளு மன்றத்தால் வெளியிடப்படும்.—இத் தொடர்களில் பெயர்ச்சொற்கள் ஏற்றுள்ள வேற்றுமை உருபுகளை எடுத்து எழுதுக.

3. மூன்றும் வேற்றுமை உருபுகளையும், ஐந்தாம் வேற்றுமை உருபுகளையும் கூறுக.

## 14. வாழ்க்கைத் தரத்தை உயர்த்தும் வழிகள்

[திரு. கே. எஸ். நாகராசன் அவர்கள், எம். ஏ.]

நம் நாடு சுதந்திரமடைந்திருக்கிறது. நம் சமுதாயத்தைச் சீர்திருத்தி யமைக்க இது ஏற்ற தருணம். கூடிய சீக்கிரம் நன்மை பயக்கும் திட்டங்கள் பல திரட்டி அவற்றைச் சரிவர நிறைவேற்ற வேண்டியது மிக அவசியம். ஆனால், அத்திட்டங்களைத் திடீரெனவோ, வற்புறுத்தியோ நிறைவேற்றக் கூடாது. வற்புறுத்தலின்றி அமைதியாக, சாத்வீக முறையிலே அவற்றை நடைமுறைக்குக் கொண்டுவர வேண்டும். ஒரு குறிப்பிட்ட திட்டத்தின்மீது ஒரு முடிவு ஏற்பட்டால், அம் முடிவிற்கு மாறுபட்ட கருத்துடையோர் சிலர் இருப்பது இயற்கை. ஆகவே, நமது முடிவின் நேர்மையைக் கூடிய வரையில் பொது மக்கள் உணரும்படி செய்ய வேண்டும். பொது மக்களின் நல்லெண்ணத்தாலும் ஒத்துழைப்பாலுமின்றி, நாம் அத்திட்டங்களை நிறைவேற்ற முடியாது.

இன்று உலகிலுள்ள எல்லா முற்போக்கு நாடுகளிலும் மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த வேண்டுமென்ற கூக்குரல் கேட்கிறது. சமூகம், அரசியல், பொருளாதாரம், சமயம் இவற்றில் எக்கோணத்திலிருந்து பார்த்தாலும் அமைதியான வாழ்க்கை முறையின் ஒரு முக்கிய அம்சம் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதாகும் என்பது தெளிவாக விளங்குகிறது. நாட்டில் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த முயலும்போது, தேசிய வருமானம், சனத்தொகை ஆகிய இரண்டு பிரச்சினைகள் நம் முன்னே தோன்றுகின்றன. நமது நாட்டின் இயற்கைச் செல்வங்கள் அமெரிக்க ஐக்கிய நாடுகள், சோவியத் ருசியா அல்லது ஆங்கில ஆட்சிக்குட்பட்ட நாடுகள் ஆகியவற்றின் செல்வங்களைப்போல் அவ்வளவு அதிகமாக இல்லாதிருக்கலாம். ஆனால், நம் நாட்டின் தேவைகள் மேற்சொன்ன நாடுகளின் தேவைகளைவிடக் குறைவாக

இருப்பதால், நமது நாட்டின் இயற்கைச் செல்வங்கள் நமக்குப் போதுமானவையாக இல்லையெனச் சொல்ல முடியாது. ஆண், பெண், குழந்தை ஆகிய ஒவ்வொரு வருக்கும் நியாயமான குறைந்தபட்சப் பொருளாதார நலம் பயப்பதே திட்டங்களின் முக்கிய அம்சமாக இருக்க வேண்டும். தேசிய வருமானத்தை அதிகப்படுத்த வேண்டுமென்பது இதனை முன்னிட்டே யாகும்.

'எல்லோருக்கும் சரிசமமாகச் சொத்தைப் பகிர்ந்து அளித்தல்' என்ற கொள்கையை நாம் கடைப்பிடித்தா லொழிய வாழ்க்கைத் தரத்தை உயர்த்தும் குறிக் கோள் கைகூடாதென்பது உண்மையே. நாட்டின் மொத்த செல்வமெல்லாம் நாட்டு முதலாளிகளிடம் குவிந்து கிடக்கிறது. அரசாங்கம் பொதுநலனுக்காகச் செய்யும் செலவுக்கு வேண்டிய பணமோ, பாமர மக்களின் பாதிவயிற்று வருமானத்திலிருந்து வரவேண்டியிருக் கிறது. இதனால்தான் நாட்டில் வறுமையும், நகரத்தில் பெருமையும் காணப்படுகின்றன. இப்படிப் பாதி வயிற் றுக்கும் போதாத வருமானமுள்ளவரைக் கசக்கிப் பிழிந்த தன் காரணமாக நாட்டுக் கலை, வாணிபம், கைத்தொழில், இலக்கியம், சமயம் யாவுமே பாழ்பட்டுப் போயின. ஆனால், இந்தியாவின் இன்றைய பரிதாப நிலைமைக்கு இதைவிட முக்கியமான காரணமொன்று உண்டு. அது தான் தேசிய ஏழ்மை. இந்த ஏழ்மையை வேரோடு கல்லி யெறிந்தாலொழிய நம் மக்களைச் சமூக வாழ்க்கை யில் முன்னேறச் செய்வது இயலாது.

உடல் வியாதிகளைப் போலவே சமூக வியாதிகளும் எண்ணிக்கை யற்றவை. அவற்றிற்கு வரையறை கிடை யாது. மக்களின் வாழ்க்கைத் தரத்தில் படிப்படியான முன்னேற்றமின்றித் தொழில்களை இயந்திர மயமாக்குதல் முடியாது. தொழிலாளிகளின் கூலியை உயர்த்துவதால் மாத்திரம் அவர்களது வாழ்க்கைத் தரம் உயரும் என எதிர்பார்ப்பது அறியாமை. ஏனெனில், நேர்மையான வாழ்க்கை முறைகளைக் கற்றுக் கொள்ளாவிடில் அதிக ஊதியம் பெற்றாலும் அவர்களுக்கு ஒரு பயனும்

ஏற்படாது. உயர்த்தப்பட்ட சம்பளமானது குடிபோன்ற வீண் செலவுகளால் அழிவு செய்யப்படலாம். மேலும், மக்கள் சோம்பேறிகளாவதால் அவர்களின் வேலைத் திறனும் குறையும். ஆகவே, மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தும் வேலை மிகக் கடினமானதே. இக் குறிக்கோளை அடைவதற்குச் சமூக வாழ்க்கையிலும் கல்வி முறையிலும் பலவிதச் சீர்திருத்தங்களைச் செய்ய வேண்டும்.

நம் மக்களின் வாழ்க்கைத்தரம் மிகக் குறைவாயிருப் பதற்கு ஒரு காரணம், நாட்டுச் செல்வமெல்லாம் ஒரு சிலரிடத்தில் தேங்கி யிருப்பதே என்பதில் ஐயமில்லை. ஆனால், இதுதான் அடிப்படையான காரணம் என்று சொல்லிவிட முடியாது. ஏனெனில், நம் நாட்டின் மொத்த வருமானத்தை எல்லோருக்கும் சரிசமமாகப் பங்கிட்டா லும், ஒவ்வொரு மனிதனுக்கும் மாதமொன்றுக்கு ரூ. 11 கிடைக்கலாமே யொழிய அதற்குமேல் கிடைக்காது. ஆகவே, தனிப்பட்ட ஒவ்வொரு மனிதனுக்கும் மிகக் குறைவான வருமானந்தானே கிடைக்கிறதென்று சச்சரவு செய்துகொண்டிருப்பதில் பயனில்லை. முதலில் தேசிய வருமானத்தை அதிகமாக்கிப் பின்பு அதை எல்லோ ருக்கும் சரிசமமாகப் பங்கிடவேண்டும்.

ஏன் இந்தியாவின் தேசிய வருமானம் இவ்வளவு குறைவாக இருக்கிறது என்ற வினவிற்குப் பிரபல மேனாட்டுப் பொருளாதார நிபுணர் ஒருவர் "இந்தியாவின் சனத்தொகை மிக அதிகம். நாட்டு வளப்பம் அவ்வளவு மக்களையும் பாதுகாக்கப் போதாது. ஆகவே, சனத் தொகை மிக அதிகமாக இருப்பதுதான் நாட்டின் சீர்கேடான பொருளாதார நிலைக்குக் காரணம்" என்று விடையளித்திருக்கிறார். அதாவது, இன்று நம் நாட்டி லுள்ள மிதமிஞ்சிய சனத்தொகையின் வளமான வாழ் விற்குத் தேவையான செல்வம் நம்மிடத்தில் இல்லை யென்பதுதான் அதன் கருத்து. ஆனால், நம் நாட்டில் உபயோகிக்கப்படாது பாழடைந்துள்ள பரந்த நிலக் கூறுகளை எல்லாம், உயரிய முறையில் பாங்குறப் பண்

படுத்தினுல், தற்போதுள்ள சனத்தொகைக்கும் கூடப் போதுமான உணவுப் பொருள்கள் எளிதில் கிடைக்கும். இந்தியாவின் அமோகமான தாதுச் செல்வங்கள் சரிவரக் கண்டுபிடிக்கப்பட்டு இன்னும் வெளிப்படுத்தப்படவில்லை. இரும்பு, பாக்சைட், மைகா, மாங்கனீசு, யுரேனியம், முதலிய தாதுப் பொருள்கள் பலவும் நம் நாட்டில் ஏராள மாக இருப்பதை நாம் அறிவோம். நம் நாட்டில் கந்தகமும், தாது எண்ணெய்களும் குறைவாகவே கிடைக்கின்றன ; ஆனுல், இது ஒரு பெருங்குறை யன்று. மிக முன்னேற்ற மடைந்துள்ள நாடுகளுங் கூட இப்பொருள்களை அயல் நாடுகளிலிருந்து இறக்குமதி செய்துகொள்ளுகின்றன. தற்காலத்தில் கண்டுபிடிக்கப்பட்டுள்ள விஞ்ஞான முறை களை எல்லாம் உபயோகப்படுத்தி விவசாயம் செய்ய வேண்டும். நம் நாட்டின் ஏழ்மைக்குச் சனத்தொகை காரணம் எனக் கூறுவது எவ்வகையிலும் பயன்படுவ தன்று. கடந்த இருபது அல்லது இருபத்தைந்து வருடங் களில் நம் நாட்டின் மக்கள் தொகை அதிகமாகியுள்ளது என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை. ஆனுல், 1880ஆம் ஆண்டு முதல் 1940ஆம் ஆண்டு முடிய இந்த 60 ஆண்டு களில் நம் நாட்டில் அதிகமாயிருக்கும் சனத்தொகையின் சதவிகிதம் அமெரிக்க ஐங்கிய நாடுகள், சப்பான், இங்கிலாந்து ஆகிய நாடுகளிலுள்ளதை விட மிகக் குறைவானதே என்ற உண்மையை நாம் ஆழ்ந்து நோக்கவேண்டும். அங்ஙனம், பெருவாரியாக மக்கள் எண்ணிக்கை அதிகமாகியும், அந்நாடுகள் பொருளாதார முன்னணியில் நிற்க முடியுமானுல், நம் நாடும், தன் நிலை யைச் சீர்படுத்திக்கொள்ள இயலாதா ?

மக்கள் தொகை திடீரென அதிகமாகலாம், அல்லது சில சமயங்களில் குறையலாம். அது இயற்கையின் நியதி ; நம்மால் தவிர்க்க இயலாதது. ஆனுல், சனத் தொகை விரைவாக அதிகரிக்கும்பொழுது பொருளாதார நிலைமையும் விரிவடைகிறது ; முன்னேற்றமடைகிறது. இன்று நாம் அரசியலிலும் பொருளாதார நிலைமையிலும் ஒரு புது யுகத்தில் இருக்கிறேம். நமது ஒன்றுபட்ட

முயற்சியினால் சிறிது காலத்திற்குள் ஒவ்வொரு குடும்பமும் வாழ்க்கைக்குத் தேவையான வசதிகளை அடையும் அளவுக்கு நம் மக்களின் பொருளாதார நலத்தை உயர்த்த வேண்டும். முதலாவதாக, ஏழை இந்தியனுக்கு உண்ண உணவும், உடுக்க உடையும், ஒதுங்க ஓரிடமும் கிடைக்க வேண்டுமானால், அவனுக்கு ஈரமளிக்க முதலாளிகளே நெஞ்சில் ஈரத்துடன் முன்வரவேண்டும். இல்லையேல் சுதந்திர சர்க்காராவது தீரத்துடன் முன்வரவேண்டும். இரண்டாவதாக, நாம் அனைவரும் நாட்டு உற்பத்தியைப் பல்லாற்றானும் பெருக்க முயற்சி செய்யவேண்டும்; ஆக்க வேலைகளில் ஈடுபட்டு, தேசிய வருமானத்தை உயர்த்த வேண்டும். சிறைவாசமும், மேடைப் பேச்சுகளும் உரிமைகளை வற்புறுத்துவதும் இனித் தேவையில்லை. அவை முடிந்து வெகுசில நாட்களே கழிந்திருக்கின்றன. இனிமேல் நம் நாட்டு இயற்கை வளத்தை அறிந்து, அதை முழுதும் பயன்படுத்திக்கொண்டு, பல துறைகளிலும் பிற நாடுகள் வியக்கும்படி இந்தியா விளங்குமாறு செய்வது நம் மகத்தான கடமை. அன்றாட வாழ்க்கையில் நாம் செய்யும் ஒவ்வொரு சிறு செயலும் நிச்சயம் பயன்தரக் கூடிய ஆக்கவேலையின் ஓர் அங்கமாக இருக்கவேண்டும். நம்முடைய மாபெரும் நாட்டின் இன்பமயமான எதிர் காலம் இவ்வழியில்தானுள்ளது; நம் கையில்தானுள்ளது.

### அருஞ்சொற்பொருள்

சமயம் - மதம், குறைந்த பட்சம் - குறைந்த அளவு, வரையறை- அளவு, வேலைத்திறன் - வேலை செய்யும் திறமை, நிலக்கூறு - நிலப் பகுதிகள், அமோகம் - ஏராளமான, நியதி - ஒழுங்கு, ஈரம் - இரக்கம், மகத்தான - மிகப்பெரிய, அங்கம் - உறுப்பு.

### வினாக்கள்

1. அமைதியான வாழ்க்கை முறையின் முக்கிய அமிசம் யாது?
2. நாட்டில் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த முயலும்போது குறிக்கிடுவன யாவை?
3. நாட்டில் வறுமையும் நகரத்தில் பெருமையும் காணப்படுவது ஏன்?

4. இந்தியாவின் இன்றைய பரிதாப நிலைமைக்கு யாது காரணம்?

5. 'தொழிலாளிகளின் கூலியை உயர்த்துவதால் வாழ்க்கைத்தரம் உயரும் என எதிர்பார்ப்பது அறியாமை.' ஏன்?

6. மேனாட்டுப் பொருளாதார நிபுணர் இந்தியத் தேசிய வருமானக் குறைவுக்குக் கூறும் காரணம் யாது?

7. நம் நாட்டின் எதிர்காலம் இன்பமயமாவதற்குக் கட்டுரை ஆசிரியர் கூறும் ஆக்க வேலைகளை விளக்கி இருபது வரிகளில் வரைக.

## இலக்கணப் பயிற்சி

நமது ஒன்றுபட்ட முயற்சியினால் சிறிது காலத்திற்குள் ஒவ்வொரு குடும்பமும் வாழ்க்கைக்குத் தேவையான வசதிகளை அடையும் அளவுக்கு நம் மக்களின் பொருளாதார நலத்தை உயர்த்த வேண்டும்.—இவ் வாக்கியத்தில் வந்துள்ள வேற்றுமை உருபுகளைக் கூறுக. அவை எந்த வேற்றுமைக்கு உரியன என்பதையும் அறிவிக்க.

# 15. அமுத சுரபி

[வித்துவான், திரு. பி. வி. இராமசுவாமி]

**இடம் :** சிந்தாதேவி கோயில்

**காலம் :** நள்ளிரவு

**நடிகர் :** ஆபுத்திரன், வழிப்போக்கர், சிந்தாதேவி.

**ஆபுத்திரன் :** (தனிமொழி) பசி, பட்டினி, பஞ்சம் இவை உலகெங்கணும் தலைவிரித்துத் தாண்டவமாடு கின்றன. மக்கள் பிறப்பின் பயனை ஓராது, அறவினை யகற்றி மறவினையில் மூண்டு நிற்கின்றனர். அருளுமன் பும் ஆருயிரோம்பலு மாகிய அறநெறிகள் இம்மாநிலத்தி னின்றும் அகன்றுவிட்டன. மருளும், வஞ்சமும், களவும், கொலையும் மண்ணை—மக்களைத் தம்முரிமையாக்கிக் கொண்டன. பகுத்தறிவு படைத்த மக்களும் இவற்றிற் கடிமை! எந்தக் காலத்தில் இப்படி இருந்தது? வலியவர் மெலியவர் வயிற்றிலடித்து, அவர்களது உடல், பொருள், உயிரை உறிஞ்சுவது இக்கலிகாலச் செயலாய்ப் போய்விட்டது. 'செல்வத்துப் பயனே ஈதல்' என்னு மிச் சீரிய கொள்கை இக்காலத்துச் செல்வர்களில் ஒருவரிடமாவது காணப்படுகிறதா? இல்லை! முற்றிலு மில்லை !!

என்னைப் பொறுத்தவரையில் நான் இன்று எடுப்பது பிச்சையானாலும், பசித்தவர் முகம் பார்த்துப் பரிந் தோம்பி வாழ்கின்றேன். இச் செயலை யானென்று மியற்றி வருமாறு இங்கெழுந்தருளியுள்ள சிந்தாதேவி எனக் கருளுவளாக. (தரையைப் பார்த்து) இவ்வம்பலத் தின் புழுதிபடிந்த இத்தரை என் படுக்கை. என் கை ஏந் திய இப்பிச்சைப் பாத்திரம் என் தலையணை. (சுற்றும் பார்த்து) இப்போது நள்ளிரவாயிருக்கும்போல் தோன்று கிறதே! தூக்கம் என்னைச் சுழற்றியடிக்கிறது. படுத்துக் கொள்கிறேன். தேவி! நீயே துணை. (படுத்து உறங்கு கிறான். சிறிது நேரத்தில் வழிப்போக்கர்கள் வருகி றார்கள்.)

**முதலாமவன் :** என்ன மழையப்பா! வானமே துளைபட்டாற்போல் கொட்டுகிறது! போதாக்குறைக்கு இடியும், மின்னலும், ஊதைக்காற்றும் இவ்வளவு அவ்வளவென்று சொல்வதற்கில்லை. இதுநாள்வரையில் இப்படிப் பட்ட மழையை நான் பார்த்ததேயில்லை! அடே, அப்பா!

**இரண்டாமவன் :** பாவம் மலிந்துபோன இக்காலத்தில் பருவமழை எங்குப் பெய்கிறது? எவனுவது புண்ணியவானிருந்திருப்பான். வருண பகவானுக்கும் உயிர்கள்மீது கொஞ்ச மிரக்கந் தோன்றியிருக்கும். அதனுல் இந்த மழை!!

**மூன்ருமவன் :** அதென்ன அப்பா, புண்ணியவான் இருந்திருப்பானென்று சொல்லுகிருயா?

**நான்காமவன் :** ஆம், அஃதென்ன உனக்குத் தெரியாதா? உலகில் பாவம் மண்டிப் பாவிகள் மலிந்துவிட்டால் காலாகாலத்தில் மழை பெய்யாதாம். இப்படியாக அறிந்தவர்கள் சொல்வார்கள்.

**முதலாமவன் :** (சிறிது சினத்துடன்) இந்தா, வேதாந்தமெல்லா மிருக்கட்டும்! உடம்பை ஈரம் போகத் துவட்டிக் கொள்ளுங்கள். பகல் முழுதும் பச்சைத் தண்ணீரை வாயிலூற்ருமல் வழி நடந்து, போதாக்குறைக்கு மழையில் வேறு நனைந்து எவ்வளவு துன்பப்பட்டிருக்கிருேம்! அப்பொழுதெல்லாந் தெரியவில்லை, இங்கு வந்தவுடன்தான் பாழும் பசி வயிற்றைச் சுருட்டிப் பிடிக்கிறது! அதற்கேதாவது ஒருவழி பார்க்கவேண்டாமா?

**இரண்டாமவன் :** பார்க்கத்தான் வேண்டும்; எனக்கும் பசி கண்ணை யிருட்டுகிறது; காதை அடைக்கிறது. இந்தக் குளிர் நேரத்திற்குக் கொஞ்சம் வெதுவெதுப்பாகக் கூழ் கிடைத்தாலே அமுதமாகத் தானிருக்கும். ஆனுல், அது கிடைப்பதெப்படி? ஊரே அரவமொடுங்கி நிசப்தமாக இருக்கிறது. நடுநிசி நேரம் இது!

**மூன்ருமவன் :** (சுற்றிலும் பார்த்து) அடே கூத்தா, நாம் மழைக்குத் தங்க ஒதுங்கின இந்த இடம் கோயில் போல் இருக்கிறதப்பா! அதோ பார்; ஒரு தெய்வம் முணுக்கு முணுக்கென்றெரியும் விளக்கொளியில் தெரி

கிறது. நாம் மழை யிருட்டில் இடத்தைப்பற்றி ஆராயாமல் ஒதுங்கினும், நல்ல வேளையாகத் தெய்வத்தின் காலடியில் வந்து சேர்ந்தோம். இனி, நமக்குப் பசி நீங்குவது மட்டுமா ? எது வேண்டுமானலும் கிடைக்கும். இது தெய்வ முன்னிலை யல்லவா ?

**கூத்தன் :** (உற்றுப் பார்த்து) ஆமாம் அண்ணு, நீ சொல்வது உண்மைதான். உற்றுக் கவனித்தாற்ருன் விளக்கெரிவதும், அவ்விளக்கு வெளிச்சத்தில் ஒரு தெய்வமிருப்பதும் தெரிகின்றன. கொஞ்சம் பொறு; நான் இரு தப்படிகள் அப்பாற் சென்று பார்த்து வருகிறேன். (சென்று பார்க்கிருன்.) அடே கூத்தா, பாணு, பொருநா, எல்லோரும் உள்ளே வாருங்கள். மழைக்கும் குளிருக்கும் நல்ல அடக்கமாக இங்கிட மிருக்கிறது !

**மற்றவர்கள் :** அப்படியா ? அப்படியானல் எல்லோரும் உள்ளே வாருங்கள். (போகிருர்கள்.)

**கூத்தன் :** பார்த்தீர்களா ? கடவுளை நம்பினோர் கைவிடப்படாரென்பது நம்மிடத்தில் எவ்வளவு பொருத்தமாயிருக்கிறது ! தெய்வம் கொஞ்சங் கொஞ்சமாக வழிகாட்டி ஆறுதல் செய்கிறது. (ஒரு மனிதனைச் சுட்டி) இதோ, ஓர் ஆள் படுத்திருப்பதாகத் தெரிகிறது ! இந்த ஆளை எழுப்பினுல், நமது பசிக்கும் ஒருவேளை வழி பிறந்தாலும் பிறக்கலாம்.

**ஒருவன் :** தூங்குகிறவரை எழுப்புவதா ? அது பெரிய பாவம்.

**மற்றவர் :** (பரிகாசமாக) அடே, அப்பா ! பாவத்தை மிகவும் கண்டவன், நீ! எங்களுக்குத் தெரியுமே யுன்னை ! பசியே பாவி. இது உனக்குத் தெரியுமா ! பெரியவர்கள் சொல்வதைக் கேள் :

"குடிப் பிறப்பழிக்கும் ; விழுப்பங் கொல்லும்;
பிடித்த கல்விப் பெரும்புணை விடூஉம் ;
நாணணி களையும் ; மாணெழில் சிதைக்கும் ;
பூண் நகில் மாதரொடு புறங்கடை நிறுத்தும் ;
பசிப்பிணி யென்னும் பாவி."

—கேட்டாயா ? இதனீற்றடியில் பசியைப் பிணியாகவும்,

பாவியாகவும் இழித்துரைக்கப்பட்டிருப்பதைக் கவனித்தாயா? பசியே பிணி, அது பாவி எனப்பட்டபோது பசித்தவர் எத்தகைய ரென்பதை விள்ளவா வேண்டும்? பசி யித்தன்மையதாதலாற்ருன் அப்பசியைப் போக்குவது மாந்தரது முதல் கடமையாயிற்று; சிறந்த அறமாகவும் கருதப்படுவதாயிற்று. இப்படிக் கெல்லாமிருக்க, நம் கொடிய பசியைத் தீர்த்துக் கொள்ளும் பொருட்டு இவரை எழுப்புவதில் என்ன குற்றமிருக்கிறது? இதில் பாவமும் இல்லே. எழுப்புவோம் இவரை. (எழுப்புகிருர்கள்.) யாரையா, இங்கே உறங்குகிறது? சிறிது எழுந்திருங்கள்.

ஆபுத்திரன்: (தூக்கம் கலேந்து) யாரய்யா நீங்கள்? நடுநிசி என்றும் பாராது தூங்குகிறவனேத் தொந்தரவு செய்கிறீர்கள். நன்ருக இருக்கிறது உங்கள் செயல்!

எல்லோரும்: (தாழ்ந்த குரலில்), தொந்தரவென்று சொல்லக்கூடாது. நாங்கள் பரிசிலர்கள். பகல் முழுவதும் வெய்யிலில் வழி நடந்து கால மழையில் அகப்பட்டு, அங்கங் குறுகி அரையுயிராக இங்கு வந்து சேர்ந்திருக்கிரேம். பசிக் கொடுமை எங்களாற்றலேக் கடந்து பெரிதும் வருத்துகிறது. என்ன செய்வதையா? நீங்கள் தான் எங்கள் பசித்துன்பம் நீங்க இவ்வேளேயில் ஒருவழி செய்யவேண்டும்.

ஆபு: நீங்கள் பரிசிலர்களா? பசிக்கொடுமையா உங்கட்கு? (எழுந்துட்கார்ந்து தனக்குள்) தெய்வமே! உன் சோதனே நன்ருயிருக்கிறது! எளியேனே இப்படியா சோதிக்கவேண்டும்? இந்நிசி வேளேயில் நான் எங்கு இரக்கச் செல்வேன்? அப்படி இரந்தாலும் யாரிடுவர்? இவர்கள் பசியென்று சொல்லும் சொல் என்னுயிரை ஈர்க்கிறதே! என் செய்வேன்?

(பின்னர் மனந்தெளிந்து வாய்விட்டு) தேவி சிந்தா, விளக்கே! நீயே சரண்! உன்னம்பலத்தை நான் புகலாக அண்டினவன். என்னுடல் உன்னம்பலப் புழுதியில் புரளுகிறது. என் மனம் இடையருது உன் திருவடி மலர்த்தேனேப் பருகித் திளேக்கிறது. இப்படி யிருக்கிற

என்னை, நீ இவ்வேளையில் கைவிடலாமா? சேய்பால் தாயிரங்காவிடில் பின்னர் வேறு யாரிரங்குவர்? (கண்களில் கண்ணீர் பெருகக் கைகுவித்து வணங்குகிறான்.)

**சிந்தாதேவி :** (முன்தோன்றி) அப்பா குழந்தாய், ஆபுத்திரா! வருந்தாதே. கண்ணீரைத் துடைத்துக் கொண்டு என்னைப் பார்.

**ஆபு :** (கண்ணீரைத் துடைத்துக் கொண்டு பார்த்து) ஆ, தேவி! ஆருயிர்த் தாயே! அடியேனை ஆட்கொண்ட அன்னாய்! வணக்கம்.

(தரையில் விழுந்து வணங்குகிறான்.)

**சிந்தா :** ஆபுத்திரா, எழுந்திரு. உலகில் அறங்களிற் சிறந்தது அன்னதானம். அதனை, ஏழையாயிருப்பினும் நீ பிறரிடமிரந்தாவது இடையறாது இயன்ற அளவு செய்வது எனக்குப் பேருவப்பைத் தருகிறது. உனக்கு நாம் வெகு நாட்களாக உம் விருப்பத்தற்கேற்றவொன்றை அருளவேண்டுமென்று எண்ணியிருந்தோம். அதற்குரிய தருணம் இதுவாக இருந்தது. (கையை நீட்டி) இதோ, இதைப் பெற்றுக்கொள்.

**ஆபு :** (பெற்றுக் கொண்டு மகிழ்ச்சியாக) அருட்தேவி, இது......?

**சிந்தா :** இதுவா? அமுத சுரபி என்னும் அட்சய பாத்திரம். உனது அறத்தை நீ முட்டின்றி இயற்றுவதற்கு உதவி புரிய வல்லது.

**ஆபு :** (வியப்புடன்) அன்னையே, உமக்கு அடியேன் பாலிருந்த அன்பினை என்னென்று கூறுவேன்! நானே பேறு பெற்றவன்.

**சிந்தா :** ஆருயிர் அன்ப, உன் கையில் நான் கொடுத்தது உனக்கோர் எளிய பிச்சையோடாகத் தோன்றினும், அதன் பெருமை புலவர் நாவெல்லையைக் கடந்தது. தெய்வத் தன்மை வாய்ந்த இது, ஆருயிர் மருந்தா மமுதினைக் குறைவின்றிக் கொடுக்குந் திறத்தது. நாடெங்கணும் வறுமை மிகினும் அது வறுமை யுறாது. அதிலிருந்து பெறும் சோற்றை நீ எடுத்துக் கொடுக்க, அதனை வாங்குபவர் கைகள் ஆற்றாது சோருமே யன்றி,

உணவை யளிப்பதில் சிறிதுஞ் சோர்வுருது. இத்தகைய அமுத சுரபியின் துணைகொண்டு, நீ உன்னை யடுத்த மன்னுயிர்களுக்கு உண்டாகும் பசியை அகற்றி, அவற்றின் இன்முகங்கண்டு இன்புறுவாய். நான் சென்று வருகிறேன்.

ஆபு: (மகிழ்வுக் கண்ணீர் வடித்து,)

சிந்தா தேவி! செழுங்கலை நியமத்து
நந்தா விளக்கே! நாமிசைப் பாவாய்!
வானேர் தலைவி! மண்ணேர் முதல்வி!
ஏனே ருற்ற இடர்களை வாய்—''

(என்று துதித்துக் கைகுவித்து வணங்குகிருன்; தேவி மறைகிருள்.)

வழிப்போக்கர்கள்: (ஒருவருக்கொருவர்) என்ன விந்தை! இந்தக் காரிருளைக் கிழித்துக் கொண்டு ஒரொளிப் பிழம்பு தோன்றி, இப் பெரியோனிடம் பேசியதே! ஏதோ ஒன்றைக் கொடுத்தாற் போலவும் தோன்றியதே! இது என்ன கனவா, நனவா?

ஆபு: பரிசிலர்களே, அதெல்லாமிருக்கட்டும். என் அருகில் வந்து உணவைப் பெற்று உண்ணுங்கள். முதலில் பசி தீரட்டும். பிறகு பேச்சு எங்குப்போகிறது?

வழிப்போ: (உணவைப் பெற்று உண்ட பிறகு) ஐயா, புண்ணியரே! எமது பசி சூரியனைக் கண்ட பனிபோல நீங்கிவிட்டது. உம்மை நாங்கள் என்றும் மறவோம். சிறிது கண்ணுறங்கிக் காலையில் எங்களூருக்குப் போய் வருகிறேம். வணக்கம். (கைகுவித்து வணங்குகிருர்கள்.)

[திரை விழுகிறது.]

## காட்சி 2

இடம்: அம்பலப் பீடிகை.
காலம்: நண்பகல்.
நடிகர்: ஆபுத்திரன், ஐயமேற்போர், முதிய வேதியர்.

ஆபுத்திரன்: காணர், கேளார், கால்முடமானர், ஆதரவற்றவர், பிணியாளர் ஆகிய யாவரும் வருக. ஆருயிர் மருந்தாம் உணவைப் பெற்றுப் பசி தீர்க.

**ஐயமேற்போர் :** (ஒவ்வொருவராக வந்து) ஐயா, எனக்கு. ஐயா, எனக்கு.

**ஆபு :** அவசரப்படாதீர்கள். நெருக்க வேண்டாம். மெதுவாக இருந்து வேண்டிய உணவை வாங்கி அருந்துங்கள். (யாவரும் வந்து உணவிற்கு நிற்க, ஆபுத்திரன் அவர்கட்குச் சோற்றுத் திரளை வாரிவாரிக் கொடுக்கிருன்.)

[முதிய வேதியர் வருகை]

**முதிய வேதியர் :** (தனி மொழி) அம்மம்மா! எவ்வளவு கூட்டம்! மக்கள் திரள் ஒருபுறம், மாக்கள் திரள் ஒருபுறம்; எள்ளுப் போட்டால் எள்ளு விழாது போலிருக்கிறதே. (வானை நோக்கி) ஆ! இதென்ன! பறவைகளுங்கூட வானவெளியை அடைத்துக்கொண்டு இவன் பால் உணவு பெறப் பறந்து திரிகின்றன. இவ்வளவு உயிர்களையும் தினமும் பாதுகாக்கும் இவன் ஒப்பற்ற அறவினையாளன் என்பதில் தடையில்லை. சிறிது பொறுத்திருந்து கூட்டம் கலைந்த பிறகு இவன் பக்கம் செல்கிறேன். (ஒருபுறம் ஒதுங்கி நிற்கிருர்.)

**ஆபு :** (யாவருக்கு முணவளித்து அனுப்பி, எட்டப் பார்த்து,) ஐயா பெரியவரே, வாருங்கள். கூட்டம் கலைந்து விட்டது. நீர் தடையில்லாமல் வந்து உணவைப் பெற்றுப் போகலாம்.

**முதியவே :** (தண்டூன்றி வந்து) ஐயா, ஆபுத்திரன் நீ தானே?

**ஆபு :** ஆம், நான்தான். எதற்காக என் பெயரை விசாரிக்கிறீர்கள்?

**முதியவே :** ஒன்றுக்காகவு மில்லை. உனது அறச் செயல் மிகப் பெருமை வாய்ந்தது; யாவராலும் போற்றத் தகுந்தது. வெகுநாட்களாக மாரியில்லாது வறண்ட இப் பாண்டிய நாட்டில் நீ இல்லையேல், இவ்வுயிர்கள் என்னவாயிருக்கும், தெரியுமா? இருந்த இடந் தெரியாமல் மடிந்து போய் எத்தனையோ நாட்கள் ஆகி இருக்க வேண்டும்!

**ஆபு :** (அடக்கமாக) நான் என்ன அவ்வளவு செய்து விடுகிறேன்? என்னம்மை சிந்தாதேவியின் திருவருள்!

அவள் கொடுத்த ஓடு உயிர்களைக் காத்துவருகிறது. நான் அதற்கொரு கருவி.

முதியவே: ஆபுத்திரா, உலகில் உள்ள மற்றவர்களைப் பற்றி நீ என்னென்று நினைக்கிறாய்? அவர்களும் கருவிகளே. எல்லோரையும் ஆட்டுவிக்கிறவன் ஒருவன். அவன் விருப்பப்படியே யாவும் நடக்கின்றன. இந்த உண்மையை அறிந்து உன்னைப் போல் உலகு வாழ உயிர் வாழ்பவரே தேவர்கள் போற்றும் சீரியோராவர்.

ஆபு: (வெட்கத்தால் தலை குனிந்து) பெரியவரே, உயிர்கட்கு உறுதுணையாக இருக்க நான் விரும்புகிறேன்; ஆனால், அதனால் வரும் புகழ்ச்சியை நான் விரும்பவில்லை. போதும், உம் புகழ்மொழி. நீர் வந்த காரியமென்ன? உணவைப் பெறத்தானே! இதோ, அதனைத் தருகிறேன். பெற்றுக்கொள்ளுங்கள். (உண வளிக்கப் போகிறான்.)

முதியவே: (வாங்க மறுத்து) ஆருயிர் முதல்வ, நீ நினைக்கிறபடி நான் உன்னிடம் உணவைப்பெற வரவில்லையே! கைத்தடியைக் காலாக ஊன்றித் தளர்ந்த நடையும் வளைந்த யாக்கையுமாக வந்திருக்கும் இந்த நான் ஒரு வேதியனுமல்லன்.

ஆபு: (வியப்புடன்) அப்படியானால், நீர் யார்? எதற்காக இங்கு வந்தீர்?

முதியவே: நானா?......இந்திரன். தேவர்களுக்குத் தலைவன். உன் பெரும் தானத்துக்குரிய பயனைத்தர வந்தேன். யாது வரம் வேண்டும்? கூசாமல் கேள், தருகிறேன்.

ஆபு: (முகம் சுளித்து வெறுப்புடன்) இந்திரனா?... வரம் தர வந்தாயா?

முதியவே: ஆம், நான் சொல்வது உண்மை. வேண்டியவற்றைக் கேள்.

ஆபு: (விலா எலும்பு முறியச் சிரித்து) தேவர் கோவே, நீ வந்து எனக்கு வரம் தருவாயென்பதை எண்ணி நான் அறம் செய்யவில்லையே! என்னறம் பயனை எதிர்பாராததென்பதை நீ அறியாயோ? அஃதிருக்கட்டும்.

உனது வரம் எனக்கு வேண்டாம். இவ்விடத்தைவிட்டு அப்பாற் செல்.

முதியவே: ஆருயிர் அன்ப, அப்படிச் சொல்லாதே. தானாக வலிய வரும் பேற்றைத் தட்டக்கூடாது. தேவர் தலைவன் இவ்வாறு ஒருவர் முன் வருவதும், அவருக்கு வரமளிப்பதும் மண்ணவர்க்குக் கிடைத்தற்கரிய பேறுகள். நீ பெரும் புண்ணியசாலி யாகையால், உனக்கு அவை வாய்த்திருக்கின்றன.

ஆபு: தேவேந்திரா, போதுமே, உன் தற்பெருமை. நானொன்று மறியாதவனென்று நினைத்துக்கொண்டிருக்கிறாயா? உன் நாட்டையும், உன் மக்களையும், உன்னையும் பற்றி நானெவ்வளவு தூரம் தெரிந்துகொண்டிருப்பேனென்பதை வேண்டுமானால் நீ கேட்டுக்கொள்: இந்த மண்ணிலே இயற்றிய அறப்பயனை அனுபவிப்பதற்குரிய இடமே உன் பொன்னுலகம். அங்குள்ள தேவர்கள், சென்ற பிறவியிற் செய்த அறவினைப் பயனை அனுபவிக்க அறிந்தவரே அன்றி, அவ்வறவினையை ஈட்ட அவர்கள் அறியார். அங்கு எங்குச் சென்று துருவினாலும், அறமியற்றுவோர், ஆருயிரோம்புநர், நற்றவம் செய்பவர், பற்றுக்கெட முயல்பவர் ஆகிய இத்திறத்தாருள் ஒருவரையேனும் காணமுடியாது. இத்தகைய சீரிய நாட்டுக்குத் தலைவன் நீ! இதற்குமேலும் நான் என்ன சொல்லவேண்டும்? (தன் பாத்திரத்தைச் சுட்டிக் காட்டி) தேவர் தலைவ, வருந்தி வந்தவரது அரும் பசியை அகற்றி, அவரது மலர்ந்த முகத்தை நான் காணுமாறு செய்வது இந்தத் தெய்வக் கடிகை. இது ஒன்றே எனக்குப் போதுமானது. நீ என்னறப் பயனை அளிக்க இருக்கும் உண்டியும், உடையும், பெண்டிரும், பிறவும் எனக்கு இன்பந் தரமாட்டா. ஆகவே, நான் அவற்றை அணுவளவேனும் விரும்பேன். நீ உன் நாடு செல்லலாம், எனக்கு நேரமாகிறது.

முதியவே: (தனிமொழி) இவனுக்கு அறவினையிலிருக்கும் மன உறுதி என்னே! கிடைக்க விருந்த பெரும் பயனையும் உதறித் தள்ளிப் பயனெதிர்பாரா நல்வினையை

இயற்றவே இவன் ஆர்வமுள்ளவனுகத் தெரிகிருன். இவனது இந்த ஆர்வமும், செயலும் மனிதர்களுக்கு வாழ்க்கைச் சட்டமென்பதில் எள்ளளவேனும் ஐயமில்லே. ஆனல், அறஞ்செய்வோர்க்கு அகந்தை பொல்லாங்கு தருவது. அதை இவனுணரவில்லே. இன்னும் சில நாட்களில் இவன் தனது அகந்தையின் பயனே அனுபவித்து அல்லலுறப் போகிருன். அப்பொழுது இவன் என் பெருமையை உணர்வான். எதற்கும் காலம் வரவேண்டுமல்லவா? எனது அவையை விட்டு வந்து நேரமாகி விட்டபடியால், இப்பொழுதே புறப்பட்டுச் செல்ல வேண்டும். சென்று வருகிறேன். (வானவழியில் செல்கிருன்.)

[ திரை விழுகிறது ]

### அருஞ்சொற்பொருள்

ஓராது - ஆராயாது, மருள் - அறியாமை மயக்கம், பரிந்து - விரும்பி, நள்இரவு - நடு இரவு, அரவம் - சத்தம், ஓசை; பரிசிலர்கள் - பரிசில் பெற்று வாழ்பவர், காலமழை - பருவமழை, அங்கம் - உறுப்பு. ஈர்கிறது - அறுக்கிறது, சேய் - குழந்தை, முட்டு இன்றி - தடங்கல் இல்லாமல், உறுதுணே - சிறந்த துணே, பற்று - ஆசை, திறத்தார் - வகையினர், கடிஞை - பிச்சைப் பாத்திரம், அகந்தை - இறுமாப்பு.

### வினுக்கள்

1. ஆபுத்திரன் கலிகாலச் செயல்களாக எவற்றைக் கருதுகிருன்?
2. மழை பெய்தலேக் குறித்து அறிந்தவர்கள் சொல்வது யாது?
3. பசியால் விளேயும் கொடுமை பற்றிப் பெரியோர் கூறுவது யாது?
4. பசியைப் போக்குவது மாந்தரது முதற் கடமையாயிற்று.- ஏன்?
5. சிந்தாதேவி யாது கூறி அமுத சுரபியை ஆபுத்திரனுக்குக் கொடுத்தாள்?
6. அமுத சுரபியின் இயல்பு பற்றிச் சிந்தாதேவி ஆபுத்திரனுக்குக் கூறியவை யாவை?
7. ஆபுத்திரன் சிந்தாதேவியை எவ்வாறு துதிக்கிருன்?
8. முதிய வேதியனுக வந்த இந்திரன் ஆபுத்திரனே நோக்கிக் கூறுயது என்ன?

9. முதிய வேதியரது உருவத் தோற்றம் யாது?

10. ஆபுத்திரன் இந்திரனை நோக்கி அவன் நாட்டையும் அங்கு வாழ்பவரையும் குறித்து இழிவு தோன்றக் கூறியவை யாவை?

11. முதிய வேதியருக்கும் ஆபுத்திரனுக்கும் நடந்த உரையாடலைச் சுருக்கி வரைக.

12. இப்பாடத்தினால் அறம் இயற்றும் முறைபற்றி நீ அறிந்தவற்றைத் தொகுத்து எழுதுக.

## இலக்கணப் பயிற்சி

1. (i) 'உனக்கு வேண்டியவற்றைக் கேள்.'—இந்த வாக்கியத்தில் **கேள்** என்பது ஏவல் வினைமுற்று அல்லவா? இதுபோல உள்ள சில ஏவல் வினைமுற்றுக்களை இப் பாடத்திலிருந்து எடுத்துக் காட்டுக.

(ii) 'உணவைப் பெற்றுப் பசி தீர்க.'—இந்த வாக்கியத்தில் **தீர்க** என்பது வியங்கோள் வினைமுற்று. இதுபோல உள்ள சில வியங்கோள் வினைமுற்றுக்களை எடுத்துக் காட்டுக.

2. ஏவல் வினைமுற்று என்பது யாது? வியங்கோள் வினைமுற்று என்பது யாது? ஏவல் வினைமுற்றுக்கும் வியங்கோள் வினைமுற்றுக்கும் உள்ள வேறுபாடுகளைக் கூறுக.

# 16. கணிதக் கலைஞர் இராமானுசனுர்

[வித்துவான், திரு. எஸ். சுந்தரம்]

தமிழ்நாடு பண்டு தொட்டே அறிவின் உறைவிட மாய் விளங்குகிறது. இத்தமிழ் நாட்டில் கோவை மாவட் டத்தைச் சேர்ந்த ஈரோட்டில் சீனிவாச ஐயங்கார் என் ருெருவர் வாழ்ந்து வந்தார். அவர்தம் அருந்தவப் புதல் வரே நம் இராமானுசனுர். அவர் பிறந்தது 1887ஆம் ஆண்டு டிசம்பர் 27ஆம் நாள் ஆகும்.

சீனிவாச ஐயங்கார் கும்பகோணத்தில் ஓர் அறுவை வாணிகரிடம் கணக்கராய் அலுவல் பார்த்தார். ஆதலால், இராமானுசரின் இளமை வாழ்க்கை கும்பகோணத் திலேயே கழிந்தது. நம் நாட்டு முறைப்படி ஐந்தாவது ஆண்டில் ஒரு திண்ணைப் பள்ளிக்கூடத்திற்கு அனுப்பப் பட்டார். திண்ணைப் பள்ளிகளில் கீழ்வாய் இலக்கம், மேல்வாய் இலக்கம், முதலிய வாய்பாடுகளும், நெல்லிலக் கம், பொன்னிலக்கம், குழிக்கணக்கு, சதுர வாய்பாடு முதலிய பலவும் கற்பிப்பதுண்டு. இத்தகைய கணக்கு களில் இராமானுசர் தம் உள்ளத்தை ஆழ்ந்து ஈடுபடுத்தி யிருந்தார். பிற்காலத்தில் உலகம் போற்றும் கணித மேதையாக விளங்குவதற்கு அவை உறுதுணையாய் நின்றன.

அவர் காலத்தில் நான்காம் வகுப்பின் இறுதியில் 'ஆரம்பப் பாடசாலைத் தேர்வு' என அரசாங்கத் தேர் வொன்று நடைபெற்று வந்தது. இராமானுசர் அத்தேர் வில் தஞ்சை மாவட்டத்திலேயே முதல்வராகத் தேறினுர். அதன் பயனுக அவருக்கு உபகாரச் சம்பளம் கிடைத் தது. அதன் உதவியால் கும்பகோணத்திலுள்ள அர சாங்கப் பள்ளியிற் சேர்ந்து கல்வி பயிலத் தொடங்கினுர். அவர் எப்பொழுதும் வானவெளியைப் பற்றியும், உலக அமைப்பைப் பற்றியும், வானுலாவும் விண்மீன்களைப் பற்றியும் எண்ணிக்கொண்டே யிருப்பார். அவர் இளஞ் சிந்தனையில் பல உண்மை ஒளிகள் தோன்றலாயின.

இராமானுசர் எட்டாம் வகுப்பில் படித்துக் கொண்டிருந்தபோது அவர் தம் கணித ஆசிரியர், 'ஓர் எண்ணை அதே எண்ணால் வகுத்தால் விடை ஒன்று என்னும் எண்ணே வரும்' என்று கூறிப் பல எடுத்துக் காட்டுக்களுடன் மாணவர்க்கு விளக்கினார். அப்பொழுது இராமானுசர் எழுந்து நின்று ஆவலோடு 'சுன்னத்தைச் சுன்னத்தால் வகுத்தால் விடை ஒன்றுதானா?' என்று வினவினார். ஆசிரியர் விடை கூற முடியாமற் திகைத்து நின்றார். கணித நூற் புலவர்களே அதற்கு விடை அன்று வரை கண்டறியவில்லை. ஆசிரியர் திகைத்ததில் வியப்பென்ன? கணித நூலின் நுட்பமான பகுதிகள் அந்த வகுப்பிலேயே அவரிடம் அரும்பின.

உயர்நிலைக் கல்வியில் நான்காம் • படிவத்திற்கு இராமானுசர் மாற்றப்பட்டார். அப்போது அவர் இல்லத்திற்கு அண்மையில் கல்லூரி மாணவன் ஒருவன் குடியிருந்தான். அவன் பி. ஏ. வகுப்பில் கணிதப் பகுதியில் சிறப்பாகப் பயிற்சி பெற்று வந்தான். இராமானுசர் அவனுடைய திரிகோண அளவை நூலின் இரண்டாம் பாகத்தை இரவல் வாங்கி வந்து எவர் உதவியுமின்றித் தாமே அதிலுள்ள கணித விதிகளைக்கற்று அறிந்துகொண்டார். பயிற்சிக் கணக்குகளை யெல்லாம் எளிதில் செய்துவிட்டார். அன்று முதல் கல்லூரி மாணவன் தனக்கு விளங்காதவைகளை அவரிடம் கேட்டுத் தெரிந்துகொண்டான்.

அவர் ஆறும் படிவத்தில் படிக்கும்போது கணிதத்தில் அவரது ஆர்வம் சிறப்புடன் வெளிப்பட்டது. மேல் வகுப்புக் கணித நூல்களை ஆராயலானார். பல புதிய கணக்குகளைத் தாமே அமைக்கத் தொடங்கிவிட்டார். சதுரக் கட்டங்களில் அமைக்கப்படும் விசித்திரக் கணக்குகள், கோண கணிதம், அட்சர கணிதம் முதலியவற்றில் தம் ஆர்வத்தைச் செலுத்திப் புதிய முறைகள் பல கண்டறியலானார். அந்த ஆண்டில் அவர் பள்ளி இறுதித் தேர்வில் கணிதத்தில் நல்ல மதிப்பெண்ணோடு வெற்றியடைந்து பரிசுகளும் பெற்றார்.

பின்னர், அவர் கும்பகோணம் அரசினர் கல்லூரியில்

சேர்ந்து படித்து வந்தார். கணித பாடத்தில் கருத்தெல்லாம் ஒன்றுபட்டதால் பிற பாடங்களை அவர் கவனித்திலர். ஆதலின், முதலாண்டுத் தேர்விலேயே அவர் தவறிவிட்டார். பலமுறை முயன்றும் வெற்றி காண இயலாமையால் கல்லூரிப் படிப்புக்கு முற்றுப்புள்ளி யிட்டு விட்டுக் கணித ஆராய்ச்சியிலேயே கருத்தைச் செலுத்தினர். அவர் எப்பொழுதும் ஒரு குறிப்புப் புத்தகத்தைக் கையில் வைத்திருப்பார். அவ்வப்போது மனத்தில் அரும்பும் புதிய கணக்கு முறைகளை யெல்லாம் குறித்துக் கொண்டே வருவார். அவர் கண்டறிந்த கணக்குகள் யாவும் அதுகாறும் யாரும் அறிந்தனவல்ல. ஆனல், அன்று உலகம் அவரை அறிந்து கொள்ளவில்லை; பாராட்டவுமில்லை.

இராமானுசரின் பெற்றோர்கள் அவரது கணிதப் பித்தைத் தெளிய வைக்க ஒரு வழி கண்டனர். அவர்கள் 1909ஆம் ஆண்டில் அவருக்குத் திருமணம் செய்து வைத்தனர். ஆனல், இராமானுசரின் கணிதப்பித்துத் தெளியவில்லை. அத்துடன் அவருக்குக் குடும்பக்கவலை வேறு பெருகிற்று. ஏதேனும் வேலை தேடவேண்டுமென்ற எண்ணத்தால் பல இடங்களுக்கும் அலைந்தார். இறுதியில் அவர் சென்னைக் கடற்கரைப் போக்குவரத்து அலுவலகத்தில் முப்பது ரூபாய் ஊதியத்தில் அமர்ந்தார். அவரை வறுமைத் துன்பம் வாட்டியது.

அதுகாலை இங்கிலாந்திலேயுள்ள கேம்பிரிட்சுப் பல்கலைக் கழகத்திலிருந்து வெளிவந்த கணித ஆராய்ச்சி நூலொன்றை இராமானுசர் துருவினர். அதில் சி. எச். ஆர்டி என்னும் கணித அறிஞர் கணித சம்பந்தமான பல ஐயங்களை அந்நூலில் வெளியிட்டிருந்தார். இராமானுசருக்கோ அவை மிக எளியனவாய்த் தோன்றின. பி. வி. சேசு அய்யரின் துணைகொண்டு சி. எச். ஆர்டி அவர்களுக்குப் பதில் எழுதினர். அதில் அவர் கொண்டுள்ள ஐயங்களுக்கு விடை பகர்ந்ததோடல்லாமல் தாம் கண்டறிந்த புதிய சில கணக்குகளையும் எழுதி யிருந்தார். அவற்றைக் கண்ட ஆர்டி துரை வியந்தார். அவரைப்

பாராட்டிப் புகழ்ந்தார். இராமானுசரின் கணக்குகளைத் தங்கள் கழக வெளியீட்டில் அச்சிடுவதாயும் உறுதி கூறினர். அப்பொழுதுதான் இராமானுசரின் பேரும் பெருமையும் எங்கும் பரவலாயின.

ஆர்டி துரையின் பாராட்டு இதழ் கண்ட இராமானுசர் மட்டற்ற மகிழ்ச்சியில் மூழ்கினர். தாம் வருந்திக் கண்டறிந்த உண்மைகளை உணரக்கூடியவர் உலகில் ஒருவரேனும் இருக்கிறர் என்று அறிந்து ஆறுதல் கொண்டார். இவர் பெருமையை அறிந்த சென்னைப் பல்கலைக் கழகம் இவருக்கு உபகார ஊதியம் ரூபாய் எழுபத்தைந்து கொடுத்து ஊக்குவித்தது.

பின்னர், ஆர்டி துரை இராமானுசரை இங்கிலாந்திற்கு அழைத்தார். இராமானுசரோ கடல் கடந்து செல்ல இணங்கவில்லை. அவர் தாயும் அதற்கு இசைவு அளிக்கவில்லை. ஆர்டி துரை அவரை எவ்விதமேனும் இங்கிலாந்திற்கு வரவழைத்து அவர் புலமையைப் பயன்படுத்திக் கொள்ளவேண்டும் என்று பல வழிகளிலும் அரிதின் முயன்று வந்தார். அவரது நண்பர்களும் அவர் இங்கிலாந்து செல்வதால் அவருக்கும், அவரால் நாட்டிற்கும், உலகிற்கும் ஏற்பட இருக்கும் பல நன்மைகளை இராமானுசருக்கு எடுத்தியம்பினர். அதுசமயம் சென்னைப் பல்கலைக் கழகம் ஆண்டு ஒன்றுக்கு 250 பவுன் உபகாரச் சம்பளமும், அவர் இங்கிலாந்து செல்வதற்குரிய பொருட் செலவும் கொடுத்துதவ முன் வந்தது. இதனல் இராமானுசர் 1914ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்கள் இங்கிலாந்திற்குப் பயணமானர்.

இராமானுசர் இங்கிலாந்தை அடைந்ததும் ஆர்டி துரை அவரைக் கேம்பிரிட்சு நகரிலுள்ள டிரினிடி கல்லூரியில் சேர்த்துக் கொண்டார். அங்கே அவரும், லிட்டில்உட் என்ற மற்ருெரு கணிதநூற் புலவரும் இராமானுசருக்கு உறுதுணையாயிருந்தனர். மூவரும் ஆய்ந்து பல கணித இயல் ஆராய்ச்சிக் கட்டுரைகளை அவ்வப்போது வெளியிட்டு வந்தனர். கேம்பிரிட்சுப் பல்கலைக் கழகத்தார் அவருக்கு அறுபது பவுன் உபகாரச் சம்பளம் உதவினர்.

அவரது ஆராய்ச்சியை ஆர்டி துரை, நியூமன் துரை முதலிய பல மேனுட்டறிஞர்கள் போற்றிப் புகழ்ந்தனர்.

1918இல் இராயல் சொசைடி என்னும் அரசாங்க ஆராய்ச்சிக் குழுவினர் இராமானுசரைத் தம் குழுவின ருள் ஒருவராகத் தேர்ந்தெடுத்தனர். இந்தியருள் முதன் முதலில் இப்பதவியைப் பெற்றவர் இவரே. பின்னர் அவர் டிரினிடி கல்லூரிக் குழுவினருள் ஒருவராகவும் தெரிந்தெடுக்கப் பெற்ருர். அக்குழுவினர் அவருக்கு ஆண்டொன்றுக்கு 250 பவுன் கொடுத்துதவினர். தாம் பெற்ற பதவிக்கும், உதவிக்கும் நன்றிகாட்டும் முறையில் முன்னிலும் பன்மடங்கு கணித ஆராய்ச்சினே முனேந்து புரிந்துவந்தார். அவரது அறிவுமலர் விரிந்து உலகெலாம் மணம் கமழ்ந்தது. அவரது புகழ்கண்ட சென்னேப் பல் கலேக் கழகத்தினர் அவருக்கு மேலும் மேலும் பல உதவி கள் புரிய முன்வந்தனர்.

இராமானுசர் இளமையில் பட்ட வறுமைத் துன்பத் தாலோ, பிற காரணங்களாலோ காசநோய் அவரைப் பற்றியது. இங்கிலாந்தில் அவருக்கு நல்ல முறையில் மருத்துவம் செய்யப்பட்டது. ஆயினும் நோய் நீங்கிற் றிலது. அவரை இந்தியாவுக்கு அனுப்புதலே நலமென மருத்துவர் முடிவு செய்தனர். 1919ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்கள் அவர் இந்தியா வந்து சேர்ந்தார்.

சென்னேயில் சேத்துப்பட்டு என்னும் இடத்தில் உள்ள ஒரு வீட்டில் அவர் தங்கியிருந்தார். சில செல்வர் கள் முயற்சியால் சிறந்த மருத்துவ முறைகள் கையாளப் பட்டன. எனினும், எதிர்பார்த்த பயன் கிட்டவில்லே. நோய்வாய்ப்பட்டிருந்த அத்துன்ப நிலேயிலும் கணித ஆராய்ச்சியே அவரை இன்ப நிலேயோடு இணேத்தது. அப்போது அவர் தாம் புதியனவாகக் கண்டறிந்த கணித உண்மைகள் பலவற்றை ஆர்டி துரை மகனுருக்கு எழுதி அனுப்பினுர். அவர் 1920ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 26ஆம் நாள் இறைவன் திருவடி நிழலே எய்தினுர். மண் ணுலகில் புகழ் நிறுவி மறைந்தார் அறிஞர்.

அவருடைய கட்டுரைகள் நூல் வடிவில் வெளிவந்

துள்ளன. கையெழுத்துப் பிரதிகள் பல இங்கிலாந்திலும், சென்னைப் பல்கலைக் கழக நூல் நிலையத்திலும் பாது காக்கப்பட்டு வருகின்றன. அவரது கணித ஆராய்ச்சி கள் பல எவருக்கும் விளங்கவில்லை. தமிழ் இளைஞர்கள் அவருக்குச் செய்ய வேண்டும் கடமை ஒன்றுளது. அவரது ஆராய்ச்சிகளை உலகமறியுமாறு செய்யத் தகுந்த கணித அறிவினை அவர்கள் பெற்றுத் துலங்குவது அக் கடமையாகும். நம்மிடையே பல இராமானுசர்கள் தோன்றவேண்டும். அவர் ஆய்ந்து கண்ட உண்மைகளை உலகுக்கு விளக்கவேண்டும். அவர் முடிக்காது விட்டுச் சென்ற பகுதியை முடித்து உலகில் வெற்றி முடிசூடித் திகழவேண்டும்.

### அருஞ்சொற்பொருள்

அறுவை - துணி, கீழ்வாய் இலக்கம் - பின்ன எண்கள், குழிக் கணக்கு - நில அளவை, மேதை - அறிஞர், உறுதுணை - சிறந்த துணை, அரும்பின - தோன்றின, அண்மையில் பக்கத்தில், குழுவினர் - கூட்டத் தினர், நிறுவி - நிலைநிறுத்தி, துலங்குவது - விளங்குவது.

### வினாக்கள்

1. இராமானுசர் பிற்காலத்தில் உலகம் போற்றும் கணித மேதை யாக விளங்குவதற்கு உறுதுணையாயிருந்தன யாவை?
2. இராமானுசருக்கு உபகாரச் சம்பளம் கிடைத்தது எவ்வாறு?
3. இராமானுசருக்கு இளமையிலேயே கணிதத்தில் நுட்ப அறிவு இருந்தது என்பது எதனால் புலனாகிறது?
4. இராமானுசர் கல்லூரியில் ஏன் தொடர்ந்து படிக்கவில்லை?
5. இராமானுசர் இங்கிலாந்து செல்ல நேர்ந்த நிகழ்ச்சியினை விளக்குக.
6. இராமானுசர் இங்கிலாந்தில் பெற்ற சிறப்புகளைத் தெரிவிக்க.
7. இராமானுசர் இந்தியா திரும்பியது ஏன்?

### இலக்கணப் பயிற்சி

'காசநோய் அவரைப் பற்றியது.'—இந்த வாக்கியத்தைக் 'காச நோயால் அவர் பற்றப்பட்டார்' என மாற்றலாம். முதலில் கொடுக்கப் பட்டது செய்வினை வாக்கியம்; பின்னால் மாற்றப்பட்டது செயப்பாட்டு வினை வாக்கியம். இதைப்போல் கீழ்க் கொடுக்கப்பட்ட செய்வினை வாக்கியங்களைச் செயப்பாட்டுவினை வாக்கியங்களாக மாற்றுக:

(i) இராமானுசர் கும்பகோணத்திலுள்ள அரசாங்கப் பள்ளியிற் சேர்ந்து கல்வி பயின்றார்.

(ii) அவர் பயிற்சிக் கணக்குகளை எல்லாம் எளிதில் செய்தார்.

## 17. காவிரிப் பூம் பட்டினம்

[வித்துவான், திரு. எ. எஸ். கோவிந்தசாமி]

சோழ வளநாடு காவிரி பாய்வதால் கன்னி நாடெனவும், பொன்னி நாடெனவும், புலவர்களால் புனைந்துரைக்கப்பட்ட பெருமையை உடையது. அந்நாட்டையாண்ட சோழர்கள் பல்வேறு காலங்களில் வெவ்வேறு நகரங்களைத் தம் தலைநகரங்களாகக் கொண்டு நீதி வழுவாது ஆண்டுவந்தனர். அவர்களுக்குத் தலைநகரங்களாக அமைந்திருந்தவை காவிரிப்பூம்பட்டினம், உறையூர், திருவாரூர், காஞ்சி முதலியனவாம். இந்நகரங்களுக்குள் பழமையானதும், பாவலர் பலரால் பாராட்டப் பெற்றதும், பேரும் புகழும் பெற்றுப் பொலிந்ததும் காவிரிப்பூம்பட்டினமேயாகும். இவ்வணி நகர் காவிரி கடலொடு கலக்குமிடத்தில் அமைந்திருந்தமையால் காவிரிப்பூம்பட்டினம் என வழங்கலாயிற்று. பட்டினம் என்பது கடற்கரையை அடுத்த பேரூர்களின் பெயர். எனினும், அது சிறப்பாக அக்காலத்தில் காவிரிப்பூம் பட்டினத்தையே உணர்த்தியது.

மேலும், இந்நகர் பகைவர்கள் புகுதற்கரிய காவலைப் பெற்றிருந்தமையால் புகார் எனவும், பொலிவுடன் விளங்கியமையால் பூம்புகாரெனவும் புகழ்ந்து உரைக்கப்பட்டது. சம்பூத்தீவின் காவற் றெய்வமாகிய சம்பு என்பவள் இப்பகுதியிற் றங்கித் தவம் செய்தமை கருதி, இது சம்பாபதி எனவும் பெயர் பெற்றது. இந்நகரை முன்னொரு நாளில் ககந்தன் என்பவன் புரந்து வந்தான். அவன் இதனை ஆண்டு வந்தமைக்கு அறிகுறியாகக் காகந்தி எனவும் இது பெயர் பெற்று வழங்கலாயிற்று.

இவ்வாறு பல்வேறு பெயர்களால் வழங்கி வரப்பட்ட இப்பதி கரிகாற் சோழன் காலத்தில் அடைந்திருந்த பெருமை அளவிட்டுக் கூறுவதற்கு அரியது. பலவகைக் கைத்தொழில்களும் இங்குப் பாங்குற நடைபெற்றன. வெளிநாட்டு வாணிபத்திற்கும் இது பெயர் பெற்ற துறை

முகப் பட்டினமாய் விளங்கியது. அயல் நாட்டிலிருந்து நம் நாட்டோடு வியாபாரம் செய்ய வந்த யவனர், சாவகர், சோனகர் முதலான பிற நாட்டாரும் இந்நகரில் வந்து குடியேறி இருந்தனர். இவர்களேயன்றிப் புலவர்களும், கலைவிற்பனர்களும், கைத்தொழில் நிபுணர்களும் பல் வேறு இடங்களிலிருந்து இங்கு வந்து இன்ப வாழ்வெய்தி நின்றனர்.

இங்ஙனம், அறிவும் நாகரிகமும் முதிர்ந்த மக்களுக்கு உறைவிடமாய் இருந்த அப்பட்டினம் சீரிய முறையில் அமைந்து, காண்போர் கண்ணையும், கருத்தையும் கவரக் கூடிய பெருவனப்புடையதா யிருந்தது. தெருக்கள் ஒழுங்காக அமைக்கப்பட்டுச் சிற்ப சித்திரங்களாற் பொலியும் பல மாளிகைகளை யுடையனவாய்க் காட்சி யளித்தன. இத்தகைய அப்பட்டினம் அகநகர், புறநகர் என இரு பிரிவுகளை உடையதாக இருந்தது. அகநகர் பட்டினப் பாக்கம் எனவும், புறநகர் மருவூர்ப்பாக்கம் எனவும் வழங்கப்பெற்றன.

அரசனுக்கும் அரசியலுக்கும் தொடர்புடைய மக்கள் பட்டினப்பாக்கத்தில் வதிந்தனர். ஒழுங்கும் அழகும் அமைந்த பல தெருக்களில் மக்கள் பலரும் சிறப்புடன் வாழ்ந்தது ஒரு நியதிக்குட்பட்டே இருந்தது. இன் னின்னர் இன்னின்ன தெருக்களில் வசிக்க வேண்டு மெனக் கட்டுப்பாடு செய்யப்பட்டிருந்தது போல மக்கள் தத்தம் குலம், தொழில், அறிவு, உத்தியோகம், மதிப்பு இவைகளுக்குத் தக்கபடி பல்வேறு தெருக்களில் வசித் தனர். அப்பட்டினப் பாக்கத்தில் அரச வீதியும், தேரோடு வீதியும், பெரிய கடைத்தெருக்களும், வணிகர், வேதியர், உழவர், ஆயுள் வேதர், சோதிடர் முதலியோர் வசித்த தெருக்களும், சூதர், மாகதர், வைதாளிகர், நாழிகைக் கணக்கர் முதலியோர் இருப்பிடங்களும், பாடகர், கூத்தர், விகட கவிகள், பறைகொட்டுவோர் ஆகிய இவர்கள் தங்கி இருந்த மறுகுகளும், தனித்தனியாக மிளிர்ந்தன. இவ்விதமான பல தெருக்களுக்கு மிடையே நகரின் நடு வில் அரசன் அரண்மனை இலங்கியது. குதிரை வீரர்,

யானைப்பாகர், தேர்ப்பாகர், மறவர் ஆகியோர் வசித்த தெருக்கள் அவ்வரண்மனையைச் சூழ்ந்து அழகு செய்தன.

அப்பட்டினப் பாக்கத்தில் சிவன், முருகன், பலதேவன், திருமால் முதலிய தெய்வங்களின் கோவில்களுக்குக் குறைவில்லை. அக்கோவில்களெல்லாம் சிற்ப சித்திரங்களால் அழகு செய்யப்பட்டிருந்தன. இத்தகைய கோவில்களே யன்றி அங்குப் பற்பல சமயத்தாரும் தங்கி மதநூல்களைக் கற்கவும், நூலாராய்ச்சி செய்யவும் பல மடங்கள் கட்டப்பட்டிருந்தன. பௌத்த மடங்களும் சமணப் பள்ளிகளும் அந்நகரில் அநேகமிருந்தன. இவை யன்றியும், வெள்ளிடை மன்றம், இலஞ்சி மன்றம், நெடுங்கல் நின்ற மன்றம், பூத மன்றம், பாவை மன்றம் என்னும் ஐவகை மன்றங்களும், உய்யான வனம், சம்பாதிவனம், கவேரவனம், உபவனம் என்ற பெயர்களை யுடைய பல பூஞ்சோலைகளும் அங்குப் பொலிவுடன் விளங்கின.

மருவூர்ப் பாக்கம் கடலோரத்தில் அமைந்திருந்தது. அது கடல் தரும் வளங்கள் மூட்டை மூட்டையாகக் குவிந்து கிடக்கும் பல மாடங்கள் அமைந்த வீதிகள் பலவற்றை யுடையதாக விருந்தது. மக்கள் இரவில் இன்பமாகப் பொழுது போக்குதற்குரிய நிலாமுற்றங்களையும், பெரிய பெரிய பண்டகசாலைகளையும் பெற்றிருந்தது. அங்கு வாசனைப் பொருள்களையும், நறும் புகைச் சரக்குகளையும் வீதி வீதியாக எடுத்துச் சென்று விற்பவர் வசிக்கும் தெருக்கள் ஒருபுறமும், முத்து, மணி, பொன் முதலிய விலையுயர்ந்த பொருள்களும், நெல், வரகு முதலான தானியங்களும் விற்கப்படும் வீதிகள் ஒருபுறமும் காட்சி தந்தன. பிட்டு வாணியர், அப்பம் சுடுவோர், வெற்றிலை விற்போர், ஏலம், இலவங்கம் முதலான வாசனைப் பொருள்கள் விற்போர் முதலியவர்கள் தத்தம் பொருள்களை எடுத்துக் கொண்டு கடை வீதி நெடுகச் சுற்றி விற்று வருவர். இவர்களாலும், பல வகைப் பொருள்களையும் விலைக்கு வாங்க வருபவர்களா

லும் கடைவீதிகள் மக்கட் கூட்டம் உடையவைகளாக இருக்கும். கடைவீதிகளுக்குச் சென்றுல் வெற்றிலைக் கடையிலிருந்து நவமணிக் கடை வரையில் எல்லாக் கடைகளிலும் பொருள்கள் குவியல் குவியலாகத்தான் குவிக்கப்பட்டிருக்குமாம் !

இத்தன்மையான மருவூர்ப்பாக்கத்தின் கடற்கரை வெண்மணல் பரந்த வெளியிடம். இங்கேதான் அயல் நாட்டினர் வசிக்கும் சேரிகள் வரிசை வரிசையாக இருந்தன. தெருக்களில் உள்நாட்டுப் பொருள்களும், வெளிநாட்டுப் பொருள்களும் மலைபோலக் குவித்து வைக்கப்பட்டிருக்கும். அப்பொருள்களின் விலை வாங்குவோர்க்குத் தெரிவதற்காகப் பலநிறக் கொடிகள் ஆங்காங்கு உயர்த்தப்பட்டிருக்கும். அக்கொடிகளின் நிறத்தைக் கொண்டு 'இன்னபொருள் இன்ன விலையுடைய' தென்று அறிந்து மக்கள் அப்பொருளை வாங்குவர்.

அங்குள்ள துறைமுகத்தில் எகிப்து, சீனம் முதலான அயல் நாடுகளிலிருந்து வந்த மரக்கலங்கள் வரிசை வரிசையாக நிற்கும். அயல்நாட்டுப் பொருள்கள் இறக்குமதியாவதையும், உள்நாட்டுப் பொருள்கள் ஏற்றுமதியாவதையும் கவனிக்க அலுவலர்கள் நியமிக்கப்பட்டிருந்தனர். இறக்குமதியாகும் பொருள்களையும், ஏற்றுமதி செய்யும் பொருள்களையும் நிறையிட்டு அளந்து முத்திரை பொறித்து அந்தப் பொருள்களுக்குரிய சுங்கத்தைப் பெற அத்துறைமுகத்தருகே ஒரு சுங்கச் சாவடியும் நிறுவப்பட்டிருந்தது. அத்துடன் கடலில் செல்லும் மரக்கலங்கள் இரவு நேரங்களில் துறையை அறிந்து கரை சேருவதற்காகக் கலங்கரை விளக்கமொன்றும் அங்கு அமைந்திருந்தது. இக்கலங்கரை விளக்கத்தைத் தவிர வேறு சில விடிவிளக்குகளும் அவ்விடத்தில் எரிந்துகொண்டிருக்குமாம்.

இங்கு இயம்பப்பெற்ற மருவூர்ப் பாக்கத்திற்கும் பட்டினப் பாக்கத்திற்கு மிடையே ஒரு வெளியிடம் இருந்தது. அது அவ்விருவூர்கட்கும் பொதுவானது. அங்கு மரங்கள் அடர்ந்திருந்தன. அங்குத்தான் நாளங்காடி

கூடுவது வழக்கம். வணிகர்கள் அம்மரங்களின் நிழலில் தத்தம் கடைகளை அன்றுடம் அமைத்துக்கொண்டு வாணிபம் செய்வர். வியாபாரம் நடக்கும்போது அவ்விடத்தில் ஒரே இரைச்சலாக இருக்கும். இந்த நாளங்காடியில் அச்சந் தரும் ஒருபெரும் பூதத்தின் பலிபீடமும் காணப்பட்டது. அப்பூதம் சோழர் குலத்தோன்றலாகிய முசுகுந்தனுக்கு வந்துற்ற இடரை நீக்க, இந்திரனல் அனுப்பப்பட்டு, அந்நகரைக் காவல் புரிந்துவந்த தெய்வமாகும். அது நாளங்காடிப் பூதம் எனப்படும்.

இவ்விதம் சிறந்த அமைப்புக்களைப் பெற்றிருந்த அக்காவிரிப்பூம்பட்டனத்தில் ஆண்டுக்கொருமுறை தேவர் கோனுக்குத் திருவிழாக் கொண்டாடப்படுவது வழக்கமாயிருந்தது. இவ்விழா இந்திர விழா எனப்படும். அது இருபத்தெட்டு நாட்கள் நடைபெறும். அந்நாட்களில் அந்த நகர் அமராவதியை ஒப்ப அழகு செய்யப்பட்டுப் பேரழகுடையதாக இலங்கும்.

பல்வேறு சாதியினரும், மதத்தினரும் அவ்விழாவின் பொழுது ஒன்றுபட்டு அதனைக் கொண்டாடுவர். அந்நகரின் பேரெழிலையும், விழாக் கொண்டாடும் சிறப்பையும் காண, அக்காலத்தில் தேவர்களும் தமது உருக்கரந்து அங்கு வருவார்களாம். அவ்விழா நிகழ்த்தப்பெற்ற சிறப்பு எவ்வளவு வியக்கத் தக்கதாக விருந்தது, பாருங்கள்.

இற்றைக்குச் சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு அப்பட்டினம் தமிழரின் பண்பாட்டிற்கும், நாகரிகச் சிறப்பிற்கும் ஓர் எடுத்துக்காட்டாக இலங்கியது. பின்னர் அந்நகர், அந்தோ! கடலாற் கொள்ளப்பட்டு மறைந்தது. எனினும், அந்நகரின் சிறப்பியல்களை இன்று பட்டினப்பாலை, சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய இலக்கியங்களால் நாம் உணர்கிறோம். அதன் பெருஞ் சிறப்பையும், தெய்வத்தன்மையையும் கண்ட இளங்கோவடிகள், ''பூம்புகார் போற்றுதும் பூம்புகார் போற்றுதும்'' என்று அன்று போற்றி இன்று நம்மையும் போற்றச் செய்கின்றார்.

### அருஞ்சொற்பொருள்

கலைவிற்பனர் - கலைகளில் சிறந்த தேர்ச்சி பெற்றவர், வதிந்தனர் - வசித்தனர், நியதி - ஒழுங்கு, கட்டுப்பாடு, வேதியர் - வேதம் ஓதுபவர், ஆயுள் வேதர் - மருத்துவர், சூதர் - புகழ்வோர், பாணர், மாகதர் - இருந்து ஏத்துவோர், மறுகு - தெரு, சுங்கம் - வரி, நாளங்காடி - பகற் கடை, பேரெழில் - மிகுந்த அழகு.

### வினாக்கள்

1. பழங்காலச் சோழர்களின் தலைநகரங்கள் யாவை ?

2. காவிரிப்பூம்பட்டினம் வேறு எவ்வெப் பெயர்களால் வழங்கப் பட்டது ? அப்பெயர்க் காரணத்தைப் புலப்படுத்துக.

3. பட்டினப்பாக்கத்தைப்பற்றி இருபது வரிகள் எழுதுக.

4. பட்டினப்பாக்கத்திலிருந்த ஐவகை மன்றங்கள், பூஞ்சோலை கள் யாவை ?

5. மருவூர்ப்பாக்கம் அமைந்திருந்த சிறப்பை விளக்குக.

6. சுங்கச்சாவடி, நாளங்காடி—இவற்றைப்பற்றிச் சிறு குறிப்பு வரைக.

7. மருவூர்ப்பாக்கத்தில் வாணிகம் நடந்த வகையைத் தெரிவிக்க.

8. இந்திரவிழாவின் சிறப்பைப் பத்து வாக்கியங்களில் விளக்குக.

9. நாளங்காடிப் பூதத்தைப்பற்றி நீங்கள் அறிவன யாவை ?

10. காவிரிப்பூம்பட்டினத்தின் சிறப்பியல்களை அறிவிக்கும் தமிழ் நூல்கள் எவை ?

### இலக்கணப் பயிற்சி

(1) தமிழில், ‘இல்வாய்’ என்பது ‘வாயில்’ எனவும்—‘இல்முன்’ என்பது ‘முன்றில்’ எனவும் சொற்கள் முன் பின்னாக மாறி ஒரு தொடராக வருதல் உண்டு. இதனை ‘இலக்கணப் போலி’ என்பர்.

இவ்வாறு இப்பாடத்தில் வந்த சில இலக்கணப் போலிகளை எடுத்துக் காட்டுக.

(2) இலங்கியது, போற்றுதும், வருவர், செய்கின்றார்—இவற்றி னுக்குப் பகுபத உறுப்பிலக்கணம் தருக.



# TAMIL MANI THIRATTU

## STANDARD VIII

[ Prepared as per New Syllabus, 1958 ]

BY

Vidwan, M. GOVINDASAMY THEVAR

AND

Vidwan, P. N. SUBBARAMA SARMA

—o—

**T. G. GOPAUL PILLAI**

PUBLISHERS

**TEPPAKULAM**
**TIRUCHIRAPALLI-2**



**2/27, BROADWAY**
**G. T. MADRAS-1**



[*Price: Rs. 2*